# குளச்சல் போர்

## கட்டுக் கதைகளும் கற்பனைக் குதிரைகளும்



திருத்தமிழ்த்தேவனார்

# குளச்சல் போர்

## கட்டுக் கதைகளும் கற்பனைக் குதிரைகளும்

திருத்தமிழ்த்தேவனார்



**குளச்சல் போர் - கட்டுக் கதைகளும் கற்பனைக் குதிரைகளும்**

♦ *நூலாசிரியர் : திருத்தமிழ்த்தேவனார் எம்.ஏ., எம்.எல்., அறை எண் 19, நாகர்கோவில் வழக்கறிஞர் சங்கக் கட்டிடம், மாவட்ட நீதிமன்ற வளாகம், நாகர்கோவில் - 629 001. அலைபேசி : 94 871 871 93. மின்னஞ்சல் :* thiruththamizhththevanaar@gmail.com. ♦ *பதிப்பகம் : நெய்தல்வெளி, 153சி, ஈத்தாமொழி சாலை, நாகர்கோவில், அலைபேசி : 93 675 100 43.* ♦ *முதல் பதிப்பு : 31 ஆகத்து 2018* ♦ *பிரதிகள் : 500* ♦ *அச்சாக்கம் : ரியல் இம்பேக்ட் சொலியூசன், சென்னை.* ♦ *வெளியீடு : தெற்கு எழுத்தாளர் இயக்கம், நாகர்கோவில்.* ♦ *விலை : ரூ 150/-*

## நூலுக்குள் நுழைவதற்கு முன்பாக...

ஒவ்வொரு பெயரின் உச்சரிப்பும் இன்னொரு மொழியினரால் மாற்றி உச்சரிக்கக்கூடும். தூத்துக்குடி ஊரானது தூத்துக்குரின் என்பதுபோல்... Eustache என்கிற பெயரை 'யுசுடாச்' என சிலர் எழுதுகிறார்கள். இவருடைய பெயரை தமிழில் இன்னும் சிலர், 'எசுதாக்கியூசு' என எழுதுகிறார்கள். மீனவர்கள் மத்தியில் எசுதாக்கி, எசுதாக்கி பாவிலு, எசுதாக்கி கிளமென்ட், பீட்டர் எசுதாக்கி, கேத்தரின் எசுதாக்கி, மேரி எசுதாக்கி, செபமாலை எசுதாக்கி போன்ற பெயர்கள் அன்றைய கால கடத்தில் பிரபலமாக இருந்தவை. de Lannoy என்கிற பெயரை 'டிலனாய்' என சிலர் எழுதுகிறார்கள். இன்னும் சிலர், 'டிலெனாய்' என எழுதுகிறார்கள். இருப்பினும், 'டி லெனாய்' என பிரித்து அழைப்பதே பொருத்தமானது. இதில் கருத்து மாறுபாடுகள் இருக்கலாம்.

எசுதாக்கி டி லெனாய் இன்று பிரபலமாகப் பேசப்படுகிறார். அவர் அவ்வாறு பேசப்படுவதற்குக் காரணம் என்னவென்றால், திருவிதாங்கூரின் மன்னர் மார்த்தாண்ட வர்மாவுக்கு அவர் பல வெற்றிகளை ஈட்டிக் கொடுத்துள்ளார். காயங்குளம், கொல்லம், அம்பலப்புழா, தெக்கும்கூர், வடக்கும்கூர் போன்றப் போர்கள் அதற்கு சிறந்த உதாரணம். அவர், மிகச் சிறந்த போர் வீரராக, தலைசிறந்த தளபதியாக, சிறந்த கட்டிடக் கலைஞராக மற்றும் மன்னருக்கு மிகுந்த விசுவாசியாக இருந்துள்ளார்.

அப்படிப்பட்ட அந்த மாவீரர் எசுதாக்கி டி லெனாயை குளச்சலில் வைத்து எனது சாதியை சார்ந்தவர் கைது செய்து இழுத்து வந்தார் என்கிற பெருமையை ஒவ்வொரு சாதியினரும் கதைகள் மூலம் நிலைநாட்ட விரும்புகின்றனர்; முயலுகின்றனர். தேவசகாயம் பிள்ளைக்கு உரோமன் கத்தோலிக்கத் தலைமைப் பீடம் புனிதர் பட்டம் அளித்திடவும் இப்படிப்பட்ட கதைகள் பாதிரியார்களுக்கும் தேவைப்படுகின்றன.

எசுதாக்கி டி லெனாய்க்கு ஒரு பெண் குழந்தை உண்டு. அவளை தன்னுடைய சாதியில்தான் திருமணம் செய்து கொடுத்தார்கள் என்கிற ஒரு பேராசையும் சாதி உணர்வாளர்களிடம் இருந்து வெளிப்படுகிறது.

குளச்சல் போர் வெற்றியை நினைவுகூரும் வகையில் திருவிதாங்கூர் அரசானது குளச்சல் கடற்கரையில் 1941-ஆம் ஆண்டு போர் வெற்றித்தூண் ஒன்றினை நிறுவியது. அதனை இந்திய இராணுவத்தின் மெட்ராசு ரெசிமெண்ட் படைவீரர்கள் ஆண்டுதோறும் குளச்சல் வெற்றித் தூண் முன்பாக வணக்கம் செலுத்தி வருகிறார்கள். இதன்மூலம் குளச்சல் போர், ஆண்டுதோறும் நினைவுபடுத்தப் படுகிறது. இதில் தங்கள் சாதியினரின் பங்கினை முன்னிலைப்படுத்த சாதி பிரியர்கள் பந்தியில் முந்திவர முயற்சிக்கிறார்கள்.

டி லெனாயை கைது செய்தவர் முக்குவர், டி லெனாயை கைது செய்தவர் தேவசகாயம் பிள்ளை, டி லெனாயை கைது செய்தவர் அனந்தபத்மநாபன் நாடார், டி லெனாயை கைது செய்தவர் குமார உதய மார்த்தாண்டன் நாடார், டி லெனாயை கைது செய்தவர் பொன்பாண்டித் தேவர், டி லெனாயை கைது செய்தவர் மார்த்தாண்ட வர்மா போன்ற செய்திகள் நூல்களாக வந்து ஆச்சரியப்பட வைக்கின்றன. இப்படிப்பட்ட முரண்பாடுகள் குமரி மாவட்ட எழுத்தாளர்களை, 'பொய்யர்கள்' என உறுதி செய்கிறது.

குளச்சல் போர் நடைபெற்று 277 வருடங்கள் ஆகிவிட்டன. இந்நிலையில் மார்க் டி லெனாய் எழுதிய 'தி குலசேகரப் பெருமாள் ஆப் திருவிதாங்கூர்' என்கிற நூலானது ஆவணங்களோடு வலம் வருவதால் நடுநிலையாளர்கள் பலர் ஏற்கனவே ஏறிய பேருந்துகளை நிறுத்தி வழியில் இறங்கிவிட்டார்கள். இன்னும் சிலர், தங்கள் கைவசம் இருக்கிற சாதி கட்டுகளோடு தொடர்ந்து பயணிக்கிறார்கள். அவர்கள் பயணம் நியாயமானதாக இருக்குமா என்பதனை வாசகர்களுக்கு அறியத் தருவதே இந்நூலின் நோக்கம்.

திருத்தமிழ்த்தேவனார்,
தெற்கு எழுத்தாளர் இயக்கம்,
நாகர்கோவில்.

**உள்ளே...**

1

## டி லெனாயை கைது செய்தவர் முக்குவர்!

பள்ளம்துறை வறீதையா கான்சுதந்தினால் தொகுக்கப்பட்டு திசம்பர் 2010-இல் வெளியான நூல், "முக்குவர் : வரலாறு, வாழ்வியல், எதிர்காலம்". இந்நூலில், "முக்குவர்கள் பங்கேற்ற குளச்சல் போரின் 269-ஆவது நினைவு தினத்தை முன்னிட்டு தமிழ்நாடு புதுவை கடற்கரைப் படைப்பாளிகளும் கலைஞர்களும், அகில இந்திய இலத்தின் கத்தோலிக்க இணையமும், என்துறை என்கிற அமெரிக்காவில் உழைக்கும் தூத்தூர் மண்டல நண்பர்களும் இணைந்து, 'முக்குவர் : வரலாறு, வாழ்வியல், எதிர்காலம்' என்னும் தலைப்பில் கருத்தரங்கம் நிகழ்த்தியதாக, 'கருத்தரங்கு அறிமுகம்' என்கிற பெயரில் ஒரு உரையைத் தந்துள்ளார் வறீதையா கான்சுதந்தின்.

இந்நூலில், வேதசகாயகுமார், பீட்டர் பிரான்சிசு, வறீதையா கான்சுதந்தின், அல்பேரிசு, மெல்வின் வினோத், பங்கிரேசியசு, சூசைமிக்கேல், ரைமண்ட், ஐசக் ஆகியோரின் கட்டுரைகள் வெவ்வேறு தலைப்புகளில் இடம்பெற்றுள்ளன. இருப்பினும், மெல்வின் வினோத் எழுதிய, "குளச்சல் போரும் முக்குவரும்" என்கிற கட்டுரைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வகையில் நூலின் அட்டையில் குளச்சல் போர் நினைவுத் தூண் படத்தை அழகுற வரைந்திருக்கிறார்கள்.

"கி.பி. 1741-இல் டச்சுப் படைக்கும், திருவிதாங்கூர் படைக்கும் இடையில் நிகழ்ந்த, 'குளச்சல் போரிலும்', அதன்பின்னர் 1748-இல் நிகழ்ந்த அம்பலப்புழா போரிலும் பரவர் மற்றும் கச்டோடாக்களுடன் பிள்ளைத்தோப்பு முதல் விழிஞ்ஞம் வரையுள்ள கடற்கரையில் இருந்து முக்குவ வீரர்கள் பங்கேற்றதாய் வரலாற்றுப் பதிவுகள் காணக்கிடக்கின்றன" என்கிறார் பேராசிரியர் வறீதையா கான்சுதந்தின். அது எந்த ஏட்டில் அல்லது ஆவணத்தில் காணக்கிடக்கின்றன என்கிற அடிக்குறிப்புகள் எதுவும் அந்நூலில் இல்லை. அது அவருக்கு மட்டுமே வெளிச்சம். இப்படித்தான் சில எழுத்தாளர்கள், அவைகள் வரலாற்று பதிவுகளில் காணக்கிடக்கின்றன என நகர்ந்து விடுகிறார்கள்.

இவ்வாறாக வறீதையா கான்சுதந்தின் மாதிரி மொட்டை கடிதாசு எழுதும் வரலாற்று ஆசிரியர்கள் அதிகமாக குமரி மாவட்டத்தில் வலம் வருகிறார்கள்.

"குளச்சல் போர் குறித்து, மெல்வின் வினோத் வழங்கிய உரைவீச்சு அரங்கை உசுப்பியது" என்கிறார் வறீதையா கான்சுதந்தின். யாராவது ஒருவர் தனது சாதியைப் பற்றி பெருமையாகப் பேசினால், அதுவும் வரலாற்று ரீதியாகப் பேசினால் சாதி உணர்வாளர்களுக்குத் தலைகால் புரியாது. அப்படித்தான் அந்த அரங்கும் அன்றைக்குக் கைதட்டி ஆர்ப்பரித்தது. அந்த வகையில் அவரின் உரைவீச்சானது வறீதையா கான்சுதந்தினை உசுப்பியத்தில் ஆச்சிரியப்படுவதற்கு ஒன்றுமில்லை.

"முக்குவர்கள், பெருவரலாற்றின் உரிமையாளர்கள். நாட்டை ஆண்ட பாண்டிய மன்னர் பரம்பரையைச் சார்ந்தவர்கள்" என்கிறார் மெல்வின் வினோத். தனது சாதி வீரர்கள் பலசாலிகள்; போர் வீரர்கள் எனச் சொல்லும்போதும், நாங்கள் அரச பரம்பரையைச் சார்ந்தவர்கள் என்று சொல்லும்போதும் உற்சாகம் கரைபுரண்டு ஓடத்தான் செய்யும். ஒவ்வொரு மனிதர்களுக்கும் சாதிப் பாசம் இருக்கிறது. இலக்கியவாதிகள் பெரும்பாலானோர் சாதி ரீதியாகவே வரலாற்றைப் பதிவு செய்யவே துடிக்கின்றனர்.

"இந்த நாட்டுக்காகப் போரில் இறங்கி, பெரும் தியாகம் செய்த முக்குவர் சமூகம் வரலாற்றுப் புறக்கணிப்புக்கு உள்ளாகியிருக்கிறது". மெல்வின் வினோத்தின் இந்த ஆதங்கம் நியாயமானதுதான். வரலாற்றை எழுதுகிறவர்கள், எல்லா சாதியினருக்கும் சரியாகப் பாகப் பிரிவினை செய்து, சமபங்கு கொடுத்து எழுதியிருந்தால் இப்படிப்பட்ட சிக்கல்கள் வருவதற்கு வாய்ப்புகள் இருந்திருக்காது.

'குளச்சல் போர்' குறித்து திருவனந்தபுரத்தைச் சார்ந்த மெல்வின் வினோத் 2008-ஆம் ஆண்டு சின்னத்துறை பள்ளிக்கூடத்தில் வைத்து ஒரு மாலைப்பொழுதில் மலையாளத்தில் உரையாற்றினார். அக்கூட்டத்திற்கு திருவனந்தபுரம், நீரோடி, மார்த்தாண்டன்துறை, வள்ளவிளை, இரவிபுத்தன்துறை, சின்னத்துறை, தூத்தூர், இரையுமன்துறை ஆகிய ஊர்களிலிருந்து பலர் வந்திருந்தனர். அக்கூட்டத்திற்கு அடியேனும் சென்றிருந்தேன். உரைவீச்சுகள் பெரும்பாலும் மலையாளத்தில் இருந்ததால், அவர்கள் சொல்லவந்த கருத்துக்களை முழுமையாக புரிந்துகொள்ள இயலவில்லை. அக்கூட்டத்தில் கலந்து கொண்டவர்களில் பாதிரியார் ஆன்றனி

கிளாரட், நாவலாசிரியர் குறும்பனை சி பெர்லின், புகைப்படக் கலைஞர் சவகர்சி, பாடகர் கோவளம் வெனிசு, சிறுகதை ஆசிரியர் சைமன்காலனி செல்வராசு, எழுத்தாளர் பொழிக்கரை யசுதின் திவாகர் ஆகியோர் தெரிந்தவர்களாக இருந்தனர்.

“குளச்சல் போர் நினைவுக் கருத்தரங்குத் தொகுப்பு” என்கிற அடிக்குறிப்போடு, “முக்குவர்: வரலாறு, வாழ்வியல், எதிர்காலம்” என்கிற பெயரில் நூல் வெளிவந்த பிறகுதான் மெல்வின் வினோத் பேசியதனை முழுமையை அறிந்து கொள்ள முடிந்தது.

“குளச்சல் போர் நிகழ்ந்து **269** ஆண்டுகள் கடந்துவிட்டன. ஆனால் குளச்சலில் போர் புரிந்தவர்கள் யார் என்று அந்த வெற்றிக்குச் சொந்தக்காரர்களாகிய நாம்கூட இதுவரை சிந்தித்ததில்லை. இதை நமது தரப்பின் குறைபாடாகவும், நமது சமுதாயத்தின் சிக்கலாகவும் பார்க்க வேண்டியுள்ளது” என்றார் மெல்வின் வினோத். குளச்சல் போரின் வெற்றிக்கு முக்கியமானவர்கள் முக்குவர்கள். இதனை அறியாமல் பல வருட காலமாக முக்குவர் சாதியினர் இருந்திருக் கிறார்கள். இதனை முக்குவர்களின் இயலாமையாகவும், முக்குவ சமுதாயத்தில் நிலவும் பிரச்சனையாகவும் மெல்வின் வினோத் பார்க்கிறார்.

எல்லா சாதிக்காரர்களுக்கும் ஏதாவது ஒரு வெற்றியை தனது சாதிக்காரன் சாதித்ததாக சொல்ல வேண்டும். அவ்வாறு சொல்லவில்லை என்றால் அந்த சாதி ஒருகாலமும் முன்னேற முடியாது என நினைக்கிறார்கள். இதைத்தான் வறீதையா கான்சுதந்தின், “மீனவர்களுக்குக் கடந்தகாலம் இல்லை. தங்களது வரலாறு என்ன என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள். தன் கடந்த காலத்தை அறிந்திராத சமூகத்துக்கு எதிர்காலம் என்ற ஒன்று இல்லை” என்கிறார். இதில் அடியேன் முரண்படுகிறேன். ஏனெனில் உங்களுடைய வரலாறை இன்றிலிருந்துகூட நீங்கள் பதிவு செய்ய முடியும். உங்களுடைய சமூகத்தில் வாழும் மூத்தோர்களை சந்தித்து அவர்களின் வாழ்க்கை அனுபவங்களைப் பதிவு செய்தாலே போதுமானது. அவைகள் சமூக வரலாறாக நிமிர்ந்து நிற்கும்.

கே.என். பணிக்கர், வேலாயுதன் பணிக்கசேரி, பி. சங்குண்ணி மேனன், டி.கே. வேலுப்பிள்ளை ஆகியோரின் நூல்களை வாசித்து, அதிலுள்ள சில தகவல்களை திரட்டி, தனது கட்டுரைக்கு ஆதாரமாக மெல்வின் வினோத் வலு சேர்த்திருக்கிறார். இருப்பினும் அந்த எழுத்தாளர்கள்

என்ன சொல்ல வருகிறார்கள் என்பதனை அடைப்புக் குறிக்குள் சொல்லாமல் கடந்து செல்வது முற்றிலும் நம்ப முடியாத சூழ்நிலையை ஏற்படுத்தி இருக்கிறது.

“காயங்குள வெற்றியோடு துணைத் தலைமை அமைச்சராக உயர்ந்த இராமையன் 1737-இல் தளவாயாக அமர்த்தப்பட்டார். காயங்குளத்தை மீண்டும் தாக்கத் திட்டமிட்ட திருவிதாங்கூர் படைக்கு அஞ்சுதெங்கு ஆங்கிலேய வணிகர்களின் நவீன ஆயுதங்கள் கிடைத்தன” என்கிறார். மெல்வின் வினோத்திடம் இருந்து அறிந்து கொள்வது என்னவென்றால் திருவிதாங்கூர் படைக்கு நவீன ஆயுதங்கள் குளச்சல் போருக்கு முன்பாகவே வந்து இறங்கிவிட்டன. திருவிதாங்கூர் படை பலமடங்கு பலம் அடைந்துவிட்டது.

“கி.பி. 1739-இல் திருவிதாங்கூர் படை காயங்குளத்தோடு போர்தொடுக்க புறப்படும் வேளையில் இலங்கையிலிருந்த டச்சு ஆளுநர் எம். வான் இம்காப், கொச்சிக்கு வந்து நிலைமையை மதிப்பீடு செய்தார். ஆங்கிலேயர்களின் ஆலோசனையின் பேரில்தான் திருவிதாங்கூர் மன்னர் இளயடத்து சொரூபத்தையும் கொச்சியையும் கைப்பற்றும் முயற்சியில் இறங்கியுள்ளார் என்பதான ஒரு தோற்றத்தை சிற்றரசர்களிடையே உருவாக்குவது தங்களது வணிக வளர்ச்சிக்கு முக்கியமானது என்று உணர்ந்தார். தங்களிடையே சண்டையிட்டுக் கொண்டிருந்த நாடுகளை எல்லாம் ஒன்றுதிரட்டி திருவிதாங்கூரைத் தோற்கடிப்பதன் மூலம் டச்சுக்காரர்கள் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ளலாம் எனக் கருதினார்” என மெல்வின் வினோத் சொல்லும் கதைப்படி மீண்டும் ஒருமுறை திருவிதாங்கூர் மன்னர் காயங்குளத்தைத் தாக்க புறப்படுகிறார்.

காயங்குளத்தோடு மோத வேண்டாம் என மார்த்தாண்ட வர்மாவோடு நடைபெற்ற பேச்சு வார்த்தையில் எந்தவித பலனும் கிடைக்கப் போவதில்லை என்பதனை உணர்ந்த இலங்கை டச்சு ஆளுநர் எம். வான் இம்காப், “திருவிதாங்கூர் மன்னனரை மிரட்டினார். ‘திருவிதாங்கூரைத் தாக்கிக் கைப்பற்றுவோம்’ என. ‘அப்படியொரு யுத்தத்தில் டச்சுக்காரர்கள் வெற்றி பெற்றால் திருவிதாங்கூர் தேசத்தில் பெரும் காடுகளுண்டு, அவற்றில் மன்னர் பாதுகாப்பாக ஒளிந்து கொள்வார்’ என்று மன்னர் பதில் சொன்னார். ‘எங்கு ஒளிந்தாலும் டச்சுக்காரர்கள் கைது செய்வார்கள்’ என இம்காப் சொல்ல, மார்த்தாண்ட வர்மா முழங்கினார்: மஞ்சிகளில் (படகுகளில்)

மீனவர்களைக் கொண்டு வந்து ஐரோப்பாவைத் தாக்குவோம்! திருவிதாங்கூர் கடற்கரை மீனவர்களின்மீது மன்னருக்கு இருந்த ஆழ்ந்த நம்பிக்கைக்கு இது சான்றாகிறது" என்கிறார் மெல்வின் வினோத்.

எழுத்தாளர் மெல்வின் வினோத், மீனவர்களை மன்னரின் நம்பிக்கைக்கு உரிய மக்களாக, மன்னரின் விசுவாசிகளாக, பிற சமூகத்தைவிட ஒருபடி மேலான மக்களாகக் கொண்டு நிறுத்துகிறார். ஆம்! அன்றைக்கு மன்னருக்கு விசுவாசிகளாக மீனவர்கள் இருந்தனர். இன்றைக்கு ஆயருக்கு விசுவாசிகளாக இருக்கின்றனர். இந்த விசுவாசத்திற்கு, 'அடிமை' என்றுகூட பெயர் வைத்துக் கொள்ளாலாம். அந்தோணி அடிமை, பவுளின் அடிமை, மிக்கேல் அடிமை, சூசையடிமை, சேசடிமை, பனியடிமை, குருசு அடிமை என பல அடிமைகள் உருவானது இந்த முக்குவர் சாதிக்குள்தான் என்பதனை மறுசீரமைப்பு செய்து பார்க்க வேண்டியது முக்குவர்களின் சமூகக் கடமையாகும்.

இதே கதையை குளச்சல் வரதராசன், 2005-இல், "குளச்சல் - ஓர் வரலாற்று ஆய்வு" என்கிற நூலில் குறிப்பிடுகிறார். இளையிடத்து சொரூபம் நாட்டை மார்த்தாண்ட வர்மா ஆக்கிரமித்து வைத்திருப்பது சரியல்ல என்று நினைத்த வான் இம்காப், மார்த்தாண்ட வர்மாவுடன் ஒரு சந்திப்புக்கு ஏற்பாடு செய்தார். சந்திப்பின்போது மார்த்தாண்ட வர்மா நிபந்தனைக்குக் கட்டுப்படாதபோது திருவிதாங்கூரைத் தாக்கப் போவதாகக் கூறினார்.

'எதைச் செய்யவும் உங்களுக்கு சுதந்திரமுண்டு. ஆனால், என் நாட்டை அடிமைப்படுத்துவது அவ்வளவு எளிதல்ல. அப்படி பிடித்துக் கொண்டால், தான் காட்டுக்குப்போய் விடுவேன்' எனக் கூறினார் மார்த்தாண்ட வர்மா. 'எங்கே போனாலும் தங்களை தேடிப் பிடித்து விடுவேன்' என இம்காப் கூறினார். மார்த்தாண்ட வர்மா கேலியாக, 'நீங்கள் எங்கள் நாட்டைப் பிடித்தால் நான் எங்கள் நாட்டுப் படகுகளில், மீனவர்களுடன்போய் உங்கள் நாட்டை முற்றுகையிடுவேன்' என்றார்.

மேற்படி செய்திகளை வாசிக்கிறபோது, 'வீரபாண்டிய கட்டப்பொம்மன்' திரைப்படத்தில் சொல்லப்படுகிற வசனம்தான் ஞாபகத்திற்கு வருகிறது. "படகுகளில் மீனவர்களைக் கொண்டுவந்து ஐரோப்பாவைத் தாக்குவோம்!" என மன்னர் மார்த்தாண்டவர்மா

முழங்கினார் என மெல்வின் வினோத் எழுதுகிறார். “எங்கள் நாட்டுப் படகுகளில், மீனவர்களுடன்போய் உங்கள் நாட்டை முற்றுகையிடுவேன்” என மார்த்தாண்ட வர்மா பேசினார் என குளச்சல் வரதராசன் குறிப்பிடுகிறார்.

“மறைசட்சி தேவசகாயம் பிள்ளையின் வீர வரலாறு” என்கிற நூலில், கத்தோலிக்கப் பாதிரியார் சே.ரோ. நற்சீசன், “நானே என் படகுகளையும், என் மீனவர்களையும் கொண்டு ஐரோப்பாவில் ஒருநாள் படையெடுக்க நினைத்துக் கொண்டிருக்கிறேன்” என மார்த்தாண்ட வர்மா சொன்னதாக பதிவு செய்திருக்கிறார். முனைவர் எ.பி. இப்ராகிம் குஞ்சு, “மார்த்தாண்ட வர்மா” என்னும் மலையாள வரலாற்று நூலில் வான் இம்காப் என்பவர் மார்த்தாண்ட வர்மாவை எதிர்த்துப் பேசியது உண்மையே என்கிறார். வசனங்களில் சில வித்தியாசங்கள் இருந்தாலும் ஏதோ ஒன்று நடந்திருக்கிறது என்பது உண்மை என்கிற முடிவுக்கு வரலாம்.

இக்கதை எங்கே சொல்லப்பட்டிருகிறது, இந்த வசனம் சரிதானா என்பதனை தேட வேண்டிய நிர்பந்தம் அடியேனுக்கு ஏற்பட்டது. எழுத்தாளர்களுக்கு சாதி, சமயப் பாசம் அதிகமாக இருப்பதால் கிடைக்கிற தகவலோடு பொய்களையும் கலந்து எழுதிவிடுவார்கள். இதனைத் தேடிப் பார்த்தபொழுது, இக்கதையின் வசனத்தை வில்லியம் லோகன், ‘மலபார்’ என்னும் ஆங்கில நூலில் குறிப்பிட்டுள்ளார். இவர், மாவட்ட ஆட்சியராகவும் நீதிபதியாகவும் பணி புரிந்தவர். 1887-இல் முதன்முதலில் எழுதப்பட்ட கேரள வரலாறாக, ‘மலபார்’ நூல் பார்க்கப்படுகிறது. அது, இரண்டு பெரிய தொகுதிகளைக் கொண்ட வரலாற்று நூல். இருப்பினும் அந்நூல் முழுமையாக ஏற்பதற்கல்ல. ஏனெனில் குளச்சல் போர் குறித்து அது தவறான தகவல்களை முன்வைக்கிறது.

அக்டோபர் 1733-இல் திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்ட வர்மாவால் கொல்லம் மிரட்டப்பட்டு வந்தது. அப்பொழுது உதவிகேட்டு டச்சு ஆளுநர் எ. மேத்யூ விண்ணப்பித்தபோது அதனை வழங்கிட மன்னர் மறுத்தார். 1739-இல் வான் இம்காப் ஆளுநராக நியமிக்கப்பட்டார். வான் இம்காப், சகிப்புத்தன்மையற்ற ஒரு மனிதர். திருவிதாங்கூரின் அதிகாரம் உயர்வதனைப் பார்த்தார். வியாபாரம் ஆங்கிலேயர்களின் கைகளுக்கு சென்றுவிடாமல் இருப்பதற்காகவும், முன்பிருந்ததை மீட்டெடுப்பதற்காகவும் நேரடியாகவே வருகை

புரிந்தார். அப்பொழுது திருவிதாங்கூர் மன்னர் கையகப்படுத்தியுள்ள எல்கைகளைக் குறித்துக் கேள்வி எழுப்பினார்.

மன்னர் மார்த்தாண்ட வர்மாவிடமிருந்து வந்த பதிலால் வான் இம்காப் எரிச்சல் அடைந்தார். மன்னரை மிரட்டினார். அப்பொழுது, 'மன்னர், சந்தேகத்திற்கு இடம் இல்லாதவகையில் அங்கே காடுகள் இருக்கின்றன. அதில் பத்திரமாக ஒய்வு எடுப்பேன்' எனப் பதிலளித்தார். அதற்கு வான் இம்காப், 'திருவிதாங்கூர்காரர்கள் எங்கே சென்றாலும் டச்சு அவர்களைத் தொடரும்!' என்றார். மன்னர் இகழ்ச்சியுடன் உற்றறிந்து கலந்துரையாடலை முறித்துக்கொண்டு, 'யூரோப்பிற்குள் என்றாவது ஒருநாள் நுழைய வேண்டுமென நினைத்துக் கொண்டார்'. அப்பொழுது, 'வான் இம்காப்க்கு போதிய படைபலம் இல்லாததால் மரியாதையுடனும், கீழ்படிதலுடனும் நடந்துகொள்ள வேண்டுமென கட்டளையிட முடியவில்லை' என பதிவு செய்திருக்கிறார்.

யூரோப்பிற்குள் நுழைய வேண்டுமென மன்னர் மனதிற்குள் நினைத்து கொண்டிருந்தார். "He had been thinking some day of invading Europe!'. "எங்கள் நாட்டுப் படகுகளில், மீனவர்களுடன்போய் உங்கள் நாட்டை முற்றுகையிடுவேன்" என மார்த்தாண்டவர்மா சொன்னதாக எழுதுவதெல்லாம் கற்பனை கலந்த கலவை. முதலாவதாக, மன்னர் நினைத்துக் கொண்டார் என்பதுகூட வில்லியம் லோகனின் கற்பனையாகத்தான் இருக்க முடியும். மன்னர் மனதில் நினைத்ததை வில்லியம் லோகன் எப்படி கண்டறிந்தார் என்கிற கேள்வி எழுகிறது. இரண்டாவதாக, படகில் போக வேண்டுமென்றால் அவர்கள் மீனவர்களாக இருக்க வேண்டிய அவசியமில்லை. நீச்சல் தெரியாதவர்கள்கூட படகில் பயணிக்க முடியும். போர் படையில் இருப்பவர்கள் எல்லோருக்கும் நீச்சல் தெரியும் என எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. ஒருவர் ஒரு கதை எழுதினால் அதனை பல எழுத்தாளர்கள் ஆய்வு செய்யாமல் அப்படியே பின்தொடர்வது வாடிக்கையாகவே இருக்கிறது.

"திருவிதாங்கூரைத் தனது செல்வாக்கு வட்டத்திற்குள் கொண்டுவரும் முயற்சியில் தோல்விகண்ட இம்காப், இலங்கையில் இருந்து காலாட் படையையும் ஆயுதங்களையும் கொண்டுவந்து டச்சுப் படையை கொல்லத்தில் தயார் நிலையில் நிறுத்தி வைத்தார். கி.பி. **1741**-இல் இளயடத்து சொரூப ராணியை ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தியதாய்

அறிவித்தார். இளயடத்து சுரூபத்தை மீண்டும் கைப்பற்ற மார்த்தாண்டவர்மா தன் படையை அங்கு அனுப்பினார். அங்கிருந்த சொற்பமான டச்சுப்படை எதிர்த்துப் போரிட்டு ஏராளம்பேர் இறந்து போயினர். இளயடத்து சுரூப ராணியின் படைகள் தாக்குப்பிடிக்க இயலாமல் சரணடைந்தது. இராணி, கொச்சிக்குப் போய் கொச்சி டச்சு ஆளுநரின் பாதுகாப்பில் இருந்தார். திருவிதாங்கூர் படை டச்சுக்காரர்களின் திருவனந்தபுரம் தளவாடக் கிடங்குகளையும், காவல் மாடங்களையும் கைப்பற்றியது. பிறகு இராமையன் தளவாயின் தலைமையில் காயங்குளத்தை சுற்றி வளைத்தது" என்கிறார் மெல்வின் வினோத். டச்சுக்காரர்களின் திருவனந்தபுரம் தளவாடக் கிடங்குகளை கைப்பற்றியதன் மூலம் திருவிதாங்கூர் படையானது இன்னும் இன்னுமாக வலிமை அடைந்திருக்கும்.

"ஏறத்தாழ இந்த வேளையில் டச்சுப்படை கன்னியாகுமரி முதல் குளச்சல் வரையுள்ள பகுதிகளை முதலில் கைப்பற்றத் திட்டமிட்டது. டச்சுக்காரர்களின் தொழிற்சாலையும் கோட்டையும் குளச்சலில் இருந்ததும் இந்தத் திட்டத்துக்குக் காரணமாகும்" என்கிறார். கன்னியாகுமரியில் டச்சுவின் கோட்டை இருக்கிறது. குளச்சலிலும் டச்சுவின் கோட்டை இருக்கிறது என்றால் கைப்பற்ற வேண்டிய இதர இரு துறைமுகங்கள் மணக்குடி மற்றும் கடியப்பட்டணம்.

"டச்சுப்படை குளச்சல் கடலில் வந்துவிட்டது என்றும், கரையிலிருந்த சிறுபடை தேங்காய்ப்பட்டணம், மிடாலம், கடியப்பட்டணம் முதலிய பட்டணங்களில் வன்முறையில் ஈடுபட்டபிறகு செழிப்பு மிகுந்த இரணியலுக்குப் போய்க் கொண்டிருப்பதாக திருவனந்தபுரத்திலிருந்த மார்த்தாண்ட வர்மாவுக்கு செய்தி எட்டியது". இந்த சிறுபடையை முக்குவர்களால் ஒன்றும் செய்ய இயலாதபோது, இதே முக்குவர்கள்தான் டி லெனாயை கைது செய்தார்கள் என்கிற மெல்வின் வினோத்தின் கூற்றினை நம்ப இயலவில்லை.

திருவிதாங்கூர் படைக்கு அஞ்சுதெங்கு ஆங்கிலேய வணிகர்களின் நவீன ஆயுதங்கள் கிடைத்திருப்பது மூலமும், டச்சுக்காரர்களின் திருவனந்தபுரம் தளவாடக் கிடங்குகளைக் கைவசப்படுத்தி இருப்பதன் மூலமும் பலம் வாய்ந்ததாக விளங்கும் திருவிதாங்கூர் படை, இவ்வளவு காலமும் சின்னஞ்சிறு கூலிப் படைகளை தனது எல்கைக்குள்ளே விட்டு வைத்திருந்தார்கள் என்பதும் ஏற்கத் தகுந்ததாக இல்லை.

காயங்குளத்தை சுற்றிவளைத்த மார்த்தாண்டவர்மா வேறு

வழியில்லாமல் வடபகுதியில் போரை உடனடியாக நிறுத்திவிட்டு டச்சுப்படையை எதிர்கொள்ள கர்நாடகாவில் அப்போது செல்வாக்குடன் இருந்த பிரஞ்சுப் படைத் தளபதி டியூப்ளெக்கின் ஆதரவை நாடினார். "பிரஞ்சுப் படைகள் குளச்சலை வந்து அடையும் முன்னே திருவிதாங்கூர்ப் படகுகள், டச்சுப் போர்க் கப்பலை சுற்றி வளைத்துக் கொண்டன". அதாவது திருவிதாங்கூர் படைகள் கடலில் நின்ற போர்க் கப்பலை கச்சிதமாக சுற்றி வளைத்து சிறை பிடித்தார்கள். இதனால் டச்சுப்படை எந்த திசையிலும் பயணிக்க முடியவில்லை.

"வலியதுறை, கண்ணான்துறை, வெட்டுகாடு, செறுமண்கரை, தும்பா, புதுக்குறிச்சி, அஞ்சுதெங்கு, மாம்பள்ளி, கொல்லம், விழிஞ்ஞம், கருங்குளம், புல்லுவிளை, பூவார், மார்த்தாண்டம்துறை, தூத்தூர், நீரோடி, குளச்சல், கன்னியாகுமரி, தூத்துக்குடி என்னும் இடங்களில் வாழ்ந்த முக்குவ, பரவ, கச்சோடா பிரமுகர்களின் தலைமையில் ஆயுதம் நிரம்பிய படகுகளும், கப்பல்களும், சிறிய படகுகளும் கடலில் இறங்கிய சூழல் பிரத்தியோகமானது" என்கிறார் மெல்வின் வினோத். திருவிதாங்கூர் படைப் பிரிவில் முக்குவர்களும், பரவர்களும், கச்சோடாக்களும் இருந்திருக்கிறார்கள். அவர்களிடம் ஆயுதம் நிரம்பிய படகுகளும், கப்பல்களும், சிறிய படகுகளும் இருந்திருக்கின்றன என்கிறார்.

இக்கட்டுரையின் ஆய்வாளர் மெல்வின் வினோத் என்பவர் முக்குவர் சாதியைச் சார்ந்தவர் என்பதால் அவருக்கு பரவர்கள் மற்றும் கச்சோடாக்கள்மீது மீனவர்கள் என்கிற முறையில் பாசம் ஏற்பட்டிருக்கிறது. அந்த பாசத்தின் காரணமாக மூன்று முக்கிய சாதிப் பிரிவினர்களுக்கு முக்கிய பங்கினைக் கொடுத்திருக்கிறார்.

"முக்குவ, பரவ, கச்சோடா பிரமுகர்களின் தலைமையில் ஆயுதம் நிரம்பிய படகுகளும், கப்பல்களும், சிறியப் படகுகளும் கடலில் இறங்கிய சூழல் பிரத்தியோகமானது" என்பதனை மெல்வின் வினோத் விளக்கியிருந்தால் இன்னும் சுவையாக அதனை வாசித்திருக்கலாம். அவர்களுக்கு ஆயுதம் நிரம்பிய படகுகளும் கப்பல்களும் எங்கிருந்து கிடைத்தது என்பதனையும் அறியத் தந்திருக்கலாம்.

முக்குவர்களும், பரவர்களும், கச்சோடாக்களும் டச்சுப் படைகளுக்கு எதிராக களத்தில் இறங்கிப் போராடினார்கள் என்பதற்கு மெல்வின் வினோத் ஒரு கதையைத் தருகிறார். "டச்சுக்காரர்கள் திருவிதாங்கூரில் தங்கள் அதிகாரத்தை நிறுவிக் கொள்ளும் பட்சத்தில்

போர்ச்சுக்கீசியரின் பாதுகாப்பில் கடல் வணிகத்தில் தாங்கள் முன்னணி வகிக்கும் நிலையை இழக்க நேரும். இது தங்கள் பொருளாதார வளர்ச்சியை முடக்கிவிடும். தங்களது ஆன்மிக மேய்ப்பர்களாக இருந்துவரும் போர்ச்சுக்கல் சமயக்குழு பாதிரிகள் திருவிதாங்கூரில் இருந்து போய்விட நேரும். இந்த அச்சுறுத்தல்களே திருவிதாங்கூர் கடற்கரை முக்குவர், பரவர், கச்டோடா தலைவர்கள் யுத்தக் களத்தில் இறங்கும் நிர்பந்தத்தை ஏற்படுத்தின".

மெல்வின் வினோத் கூற்றுப்படி போர்த்துக்கீசியர்களின் உதவியால் கடல் வணிகத்தில் முக்குவர்களும், பரவர்களும் கச்டோடாக்களும் அதிகம் முன்னேறி விட்டார்கள். அவர்களிடத்தில் வறுமை என்பது அறவே இல்லை. கத்தோலிக்க சமயமும், போர்ச்சுக்கீசியரின் மீதுள்ள பாசமும்தான் போர்க் களத்தில் இறங்க வேண்டிய நிர்பந்தத்தை இவர்களுக்கு ஏற்படுத்தி கொடுத்திருக்கிறது. மன்னர் மார்த்தாண்ட வர்மா மீதுள்ள பாசம் எதுவும் இவர்களை நிர்ந்திக்கவில்லை. திருவிதாங்கூர் எல்கைக்குள் இருந்த இவர்களை கிறித்தவ மதம் மாறுவதற்கு அனுமதியளித்த மன்னர்கள்மீது இவர்களுக்கு பற்றும் பாசமும் ஏற்படவில்லை. இறுங்குமாவும் பால்பவுடரும் போர்த்துக்கீசியர்கள் காலத்தில் கிறித்தவர்களுக்கு ஏன் கொடுத்தார்கள் என்கிற வரலாற்றுச் செய்தி இங்கு மெய்ப்பிக்க முயலுவதனைத்தான் பார்க்கிறேன்.

மிகப்பெரிய கடற்படை முக்குவர், பரவர் சாதியினரிடம் இருந்திருக்கிறது. இப்படியொரு படை இருந்த தகவலை மெல்வின் வினோத் வாயிலாகத்தான் முதன்முதலாகக் கேள்விப்படுகிறேன். ஆவணங்களில் எங்கும் இப்படிப்பட்ட படைக் கப்பல் முக்குவர் மற்றும் பரவர் சாதியினர்களிடம் இருந்ததாக பதிவுகள் இல்லை. தூத்துக்குடியில் உள்ள பரவர்கள் குளச்சல் போருக்கு வந்திருக்கிறார்கள். ஒருவேளை அவர்களுக்கு அப்படியொரு எண்ணம் இருந்திருக்கக்கூடும் என்கிற பார்வையில் மெல்வின் வினோத்தின் கருத்து கருது பொருளாகத்தான் உள்ளது.

"குளச்சலில் வந்த டச்சுப் படையை வலியத்துறையிலும், முத்துக்குளித்துறையிலும் உள்ள கச்டோடாக்களும், பரவரும், முக்குவரும் சேர்ந்து எதிர்த்தனர். டச்சுப்படை வீரர்களையும் ஆயுதங்களையும் கரையிறங்க விடாமல் தடுத்தனர். இலங்கையிலிருந்து குளச்சலுக்கு வந்து சேர்ந்த இரண்டாவது படைக் கப்பல் கரையை

நெருங்கவிடாமல் திருவிதாங்கூரின் கப்பல் படை தாக்கியது. குளச்சலில் முற்றுகையிடப்பட்ட டச்சுக் கப்பல் வலிமையுடன் போராடியது. எனினும் அன்று தென்னிந்தியாவின் வீரியமிகுந்த போர் வீரர்களாயிருந்த பரவர்குல வீரர்கள் பெரும் எண்ணிக்கையில் பங்கேற்றிருந்த பரவர், முக்குவர், கச்டோடா சமூகங்களின் படை சரியான பதிலடி கொடுத்தது. இதை சமாளிக்க முடியாத டச்சுக் கடற்படை மீதமிருந்த கப்பலையும், ஆயுதங்களையும் கைவிட்டு வீரர்களும், தளபதியும், மாலுமிகளும் சரணடையும் நிர்பந்தம் ஏற்பட்டது" என்கிறார் ஆய்வாளர் மெல்வின் வினோத்.

இக்கதையின் மூலம் இலங்கையிலிருந்து குளச்சலுக்கு வந்து சேர்ந்த டச்சுக்காரர்களின் இரண்டாவது படைக் கப்பல் புறமுதுகு காண்பித்து ஓடி மறைந்து விட்டது என்றுதான் எடுத்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. முதலில் வந்த டச்சுப்படைக் கப்பலும் கரைக்கு செல்ல முடியாமல் தடுக்கப்பட்டு விட்டது. வலியதுறை முக்குவமாரும், முத்துக்குளித்துறை பரவமாரும் ஒன்றாக சேர்ந்து டச்சுப்படை கப்பலை குளச்சல் கடலில் வைத்து வீழ்த்தி இருக்கிறார்கள் என்றால் இதைவிட ஒரு பெரிய சாதனையை இந்திய வரலாற்றில் யாரும் எங்கும் பார்த்திருக்கவும் முடியாது; வாசித்திருக்கவும் முடியாது.

"முக்குவர்: வரலாறு, வாழ்வியல், எதிர்காலம்" என்கிற இதே நூலில் வறீதையா கான்சுதந்தின், "கன்னியாகுமரி முக்குவர் சமூக வரலாறு" என்கிற அவருடைய கட்டுரை ஒன்றையும் இடம்பிடிக்கச் செய்துள்ளார். அதில், "பெல்சியம் நாட்டைச் சார்ந்த டிலனாய் தலைமையேற்று நடத்திய டச்சு கடற்படை திருவிதாங்கூரின் நாயர் படையால் குளச்சலில் தோற்கடிக்கப்பட்டது" என்கிறார். ஆய்வாளர் மெல்வின் வினோத் மற்றும் பேராசிரியர் வறீதையா கான்சுதந்தின் ஆகிய இருவரும் ஒரே நூலில் இருவேறு கோணங்களில் கதை சொல்கிறார்கள். இப்படிப்பட்ட மனிதர்கள் எழுதும் கதைகளை ஒருபோதும் வரலாறாக எடுத்துக்கொள்ள முடியாது.

அக்கட்டுரையில், "டிலனாய் சிறைபிடிக்கப்பட்டு பின்னாளில் மார்த்தாண்ட வர்மாவின் கப்பித்தான் (தளபதி) ஆனார் என்னும் பதிவு மட்டுமே உள்ளது" என வறீதையா கான்சுதந்தின் குறிப்பிடுகிறார். இவ்வாறாக அவரது பாணியில் தெளிவாக அறிந்திருக்கிற அறிவாளி வறீதையா கான்சுதந்தின், மெல்வின் வினோத்தின் கட்டுரையை நூலில் இடம்பெறாமல் புறக்கணித்திருக்க வேண்டும். வரலாற்றில், பொய்

கட்டுமானங்களை எழுப்ப முயல்வது அந்தந்த சாதியினரின் நற்பெயரை கெடுத்துவிடும்.

“பெல்சியம் நாட்டைச் சார்ந்த டிலனாய் தலைமையேற்று நடத்திய டச்சு கடற்படை திருவிதாங்கூரின் நாயர் படையால் குளச்சலில் தோற்கடிக்கப்பட்டது” என்று சொல்லும் அதே அறிவாளி வறீதையா கான்சுதந்தின், “கடற்போர் முறை நாயர் வீரர்களுக்கு எள்ளளவும் பரிச்சயமானது அல்ல”. அதனால், “கடலில் நின்றுகொண்டிருந்த கப்பலைத் தாக்கி டிலனாய் முதலான இருபத்தைந்து பேரை சிறைபிடிக்க நீச்சலில் கைதேர்ந்த முக்குவர்களின் உதவி உறுதியாக தேவைப்பட்டிருக்கும். அந்தப் பங்களிப்பு வழக்கம்போல வரலாற்றுப் பதிவாளர்களால் மறைக்கப்பட்டிருக்கலாம்” என்கிறார். இதில், சாதி ரீதியான ஓர் ஆதங்கத்தைத்தான் வறீதையா கான்சுதந்தினிடம் காண முடிகிறது. கடந்த காலத்தை அறிந்திராத சமூகத்திற்கு எதிர்காலம் என்ற ஒன்று இல்லையல்லவா? அதனால் துடுப்பை இப்படிப் போட்டிருக்கிறார்.

தனது முக்குவ சாதிக்காரர்களின் பங்கு இல்லாமல் டச்சுப் படையைத் தோற்கடித்திருக்க முடியாது. நாயர்களுக்கு கடல்போர் குறித்து எதுவும் தெரியாது. ஏன், அவர்களுக்கு ஆற்றில் நீச்சல் அடிக்கவே தெரியாது என்றுகூட யாராவது வரும் காலங்களில் எழுதக்கூடும். அதனால் அப்பகுதியில் இருந்த முக்குவர் சாதியினர்தான் டச்சுப்படையை வீழ்த்தி, டிலனாயை கைது செய்திருக்க வேண்டும். இதன்மூலம், டாச்சுப்படையை வீழ்த்தி டிலனாயை கைது செய்தது முக்குவர் சாதியினரே என்பதனை தூத்தூர் கல்லூரி பேராசிரியர் வறீதையா கான்சுதந்தின் தனது கட்டுரை வாயிலாக அம்பலப்படுத்துகிறார்.

பேராசிரியர் வறீதையா கான்சுதந்தின், அதனை மட்டும் சொல்லவில்லை. “கைவண்டிமீது பனந்தடிகளைப் பீரங்கி போன்ற தோற்றத்தில் அலைவாய்க்கரையில் நிரைசெய்து முக்குவர்கள் டச்சுப் படையை அச்சுறுத்திப் பிடித்தார்கள் என்பது உள்ளிட்ட வாய்மொழி வரலாறுகள் இன்றும் நிலவுகின்றன” என்கிறார். பனந்தடிகளை வெட்டுவதற்கு நாடார்களுக்கு மட்டுமே தெரியும். அதனை அவர்கள் வெட்டி கொண்டுவந்து குளச்சல் கடற்கரையில் பீரங்கிபோல் வைத்து டச்சுப்படையை அச்சுறுத்திப் பிடித்தார்கள் என நாடார்கள் கதை எழுதிக் கொண்டிருக்கையில், கைவண்டிமீது பனந்தடிகளைப் பீரங்கி போன்ற தோற்றத்தில் அலைவாய்க்கரையில் நிரைசெய்து முக்குவர்கள்

டச்சுப் படையை பயமுறுத்திப் பிடித்தார்கள் என்பது சுயநலத்தின் வெளிப்பாடாகத்தான் இருக்க இயலும். பனந்தடி கதையில் நாடார்களுக்கு எள்ளளவும் பங்கில்லாமல் செய்திருக்கும் பேராசிரியர் வறீதையா கான்சுதந்தின் சாதிப் பாசத்தை இவ்விடத்தில் பாராட்டித்தான் ஆகவேண்டும்.

இதில் நீங்கள் யாரும் சந்தேகம் கொள்ள வேண்டாம். ஏனெனில், "குளச்சல் போருக்கு ஆறு வருடங்களுக்குப் பிறகு நிகழ்ந்த ஆலப்புழப் போரில், குளச்சல் போரில் பங்கேற்ற பிள்ளைத்தோப்பு முதல் விழிஞ்ஞம் வரையுள்ள நீச்சல் வீரர்கள் வரவழைக்கப்பட்டு ஈடுபடுத்தப்பட்டார்கள் என்றொரு குறிப்பும் உண்டு" என்கிறார் வறீதையா கான்சுதந்தின். அந்தக் குறிப்பு எங்கிருக்கிறது என்பதனை இனிமேல்தான் தேடி கண்டடைய வேண்டும்.

"வரலாறு இன்றைக்கு பலருக்கு விருப்பமான ஒரு தளம். வரலாற்றில் என்ன நடந்ததோ, அதைச் சொல்ல வேண்டும் என்று உணர்ச்சிப் பொங்க ஆவேசமாக பேசுகின்றவர்கள் ஏராளமானோர் உண்டு. வரலாற்றில் இது இப்படித்தான் நடந்தது என எந்தவொரு இரண்டு வரலாற்று ஆய்வாளர்களும் ஒத்துக் கொள்வதே இல்லை. எனவேதான் இன்றைக்கு வரலாறு என்கிற துறையைவிட வரலாற்றை எழுதுகின்ற வரலாற்றியல் துறையானது மேம்பட்டதாக அறியப்பட்ட ஒரு சூழ்நிலை இருக்கிறது. அதுவும் நான் அறிந்த வரைக்கும் கன்னியாகுமரி மாவட்டம் சார்ந்த வரலாறு என்பது தமிழ்நாட்டில் வேறு எந்தப் பகுதியை விடவும் இடியாப்பச் சிக்கல் நிறைந்த ஓர் வரலாறாக இருக்கிறது" என கத்தோலிக்கப் பாதிரியாரும் முக்குவருமான ஆன்றனி கிளாரட் மேடைகள் தோறும் பேசி வருவது இவ்விடத்தில் பொருத்தமாகப் பார்க்கத் தோன்றுகிறது.

குளச்சல் போரில் முக்குவர், பரவர், கச்டோடா ஆகியோருக்கு மட்டும்தான் பங்குண்டு. வேறு சாதியினரின் பங்களிப்பு இல்லையா என வருத்தப்படுபவர்களுக்கு ஆய்வாளர் மெல்வின் வினோத் நல்லதொரு செய்தியை குளச்சல் போர் குறித்த கதையில் முன்வைத்திருக்கிறார். "இதேவேளையில் குளச்சல் கோட்டையிலிருந்த டச்சுப் படையாளிகளைத் திருவிதாங்கூர் படையின் நாயர், நாடார், முக்குவர், மறவர் மற்றும் முசுலிம் பிரிவுகள் தாக்கி சரணடையச் செய்தனர்". குளச்சல் போரில் அனைத்து சாதியினருக்கும் பங்கு உண்டு. இப்பொழுது எல்லோருக்கும் மகிழ்ச்சிதானே!

"பதினேழாம் நூற்றாண்டில் இராமேசுவரம் முதல் கன்னியாகுமரி வரை நீண்டிருந்த முத்துக்குளித்துறைப் பரவரும், ரேட்டொரா மற்றும் கன்னியாகுமரி முக்குவரும் பிரைவற்றீராய் இயங்கும் அளவிற்கு செல்வச் செழிப்புப் பெற்றிருந்தனர். நவீன ஆயுதங்கள் அடங்கிய படகுகளும் கப்பல்களும் அவர்களுக்குச் சொந்தமாயிருந்தன" என்கிறார் மெல்வின் வினோத். இதற்கொல்லாம் ஆவணக் குறிப்பு எதுவும் உண்டா என யாரிடமும் கேட்டுவிடாதீர்கள். அப்படி இருந்தால், இப்படி எல்லாம் அவர் கதை எழுதிக் கொண்டிருக்க மாட்டார்.

கைப்பற்றப்பட்ட, "டச்சுக் கப்பற்படையில் 50 முதல் 90 வரை பீரங்கிகள் இருந்தன". எதனையும் உறுதியாக சொல்ல முடியாததால்தான் உத்தேசமாக மெல்வின் வினோத் கதை சொல்கிறார். இந்த பீரங்கிகளை யார் எடுத்துச் சென்றார்கள் என்பதனையும் மெல்வின் வினோத் தனது ஆய்வின் மூலம் கண்டறிந்துள்ளார். "மரைக்காயர்கள் கோழிக்கோடு மன்னருக்காகவும், கச்டோடாக்கள் போர்ச்சுக்கீசியருக்காவும், அரயர்கள் புறக்காடு மன்னருக்காகவும், ரேட்டொரா முக்குவர்கள் தங்கள் வியாபாரத்தின் பாதுகாப்புக்காகவும் பீரங்கிகளைக் கொண்டுபோயினர்".

இந்த பீரங்கிகள் இவர்களுக்கு எதற்கு தேவைப்பட்டன என்பதற்கு, "கடல் கொள்ளையர்களின் அச்சுறுத்தலை எதிர்கொள்ளவும், பிரதேசக் கடற்பகுதியை தங்கள் கட்டுப்பாட்டில் கொண்டுவரவும் இவர்களுக்கு ஆயுதம் தேவைப்பட்டது" எனச் சொல்லும் மெல்வின் வினோத் இதைவிட மேலாக ஒரு செய்தியைச் சொல்கிறார். "மதமாற்றத்தைத் தொடர்ந்து, கத்தோலிக்கத் திருச்சபையின் விருப்புகளை நிறைவேற்றவும் இவை தேவைப்பட்டன" என்கிறார். என்ன விருப்புகளை நிறைவேற்ற என்பதனை மெல்வின் வினோத் விளக்கவில்லை.

கத்தோலிக்கத் திருச்சபையின் விருப்பத்தை கேட்காதவர்களை, குறிப்பாக ஞாயிற்றுகிழமை கடலில் மீன்பிடிக்கச் சென்ற முக்குவர்களை புழுக்க முக்குவன் என அழைத்தது மட்டுமின்றி அவர்களை சுட்டுக் கொல்லவும் இந்த ஆயுதங்கள் தேவைப் பட்டிருக்கலாம். "முத்துக்குளித்துறைப் பரவர்கள், விலைமதிப்பு வாய்ந்த முத்தும் சங்கும் வெடி உப்பும் வணிகம் செய்து குவித்திருந்த பெருஞ்செல்வத்தைப் பாதுகாத்து தங்கள் சமுதாயத்தைக் கட்டுக்

கோப்புடன் நடத்துவதற்கு இவ்வாயுதங்கள் தேவையாக இருந்தன. மதமாற்றத்திற்குப் பிறகு மத நடவடிக்கைகளுக்கு சாதகமாக பரவர்கள் தங்கள் கடற்படை பலத்தையும் உபயோகித்தனர்" என்கிறார்.

"இந்த போரின் வெற்றிக்குக் கைதேர்ந்த கடல் வீரர்களாக விளங்கிய பரவரும் முக்குவரும் தந்திருக்கும் முக்கியமான பங்களிப்பு வரலாற்றில் இருட்டடிப்பு செய்யப்பட்டிருக்கிறது. முக்குவர்களின் வரலாற்றுப் பெருமையின் அடையாளமாக குளச்சல் போர் கொண்டாடப்பட வேண்டும். இந்த செய்தி தென்திருவிதாங்கூர் கடற்கரை முழுவதும் அக்கினியாய் பரவ வேண்டும். நமது சமூகங்களில் இந்த செய்தி பேசப்பட வேண்டும். ஏன், ஞாயிறு மறைக்கல்வி வகுப்புகளிலும், கத்தோலிக்க பக்தி இயக்கங்களின் சந்திப்புகளிலும் பேசப்பட வேண்டும். முக்குவர்களின் பண்பாட்டு அடையாளமாய்க் குளச்சல் போர் நினைவுத்தூண் கொண்டாடப்பட வேண்டும். எதிர்கால எழுச்சியின் அடையாளமாக மாற வேண்டும்" என்கிறார் மெல்வின் வினோத்.

யூதர்களின் வரலாறை படிக்கவே முக்குவர்களுக்கும் பரவர்களுக்கும் நேரமில்லாதபோது, இதனையும் படிக்கச் சொல்வது விந்தையானது. தற்பொழுது கத்தோலிக்கத் திருச்சபையின் கைகளில் ஆயுதம் இல்லாமல் இருந்தாலும், முக்குவர்களும் பரவர்களும் அதில் அடிமையாகிவிட்ட பின்பாக, 'திருச்சபையை விட்டு நீக்குவோம்' என்கிற மிரட்டல் ஆயுதமானது நெஞ்சைத் துளைத்துக் கொண்டுதான் நிற்கிறது.

குளச்சல் போரின் வெற்றிக்குக் கைதேர்ந்த கடல் வீரர்களாக விளங்கி டச்சுப் படையினரை வீழ்த்திய பரவர் மற்றும் முக்குவர் ஆகியோரில் ஒருவர் பெயரைக்கூட வறீதையா கான்சுதந்தினோ அல்லது மெல்வின் வினோத்தோ எழுதவில்லை; எழுத முடியவுமில்லை. அதனால்தான் மெல்வின் வினோத்தின் கட்டுரை பரிதாபமான நிலைமைக்கு தள்ளப்பட்டிருக்கிறது.

முக்குவர் வரலாறு குறித்து முக்குவர்கள் பலருக்குத் தெரியாது என்பதால் குளச்சல் போர் நிகழ்வை முக்குவர் வரலாறாக சித்தரிக்க மெல்வின் வினோத் ஆசைப்பட்டிருக்கிறார். அதனை தொகுத்து வெளியிடுவதில் வறீதையா கான்சுதந்தினுக்கு நாட்டம் ஏற்பட்டிருக்கிறது. ஞாயிறு மறைக்கல்வி வகுப்புகளிலும், கத்தோலிக்க

பக்தி இயக்கங்களின் சந்திப்புகளிலும் யூதர்களின் வரலாற்றைப் பேசலாம். முக்குவர்களின் வரலாற்றைப் பேச முடியாது என்கிற செய்தியானது மெல்வின் வினோத்துக்கு தெரியாமல் போய்விட்டது.

இப்படிப்பட்ட பொய் வரலாறுகளை எல்லாம் சொல்லிவிட்ட மெல்வின் வினோத், "இக்கருத்தரங்கின் ஒருங்கிணைப்பாளர் வறீதையா தனது அறிமுக உரையில் குறிப்பிட்ட கருத்தை வழிமொழிந்து எனது உரையை நிறைவு செய்ய விரும்புகிறேன்: தனது கடந்த காலத்தை அறிந்துகொண்ட சமூகத்தால் மட்டுமே தனது எதிர்காலத்தை உறுதி செய்துகொள்ள முடியும்" என்கிறார். கடந்தகால வரலாறை குறித்த ஆவணங்களை முறையாகத் தேடாமல், இப்படி பொய் பொய்யாக கதை சொல்லிக் கொண்டிருந்தால் ஒருகாலமும் எதிர்காலத்தை உறுதி செய்யவும் இயலாது; முக்குவர்களால் வரலாற்றை மீட்டெடுக்கவும் முடியாது.

## 2

# டி லெனாயை கைது செய்தவர் தேவசகாயம் பிள்ளை!

மணலியைச் சார்ந்த அமலகிரி பி. அந்தோனிமுத்து 'வேதசாட்சி தேவசகாயம்பிள்ளை விரிவான வரலாறு' என்கிற நூலில், 'கடற்கரை ஆசான்கள்' குறித்து எழுதியிருக்கிறார். இதைத்தான், வறீதையா கான்சுதந்தின் "கடலில் நின்றுகொண்டிருந்த கப்பலைத் தாக்கி டிலனாய் முதலான 25 பேரை சிறைபிடிக்க நீச்சலில் கைதேர்ந்த முக்குவர்களின் உதவி உறுதியாக தேவைப்பட்டிருக்கும். அந்தப் பங்களிப்பு வழக்கம்போல வரலாற்றுப் பதிவாளர்களால் மறைக்கப்பட்டிருக்கலாம்" என்கிறார். அவருடைய ஆதங்கத்திற்கு இந்நூலில் சில அல்வா துண்டுகள் கிடக்கின்றன.

"குளச்சல் ஆசான், கோடிமுனை ஆசான், வாணியக்குடி ஆசான், கீழ்குறும்பனை ஆசான், மேலக்குறும்பனை ஆசான், கொட்டில்பாடு ஆசான், கீழக்கடியப்பட்டணம் ஆசான், மேலக்கடியப்பட்டணம் ஆசான், மேலமணக்குடி ஆசான், கீழமணக்குடி ஆசான், மேலமுட்டம் ஆசான், கீழமுட்டம் ஆசான், மேலத்துறை ஆசான், அழிக்கால் ஆசான், பிள்ளைத்தோப்பு ஆசான், இராசாக்கமங்கலம் ஆசான், பெரியகாடு ஆசான், கேசவன்புத்தன்துறை ஆசான், பொழிக்கரை ஆசான், பெரியகாடு ஆசான், புத்தன்துறை ஆசான், பள்ளம் ஆசான், கோவளம் ஆசான், கன்னியாகுமரி ஆசான், ஆரோக்கியபுரம் ஆசான், லீபுரம் ஆசான், சின்னமுட்டம் ஆசான், கூட்டப்புளி ஆசான், கோட்டாறு ஆசான், நடுத்துறை ஆசான், கீழ்மிடாலம் ஆசான், மேல்மிடாலம் ஆசான், இனையம் ஆசான், சின்னத்துறை ஆசான், இனையம் ராமன்துறை ஆசான், இனையம் சின்னத்துறை ஆசான், ராமன்துறை ஆசான், முள்ளூர்துறை ஆசான், இரையுமன்துறை ஆசான், பூத்துறை ஆசான், தூத்தூர் ஆசான், சின்னத்துறை ஆசான், ஏழுதேசம் ஆசான், இரவிபுத்தன்துறை ஆசான், வள்ளவிளை ஆசான், மார்த்தாண்டன்துறை ஆசான், நீரோடி ஆசான், பொழியூர் ஆசான் போன்ற ஆயிரக்கணக்கான கடலோர ஆசான்மார்களின் குழுக்கள் குளச்சல் போரில் பங்கு கொண்டனர்" என்கிறார் அமலகிரி அந்தோனிமுத்து.

இந்த பட்டியலில் அடியேன் பிறந்த கடற்கரை கிராமமான புதூர்த்துறையில் இருந்து புதூர்த்துறை ஆசான் யாராவது பங்கெடுத்து இருக்காரா எனப் பார்த்தேன். பெயர்ப் பட்டியலில் இடம் பெறவில்லை. ஏமாற்றமே மிஞ்சியது. ஒருவேளை அவ்வூரில் ஆசான் இல்லாமல் இருந்திருக்கலாம். ஏன், அவ்வூர் அப்பொழுது உருவாகாமலே இருந்திருக்கலாம். இவர்களைப்போன்ற, 'ஆயிரக்கணக்கான கடலோர ஆசான்மார்களின் குழுக்கள், குளச்சல் போரில் பங்கு கொண்டனர்' என நூலாசிரியர் கூறியிருப்பதால் விடுபட்டுப்போன ஊர்காரர்கள் சற்று ஆறுதலும் அடையலாம்.

முக்குவர்களின் பெயர்களைக் குறிப்பிடாமல் மொட்டை கடிதாசு எழுதியதுபோல் இருக்கிறதே. அவர்களின் பெயர்களை யாராவது கண்டுபிடித்து எழுதியிருக்கிறார்களா என தேடிப் பார்த்தேன். இதனைக் கண்டுபிடிக்காமல் குமரி மாவட்ட ஆய்வாளர்கள் இருக்க வாய்ப்பில்லையே. அவர்கள்தான் சிறந்த வரலாற்று ஆய்வாளர்கள் ஆயிற்றே. திருவள்ளுவர், தொல்காப்பியர் ஆகியோருக்கு பிறந்தநாள் கண்டுபிடித்து இருக்கும் வரலாற்று ஆய்வாளர்கள் அல்லவா?

எழுத்தாளர் ஓலக்கோடு யாண், 'காற்றாடிமலைக் காவியம்' நூலில் முக்குவர்கள் ஆசானின் பெயர்களை எழுதியிருக்கிறார். ஓலக்கோடு யாண், இதழியல் மற்றும் தகவல் தொடர்பியலில் முதுகலைப் பட்டம் பெற்றவர். முப்பது ஆண்டுகால எழுத்துக்கலை அனுபவம் உள்ளவர். 'மறைசாட்சி தேவசகாயம்' மற்றும் 'மண்ணின் மணம்' ஆகிய மும்மத இதழ்களில் பொறுப்பாசிரியர். 'புனித வாழ்வில் மறைசாட்சி தேவசகாயம் பிள்ளை' நூலைப் படைத்தவர். அவர், ஏதாவது சொல்வார் என்று பார்த்தால், அவர் இன்னொருவரை கை காட்டிவிட்டு நகர்ந்துவிட்டார்.

"இந்த கடற்போரில் பவரீன்பிள்ளை ஆசான், கடியப்பட்டணம் மரிய குருசு ஆசான், குளச்சல் பெர்னாஞ்சியூசு ஆசான் உட்பட நாற்பது கடற்கரை மீனவர் சமூக ஆசான்மார்கள் முக்கியப் பங்கேற்றினர். அனைவர் பெயரும் கிடைக்கவில்லை. இவ்வாறு, சிறப்பாக செயல்பட்டதில் பவுரீன்பிள்ளை, மரியகுருசு ஆகியோருக்கு மன்னர் மார்த்தாண்ட வர்மா வீரவாள் பரிசு கொடுத்ததாக 'சாய்வு நாற்காலி' என்கிற புதினத்தில் கூறப்படுள்ளது" என்கிறார். 'சாய்வு நாற்காலி' நூலை எழுதியவர் தோப்பில் முகம்மது மீரான். இவர் **1997**-இல், 'சாய்வு நாற்காலி' நாவலுக்காக சாகித்திய அகாதெமி விருது பெற்றவர்.

பல பொய்களை புதினம் என்கிற பெயரில் இறக்கி வைப்பவர். தோப்பில் முகம்மது மீரான் அளிக்கும் சான்றுதான் கடியப்பட்டணம் மரிய குருசு, குளச்சல் பெர்னாஞ்சியூசு மற்றும் தேங்காப்பட்டணம் பவரீன்பிள்ளை. பலருடைய பெயர் அவருக்குக் கிடைக்கவில்லை.

"டச்சுப்படை வென்ற குமார உதய மார்த்தாண்டன் நாடார்" என்ற நூலில் அந்தோணி அடிமை என்கிற ஒருவரை கே. திரவியம் அறிமுகப்படுத்துகிறார். அவர்தான் மீனவர்களை குளச்சல் போரில் ஒருங்கிணைத்தார் எனச் சொல்கிறார். மீனவர்களின் பெயர்ப் பட்டியல், குளச்சல் போரில் அதிகமாகி கொண்டிருப்பது நிச்சயமாக முக்குவர் சாதியினருக்கு மகிழ்ச்சியை அளிக்கலாம்.

"1723-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பிரிட்டன் கிழக்கிந்திய நிறுவனம், இளைய அரசர் மார்த்தாண்ட வர்மாவோடு ஒரு உடன்படிக்கை செய்து கொண்டது. அரசின் சொந்த செலவில் குளச்சல் துறைமுகத்தில் ஒரு கோட்டை கட்டித்தர மன்னர் சம்மதித்தார். அக்கோட்டைக்குள் ஆங்கிலேயருகளுக்குத் தேவையான பீரங்கிகளையும், வெடி மருந்துக்களையும் சேகரித்து வைக்க சம்மதித்தார். தேவைப்படும்போது எதிரிகளைத் தாக்க நிறுவனமும் அரசரும் ஒப்புக் கொண்டனர். இவ்வுடன்படிக்கையில் தளபதி முனைவர் அலெக்சாண்டர் கையெழுத்துப் போட்டார்" என்கிற இப்பதிவானது ஏ. சிறிதரமேனோன் எழுதிய, 'மார்த்தாண்ட வர்மாவும் தர்மராசாவும் - கேரள சரித்திரம்' நூலில் இருப்பதாக அமலகிரி அந்தோனிமுத்து குறிப்பிடுகிறார். அப்படி ஒரு ஒப்பந்தம் ஆங்கிலேயர்களுடன் ஏற்பட்டதாகவோ அல்லது குளச்சலில் மன்னர் கோட்டை கட்டிக் கொடுத்ததாகவோ எந்தவொரு ஆவணப் பதிவும் காணக் கிடைக்கவில்லை. அதற்கான சாத்தியக் கூறுகளும் இல்லை.

"கொட்டாரக்கரை இளையிடத்து சொரூபம் என்ற மூப்பன் மரணமானார். அவரது வாரிசு ஆட்சிப் பொறுப்பு ஏற்க முன்வந்தனர். இதை மார்த்தாண்ட வர்மா தடுத்தார். இதனால் வெறுப்படைந்த கொட்டாரக்கரை ராணி கொச்சியிலுள்ள கிழக்கிந்திய நிறுவனத்தாரிடம் அடைக்கலமானாள். ஆங்கிலேயர் தனது படையை கொட்டாரக்கரைக்கு அனுப்பினர். 1741-இல் டச்சு ஆளுநர் உதவியுடன் ராணிக்கு முடி சூட்டினர். இதனால் டச்சு ஆளுநருக்கும் மார்த்தாண்ட வர்மாவுக்கும் நேரடியாக மோதல் ஏற்பட்டன" என்கிறார் நூலாசிரியர் அமலகிரி அந்தோனிமுத்து. கொட்டாரக்கரை

ராணிக்கு டச்சு அடைக்கலம் கொடுக்கிறது. டச்சு ஆளுநர் ராணிக்கு முடி சூட்டுகிறார். அப்படியெனில், ஆங்கிலேயப் படை கொட்டாரக் கரைக்குச் சென்று யாரைத் தாக்கியது என்கிற பதிவைக் காணோம்.

“ஆங்கிலேய ஆளுநர் சிலோனில் இருந்த தனது படையை குளச்சல் துறைமுகத்திற்கு அனுப்பினார். குளச்சலில் ஏற்கனவே நிறைத்து வைத்திருந்த பீரங்கிகளையும், வெடி மருந்துக்களையும் உபயோகப்படுத்த ஆளுநர் திட்டமிட்டிருந்தார். மார்த்தாண்ட வர்மாவின் உடன் பாதுகாப்பாளரான அனந்த பத்மநாபன் நாடார் முன் கருதலாகச் சென்று ஆங்கிலேயரின் குளச்சல் வெடி மருந்துச் சாலையை தீக்கிரையாக்கினார். இதனால் பதறிப்போன ஆங்கிலேயப்படை குளச்சல், இரணியல், கருங்கல், கோட்டாறு போன்ற இடங்களை வளைத்தன”. ஆங்கிலேய ஆளுநர் சிலோனில் இருந்து குளச்சல் வந்தாரா அல்லது டச்சு ஆளுநர் சிலோனில் இருந்து குளச்சல் வந்தாரா என்கிற குழப்பம் வாசகர்களை சிறிது நேரம் ஓய்வெடுக்க வகை செய்யும்.

ஆங்கிலப் படைக்கு எதிராக நகர்த்தப்பட்ட கதையை அடுத்த பத்தியில் டச்சுக்காரர்களுக்கு எதிராக நகர்த்துகிறார் அமலகிரி அந்தோனிமுத்து. “திருவிதாங்கோடு நாட்டின் பண்டாரப் பாளைய படைப்பிரிவுகள் ஏழு வகையாக பிரிக்கப்பட்டிருந்தன. சிறப்பும் பெருமையும் மிக்கவர்களான பரைக்கோடு தேசத்தின் ஏழு ஆசான்மார்கள் படைக்குத் தலைமைத் தாங்கினர். தக்கலை கரைகண்ட முத்தப்பர், சாரோடு தேசத்தின் அனந்த பத்மநாபன் நாடார், தெம்மன் திருமுத்து ஆசான், தொம்மை சின்னத்தம்பி ஆசான், மரிய மல்லன் மாயக்குட்டி ஆசான், மாங்கோடு சிலுவேத்தர் ஆசான், வெள்ளியோடு ஆனையடக்கி அரதோட்டி ஆசான், நட்டாலம் நீலகண்டபிள்ளை போன்ற பெரியோர்களின் தலைமையில் டச்சுப் படையைச் சுற்றி வளைத்தனர். ஆயிரக்கணக்கான மீனவ நீந்தல் ஆசான்மார்களான வீரர்கள் தோணிகளிலும் கட்டுமரங்களிலும் கடலில் குதித்தனர்”.

திருவிதாங்கோடு நாட்டின் பண்டாரப் பாளைய படைப்பிரிவுகள் ஏழு வகையாக பிரிக்கப்பட்டிருந்தன எனக் குறிப்பிடும் நூலாசிரியர் எட்டுவகைப் படைப் பிரிவுகளை தருவிக்கிறார். அவர்கள்: (1) கரைகண்ட முத்தப்பர், (2) அனந்த பத்மநாபன், (3) தெம்மன் திருமுத்து, (4) தொம்மை சின்னத்தம்பி, (5) மரிய மல்லன் மாயக்குட்டி, (6) சிலுவேத்தர், (7) ஆனையடக்கி அரதோட்டி மற்றும்

(8) நட்டாலம் நீலகண்டபிள்ளை. இப்படியும் திரைபோட்ட வரலாறுகள் வெளிவரத்தான் செய்கிறது.

திருவிதாங்கோடு நாட்டின் பண்டாரப் பாளைய படைப்பிரிவில் எட்டாவதாக ஒரு நபர் இடம் பிடித்திருக்கிறார். அவர்தான் நீலகண்ட பிள்ளை என்ற தேவசாகயம் பிள்ளை. ஆரல்வாய்மொழி ஊரிலுள்ள காற்றாடி மலையில் இப்பொழுது அவர் ஆசி வழங்கிக் கொண்டிருக்கிறார். அவருக்கு முக்திபெறு பட்டத்தை வத்திகான் நாட்டு போப் வழங்கியிருக்கிறார். புனிதர் பட்டத்திற்காக கத்தோலிக்க கிறித்தவர்கள் இடைவிடாமல் செபம் செய்கிறார்கள். ஆசீர் வழங்குபவருக்கே பிரார்த்தனை செய்ததால்தான் கத்தோலிக்க தலைமைப் பீடம் புனிதர் பட்டம் வழங்குமாம்.

ஓலக்கோடு யாண், ‘காற்றாடி மழைக் காவியம்’ என்கிற நூலில், “நாட்டில் மூன்றுவகையான பண்டாரப் பாளையப் படைப் பிரிவுகளின் சிறப்பான தலைமையும் வீரதீரமிக்க போரும் ஆகும். இதில் முதலிடம் பெறுவது நாயர் படை. இது திருவிதாங்கூர் மன்னரின் தரைப்படையே ஆகும். இப்படையில் தலைமைப் பொறுப்பும், முக்கியப் பொறுப்பும் நாயர் சமூகத்தினரிடம் இருந்தது. இப்போது நாம் அருளாளராகக் கொண்டாடும் தேவசகாயம் பிள்ளையும் இத்தகைய உயரிய பொறுப்பில் இருந்தார். இவர் போரில் பயன்படுத்திய வாள், கண்டகோடரி ஆகியவை நட்டாலத்தில் இன்றும் பாதுகாப்பாக உள்ளன. இப்படையில் அனைத்துச் சமூகத்தினரும் இடம் பெற்றிருந்தனர்” என்கிறார்.

அமலகிரி அந்தோனிமுத்து, பண்டாரப் பாளைய படைப்பிரிவுகள் ஏழு வகையாக பிரிக்கப்பட்டிருந்தன என்கிறார். ஓலக்கோடு யாண், மூன்று வகையாக பிரிக்கப்பட்டிருந்தன என்கிறார். இதில் யார் சொல்வதனையும் நம்ப வேண்டிய தேவையும் வாசகர்களுக்கு ஏற்படப் போவதில்லை. ஏனெனில், அதற்குரிய ஆதாரத்தை இருவரும் கொடுக்கவில்லை. நாயர் படைகளில் நாயர்கள் மட்டும்தான் இருந்தார்கள். தேவசகாயம் பிள்ளையின் படையில் அனைத்து சாதியினரும் இருந்தார்கள் என்கிற ஓலக்கோடு யாணின் நோக்கம் அறியத்தக்கதே. தேவசகாயம், ‘சாதி கடந்த பண்பாளர்’ என உலகிற்குச் சொல்ல வேண்டும். அப்பொழுதுதானே அனைத்துக் கத்தோலிக்கர்களும் சாதி பாராமல் அவரைத் தொட்டு கும்பிடுவர்.

தேவசகாயம் பிள்ளையின் வாழ்க்கைச் சுருக்குமானது, "வேத சாட்சியின் துயரமான பாடுகள்" என்கிற தலைப்பில் கதைப் பாடலாக வெளிவந்துள்ளது. அதன் முதல் பதிப்பை கோட்டாறு கத்தோலிக்க ஆயர் இல்லத்தில் இருந்து செயல்படும், 'மறைசாட்சி தேவசகாயம் பிள்ளை புனிதர் பட்டப் பணிக்குழு' அமைப்பானது 2010-இல் வெளியிட்டுள்ளது. இப்பாடல்கள், நாடகங்களாக எழுதப்பட்டு பல்வேறு கத்தோலிக்க ஆலய திருவிழாக்களின்போது அரங்கேற்றம் செய்யப்பட்டுள்ளது.

வேத சாட்சியின் துயரமான பாடுகளைப் பாடல்களாக தொம்மந்திருமுத்து எழுதியுள்ளார். அவை ஓலைச் சுவடிகளாக இருந்ததாகவும், அதனை 2010-இல் நூலாக வெளியிட்டபோது அந்நூலில், "சேர அரசர் குல சத்திரியர்களின் கத்தோலிக்க சபையின் வாரிசான தொம்மந்திருமுத்து" என குறிப்பிட்டுள்ளார்கள். அவர் எப்படி சேர அரசர் குல சத்திரியர்களின் கத்தோலிக்க சபையின் வாரிசாக இருந்தார்? சபைகளுக்கு வாரிசு உண்டா? சேர அரசர் குல சத்திரியர்களின் கத்தோலிக்க சபை என ஒரு சபை இருந்ததா? அது எங்கே இருந்தது? போன்ற கேள்விகள் எழத்தான் செய்கிறது.

இப்பாடலின் ஆசிரியர் தொம்மந்திருமுத்து என்பவர் தேவசகாயம் பிள்ளையுடன் சிறையில் இருந்ததாக குறிப்பிட்டுள்ளார்கள். தொம்மந்திருமுத்து எதற்கு சிறைக்குச் சென்றார்? அதற்குரிய காரணம் எதுவும் அந்நூலில் சொல்லப்படவில்லை. இந்த கேள்வியை, "மறைசாட்சி தேவசகாயம் நாயர் (பிள்ளை) - தெரிந்த பொய்கள், தெரியாத உண்மைகள்" நூல் வாயிலாக கோயம்புத்தூர் பார்யோன் எழுப்பியுள்ளார். இந்த கேள்விக்கான விடையை புனிதர் பட்டத்திற்கு வேண்டி கோட்டாறு மறைமாவட்டம் உரோமிற்கு அனுப்பிவைத்த, "லாசரி வி.டி. தேவசகாயம்பிள்ளை" நூலில் உள்ளது. அதில், "இந்து கடவுள்களைக் குறித்து கவிதைகள் புனைய மறுத்துவிட்டதால் அவர் கைது செய்யப்பட்டார்" எனக் கூறப்பட்டுள்ளது. இருப்பினும், அவர் சிறையில் இருந்ததற்கான ஆதாரம் எதுவும் இல்லை. இந்த ஓலைச் சுவடி 1752-இல் எழுதப்பட்டதாக நூலின் முடிவில் கட்டத்திற்குள் எந்தவொரு குறிப்புமின்றி முடித்துள்ளார்கள்.

இந்த கதைப் பாடல்களில் பல பொய்யான தகவல்கள் உள்ளன. அதனால் அந்த சுவடியானது டி லெனாய் காலத்திற்கு பின்பாக எழுதப்பட்டிருக்க வேண்டும். டி லெனாய் மரித்ததோ 1777-ஆம்

ஆண்டு. தேவசகாயம் பிள்ளைக்கு எப்படியாவது புனிதர் பட்டம் கிடைத்துவிட வேண்டும் என்பதற்காக இப்பாடல்களின் உண்மைத் தன்மையை ஆராயாமல், கோட்டாறு ஆயர் இல்லத்திலுள்ள, 'மறைசாட்சி தேவசகாயம் பிள்ளை புனிதர் பட்டப் பணிக்குழு' இதனை நூலாக வெளியிட்டுள்ளது.

*நீலகண்டர் சிலம்பமாட; நிறையாசான் பண்டாரம்*
*காலம்கண்ட தொம்மை முத்தும்; கரைகண்டு ஆடிநிற்பர்*

*மார்த்தாண்டர் ஆட்சிபீடம்; மாபெரிய தக்கலையின்*
*கீர்த்திமிகு நாட்டினிற்கே; கிருபையோடு வரம்போன்று*

*சான்றோரும், ஆரியரும், சகலமான அந்தணரும்*
*வேண்டிடுவர் நாடுவாழ; வேதகால முறையுடனே*

*வெடிமருந்து கோட்டைகட்டி; வெண் குளச்சல் துறைமுகத்தில்*
*முடியாட்சி தனைக்காக்க; முழு துரையோர் முன்வரவே*

*தன்படையே வலிமையாக்க; தனி மருந்தின் பீரங்கி*
*வன் துணையாய் கண்டாரே வலிமையான மார்த்தாண்டர்*

*உமையம்மை ஆட்சியிலே; ஓடிவந்த நெடுங்காடன்*
*சமயம் பார்த்து அன்றே; சக்தியானார் மார்த்தாண்டர்*

*இளையடத்துச் சான்றோனின்; இனிதான சீமை தன்னை*
*தனையறுத்துச் சேர்த்துக்கொள்ள; தவங் கொண்டார்*
*மார்த்தாண்டர்*

*சீமைத்துரை ஓடிவந்தான்; சினங்கொண்டான் மன்னனிடம்*
*ஆமைவேக கோபத்தோடு; ஆடிவந்தான் குளச்சலுக்கே*

*கருங்கலையும் பிடித்துவிட்டான்; தலை நகரும் வந்துவிட்டான்*
*இருபிரிவாய் சேனையெல்லாம்; கீழ மேற்குக்கரையோரம்*

கதைப் பாடல்களில் புலவர்கள் தங்கள் கற்பனைகளை ஏற்றிப் பாடுவது வழக்கம். அப்படித்தான் இந்த நூல் முழுவதும் கற்பனை கலந்த பொய்கள் கொட்டிக் கிடக்கின்றன. மார்த்தாண்ட வர்மாவின் ஆட்சியானது கடவுளின் வரம்பெற்ற நல்லாட்சியை கொடுத்து வந்தது. சாத்திர முறைப்படி சான்றோரும், ஆரியரும், அந்தணரும் நாடு வாழ வேண்டி கடவுளின் முன்பாக நின்றனர். அதன் அருட்பயனாக

மன்னராட்சி நிலைத்து நிற்க வேண்டி, பீரங்கியின் பலத்தைப்போல் குளச்சலில் கோட்டை கட்டிட, முழு மனதோடு வெள்ளையர்கள் முன்வந்தனர்.

கடவுளின் அருளால் தனது படையை வலிமையாக்கும் வகையில் பீரங்கியின் துணையை மார்த்தாண்ட வர்மா பெற்றார் என்பது எவ்வளவு அற்புதமான கதை. குளச்சல் போரின் வெற்றிக்கு காரணம் கடவுளின் அருளாம். சான்றோரும், ஆரியரும், அந்தணரும் வேண்டிய பிராத்தனையின் பலனாம். இது ஆவிக்குரிய எழுப்புதல் கூட்டத்தில் சொல்லும் சாட்சியம்போல் இருக்கிறது. அப்படியே அதனை உண்மையென ஏற்றுக் கொண்டால் அந்த கடவுள், கிறித்தவ கடவுள் இல்லை. ஆரியரும் அந்தணரும் கிறித்தவ கடவுளை நோக்கி பிராத்திக்கவில்லை என்பதே உண்மை. இதன்மூலம் இந்துக் கடவுள்களை குறித்த கவிதை எழுத மறுத்துவிட்டதால் தொம்மாந்திருமுத்து சிறை சென்றார் என்பது சோற்றுக்குள் முழு பூசணிக்காயை மறைப்பது போன்றதாகிவிடுகிறது.

சீமைத்துரை ஓடிவந்தான். மன்னனிடம் கோபம் கொண்டான். அதன்பின்பு அமைதியான கோபத்துடன் குளச்சலுக்கு வந்து சேர்ந்தான். சீமைத்துரை எதற்கு இங்கு வந்தான்? குளச்சலில் சென்று என்ன செய்தான்? அவனும் பிராத்தனையில் பங்கு எடுத்தானா? அதன்பின்பாக எதிரிகள் எப்படி கருங்கல் பகுதியைப் பிடித்தார்கள்? தலைநகருக்கும் வந்தார்கள்? இக்கதைப்பாடலின் தலைப்பிற்கு, "நாயர், நாடார் நண்பர்கள்" என்று குறிப்பிடப்படுள்ளது. இக்கருத்து வரலாற்றுப் பூர்வமாக ஏற்கத்தகுந்த கருத்தாகவே இல்லை.

"ஆங்காங்கே படை சூழ; ஆசான்மார் குளச்சல் வந்தார்
வேங்கையென பாய்ந்து நின்று, வெடி மருந்தை பறித்தனரே

ஆங்காரத் துரையோரை; அடித்துதைத்தார் திட்டமுடன்
பாங்கான வெடிக்குழலை புடுங்கினரே ஆசான்மார்

பத்து நாள் போராரட்டம்; பல துரையோர் மடிந்திடவே
இத்தரையில் மாவீரர்; இனிய வெற்றிதான் கண்டார்

சத்தியத்தின் வேதம் காத்த; உத்தமனாம் டிலனாயை
இத்தரையின் மன்னனிடம்; இழுத்து வந்தான் நீலகண்டன்".

அனைத்து பகுதிகளிலிருந்தும் படை சூழ்ந்து ஆசான்மார்கள்

குளச்சலுக்கு வந்தனர். அவர்கள் புலிபோல் பாய்ந்து டச்சுப் படையின் வெடி மருந்துகளைப் பறித்து எடுத்தனர். அவர்களை அடித்து உதைத்தனர். குண்டு நிரப்பப்பட்ட துப்பாக்கிகளை பிடுங்கி எடுத்தார்கள்.

பத்து நாட்களாக நடந்த சண்டையில் புலிபோல் பாய்ந்தார்கள் என்பது வேடிக்கையாக இருக்கிறது. பீரங்கியை எப்படி பறித்து எடுத்தார்கள்? அவர்களின் துப்பாக்கி முனைகளை எப்படி எதிர் கொண்டார்கள்? இவர்கள் கைகளில் இருந்த ஆயுதங்கள் என்ன? அப்போரில் பலர் மடிந்தனரே, அவர்கள் யார்யார் என்பதற்கு இந்நூலில் விடை எதுவும் இல்லை.

போரில் வெற்றிபெற்ற நிலையில் டி லெனாயை நீலகண்டன் பிள்ளை இழுத்து வந்தான் என்கிற செய்தி மூலம் நாடார்களும் நாயர்களும் ஒன்றாக நின்று போரில் வெற்றிவாகை சூடினார்கள் என்கிற கதையை தொம்மந்திருமுத்து முன்வைக்கிறார். இது மதமாற்றத்திற்கு வழிவகை செய்யலாம். தேவசகாயம் பிள்ளைக்கு புனிதர் கிடைப்பதற்கும், கோட்டாறு மறைமாவட்டத்திற்கு பெருமை சேர்ப்பதற்கும் இக்கதைகள் பயன்படலாம்.

இந்நூலை எழுதிய பாடலாசிரியர் தொம்மந்திருமுத்து என்பவர் நாடார் சமூகத்தைச் சார்ந்தவர். ஒர் கத்தோலிக்க கிறித்தவர். நீலகண்ட பிள்ளை, தேவசகாயம் பிள்ளையாக கத்தோலிக்க மதத்திற்கு மதம் மாறியதால் நூலாசிரியருக்கு தேவசகாயம் பிள்ளை மீது ஒரு பாசம் ஏற்பட்டு இருக்கிறது. அதனால்தான் அவரால், “நாயர், நாடார் நண்பர்கள்” என்கிற தலைப்பை இடுவதற்கு அவரது மனம் பரந்த இடத்தினைக் கொடுத்திருக்கிறது.

சகாய அன்னையின் புதல்வியர் சபையைச் சார்ந்த அருட்சகோதரி ரோசல்லா, ‘இலக்கியங்கள் போற்றும் தியாகச் செம்மல் தேவசகாயம் பிள்ளை’ என்கிற நூலில், “மார்த்தாண்ட வர்மன் தலைமையில் திரண்ட படையினரின் ஒரு பகுதிக்கு நீலகண்டன் பிள்ளை பொறுப்பாளராக இருந்து பணியாற்றினார்” என்கிறார். ஒலக்கோடு யாண், ‘காற்றாடி மழைக் காவியம்’ என்கிற நூலில், “டிலனாயை நீலகண்டன் தலைமையிலேயே கைது செய்து அழைத்து வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது” என்கிறார்.

“தெற்கில் விழுந்த விதை” என்கிற நூலில் குமரி ஆதவன், “அருவிக்கரை

ஆலோசனை மண்டபத்தில் முக்கிய கூட்டத்தை முடித்துவிட்டு தளபதிகளுடன் போர் யுக்திகள் குறித்து ஆலோசனை செய்த மன்னர் மார்த்தாண்ட வர்மா, திருவட்டார் ஆதிகேசவன் ஆலயத்திற்குச் சென்று வாளை வைத்து பூசை செய்து குளச்சல் யுத்தத்திற்கு புறப்பட்டார். ஏழு ஆசான்கள் படைக்குத் தலைமைத் தாங்கினார். மார்த்தாண்ட வர்மாவின் போர் வீரர்கள் போர்க்களத்தில் பாய்ந்தனர். நூற்றிஎட்டு களரியின் வீரர்களும் கடலோர இளைஞர்களும் திரண்ட மார்போடும், தினவெடுக்கும் தோள்களுடனும் தீரமுடன் போர் புரிந்தனர். போர்த்துக்கீசிய சேசு சபைக் குருக்கள் இப்போரில் திருவிதாங்கூர் மக்களுக்குத் துணைநின்றனர்" என்கிறார்.

திருவட்டார் ஆதிகேசவன் ஆலயத்திற்குச் சென்று வாளை வைத்து பூசை செய்ததால்தான் வெற்றி கிடைத்தது என்றால் கிறித்தவர்கள் எல்லோரும் இந்து சமயம் திரும்புவதே நன்மையுடையதாக இருக்கும். போர்த்துக்கீசிய சேசு சபைக் குருக்கள் இப்போரில் திருவிதாங்கூர் மக்களுக்குத் துணைநின்றனர் என்பது கத்தோலிக்க பாசத்தின் வெளிப்பாடாக இல்லாமல் வேறு எவ்வகையிலும் பார்க்க முடியவில்லை. யாருமே இதுவரை பதிவு செய்யாத ஒரு செய்தியை கணித ஆசிரியர் குமரி ஆதவன் பதிவு செய்திருக்கிறார். நல்ல வகையில் மத மாற்றத்திற்கான கணக்கினைக் குமரி ஆதவன் கணித்திருக்கிறார். அதற்குக் காரணம் கத்தோலிக்க பாதிரியார்களும் குளச்சல் வெற்றிக்கு காரணம் என்று சொன்னால் அவர் சார்ந்திருக்கும் கத்தோலிக்க திருச்சபைக்கும் பெருமைதானே. அதனால் இன்னும் அவருக்கு பல பாராட்டுகள் கிடைக்கலாம்.

டி லெனாயை தேவசகாயம் பிள்ளை இழுத்து வந்தார் என்பதனை கத்தோலிக்கர்கள் அனைவரும் ஏற்றுக் கொள்ளவில்லை. அதனை முழுமையாக நம்ப வைப்பதற்கு அவர்களுடைய ஆலய திருவிழாக்களில் நாடகங்கள் தொடர்ந்து அரங்கேற்றப்பட்டு வருகிறது. ஆம்! உரோமின் தலைமை பீடத்தை ஏமாற்றிவிடலாம். "வேத சாட்சியின் துயரமான பாடுகள்" என்கிற தலைப்பில் வெளியான கதையை வரலாற்று ஆய்வாளர்கள் ஏற்பதற்கு வாய்ப்பில்லை. இக்கதையை, 'மறைசாட்சி தேவசகாயம் பிள்ளை புனிதர் பட்டப் பணிக்குழு' வெளியிட்டு இருப்பதன் மூலம் அவர்களின் உள்நோக்கம் புரிந்து கொள்ளப்படுகிறது.

## 3

## டி லெனாயை கைது செய்தவர் அனந்தபத்மநாபன் நாடார்!

முனைவர் பி. சர்வேசுவரன் மற்றும் முனைவர் எம். இம்மானுவேல் ஆகியோரின் தொகுப்பில் வெளிவந்த நூல், "மாவீரன் தளபதி அனந்த பத்மநாபன்". செவிவழிச் செய்திகள், நாட்டுப்புறப் பாடல்கள், வரலாற்று கல்வெட்டு, தொல்பொருள் இயல் மற்றும் செப்பேடு செய்திகளை ஆராய்ந்து தொகுக்கப்பட்ட ஒரு உள்நாட்டுச் செய்தியின் மீட்டிருவாக்கம் என்கிற பெயரில் இந்நூல் வெளிவந்துள்ளது. இந்நூலில், பலர் எழுதியுள்ள தமிழ்க் கட்டுரைகளும், ஆங்கில மற்றும் மலையாளக் கட்டுரைகளும் இடம்பிடித்துள்ளன.

"டச்சுக்காரர்கள் கடல்வழி வந்து டிலனாய் எனும் போர்ப்படைத் தளபதியின் தலைமையில் தாக்குதல் நடத்தினர். டச்சுப் படையினர் கிழக்கில் குமரிமுனை, கோட்டாறு பகுதிகளைப் பிடித்துவிட்டு மேற்கில் தலைநகரான கல்குளத்தை தாக்குவதற்காக குளச்சல் கடல்வழி வந்தனர். மன்னரும் படைகளும் காயங்குளம் போரில் ஈடுபட்டிருந்தமையால் அனந்தன் ஆசான்மார்களையும், அவர்களது படையினரையும் துணைகொண்டு டச்சுப்படை மீது **1741** சூலை **31**-ஆம் நாள் குளச்சலில் எதிர் தாக்குதல் நடத்தி வெற்றி பெற்றனர். டிலனாய் மற்றும் **10** டச்சுப்படை வீரர்களை போர்க் கைதிகளாகவும் பிடித்துள்ளனர்" என்கிறார் கவிஞர் இரா. அரிகரசுதன்.

மேற்படி பதிவானது. 'கன்னியாகுமரி மாவட்டம் அரசியல் சமூக வரலாறு, கன்னியாகுமரி மாவட்ட வரலாற்றுப் பேரவை' நூலில் உள்ளது எனக் கூறுகிறார் இரா. அரிகரசுதன். டச்சுப்படை முதன்முதலில் கன்னியாகுமரியை பிடித்துவிட்டு, அங்கிருந்து தரைவழியாக வந்து கோட்டாறு பகுதிகளைப் பிடித்துவிட்டு, தரைவழியாக மேற்குத் தலைநகரான கல்குளத்தைத் தாக்குவதற்கு வராமல், மீண்டும் கடற்கரைக்குச் சென்று, கடல் வழியாக கல்குளத்தைத் தாக்க குளச்சல் கடல் பகுதிக்கு வந்ததாக கதை சொல்லப்படுகிறது. **10** டச்சு வீரர்களை போர் கைதிகளாக பிடித்தனர் என்கிற தகவலோடு, **24** டச்சு வீரர்களை போர் கைதிகளாக பிடித்தனர்

என்கிற தகவலையும் அரிகரசுதன் முன்மொழிகிறார். இதன்மூலம் அவருக்கு இதனை ஆய்வு செய்வதற்கான பொறுமை இல்லை என்பதனையே இது காட்டுகிறது.

"கடற்கரை ஓரத்தில் பனை மரங்களை வெட்டி, மாட்டு வண்டிகளில் அடுக்கியும், அருகில் மனித பொம்மைகள் வைத்தும், 'இவ்வளவு பீரங்கிகள் இருக்கின்றனவா?' என டச்சுப் படையினர் இடையே குழப்ப மனநிலையை உருவாக்கியும் உண்மையான வீரர்கள் பனந்தடிகளுக்குப் பின்னே ஒளிந்திருந்து யுத்தம் செய்து அவர்களை வெற்றி பெற்றிருக்கிறார்கள்" என்கிறார் இரா. அரிகரசுதன். மனித பொம்மைகளை வைத்து அவைகளை மனிதர்களாகவும், பனந்தடிகளை வைத்து அதனை பீரங்கிகளாகவும் காண்பித்து டச்சுப் படையினரை ஏமாற்றி இருக்கிறார்கள். டச்சுப் படைகளும் அதனை உண்மையென நம்பி ஏமாந்து இருக்கிறது. குழந்தைகளுக்குக் கதை சொல்வதாக இருந்தால் இப்படித்தான் கச்சிதமாக கதைச் சொல்ல வேண்டும்.

"அப்போது பனந்தடிகளுக்கு அருகில் நிற்க வைக்கப்பட்டிருந்த பொம்மை வீரர்கள் விழுவதைக்கண்டு மகிழ்ச்சியில் கரை நோக்கி வந்தவர்கள் தாக்கப்பட்டு டிலனாய் மற்றும் உயிரோடிருந்த ஏனைய வீரர்களும் கைது செய்யப்பட்டுள்ளனர்". பயிர், கம்பு, சோளம் விளையும் நிலத்தில் பறவைகளை விரட்டுவதற்காக உயரமான கழியில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் துணி அல்லது வைக்கோல் அடைத்த மனித உருவத்தை ஒத்த பொம்மைகளை இங்கே வைத்தனர். அதனை மனிதர்கள் எனக் கண்டு, கடலில் இருந்து பீரங்கிகளாலும், துப்பாக்கிகளாலும் சுட்டு வீழ்த்தியிருக்கிறார்கள்.

தொலைநோக்கி வழியாகப் பார்த்தபோது, வீரர்கள் அனைவரும் செத்து மடிந்து கிடப்பதனை கண்டார்கள். உடனே மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்த அவர்கள் கப்பலில் கரைக்கு வந்திருக்கிறார்கள். அவர்களை திருவிதாங்கூர் படை அதிரடியாகத் தாக்கி இருக்கிறது. அதில், பலர் உயிரிழந்து உள்ளனர். டிலெனாய் மற்றும் உயிரோடு இருந்த வீரர்களை கைது செய்து மன்னரிடம் ஒப்படைத்து உள்ளனர். இதற்கு ஆதாரமாக, "தக்கலை பத்மனாபபுரம் அரண்மனை காட்சியகத்தில் இச்செய்திப் பொருளில் ஓர் ஓவியம் உள்ளது" என்கிறார் இரா. அரிகரசுதன். இதைவிட சிறந்த ஆதாரத்தை வேறு எங்கும், எவ்வகையிலும் கண்டடைவது கடினம்தான்.

பத்மநாபபுரம் அரண்மனையில் இருக்கிற ஓவியத்தை பலர் பார்த்திருக்கக்கூடும். “பத்மநாபபுரம் அரண்மனை வளாகத்தில் உள்ள அருங்காட்சியத்தில் ஓர் ஓவியம். கடற்கரையில் நாற்காலியில் வீரமார்த்தாண்ட வர்மா வீற்றிருக்கிறார். எதிரே டி லெனாய் மண்டியிட்டு சரணாகதி அடைகிறார். இது குளச்சல் கடற்கரையில் டச்சு வீரர்களுடன் டி லெனாய் சரணாகதி அடையும் காட்சி என விவரிக்கப்படுகிறது. இந்த ஓவியம் நூறு ஆண்டுகளுக்குள்தான் வரையப்பட்டிருக்க வேண்டும்” என்கிறார் செந்தீ நடராசன். அதுதான் உண்மையாக இருக்கக்கூடும். டி லெனாய், டச்சு வீரர்களைப் போன்று ஒரு சாதாரண வீரன். அவர் அப்பொழுது ஓர் தளபதி அல்ல.

“டச்சுக்காரர்களைப் பயமுறுத்தும் நோக்குடன் குளச்சல் கடற்கரைப் பகுதிகளில் டச்சுப் படையினர் காணும் வகையில் கட்டைமாட்டு வண்டிகளின்மீது முழு பனைமரத் தூண்களை வைத்து பீரங்கிகள்போல் காட்சியளிக்கச் செய்தும், கடற்கரையில் இருந்த கட்டுமரங்களில் தீ கம்பங்களைக் கட்டி எரிய வைத்தும், பெரும் படையுடன் திருவிதாங்கூர் படையினர் எதிரிகள்மீது பீரங்கி தாக்குதலுக்குத் தயாராவதாக காட்டிக் கொண்டனர். இதனைக் கண்ட எதிரிப் படையினர் பயத்தின் மிகுதியால் பிரமையடைந்து பின்வாங்கி சரணடைந்தனர்” என குமரி மாவட்ட பணி நிறைவு பெற்ற தாசில்தார் சுந்தர சார்ச், “அனந்த பத்மநாபனின் இராச தந்திரமும் மன்னரின் வெற்றியும்” என்கிற கட்டுரையில் குறிப்பிடுகிறார். பயந்தவர்கள் அப்படியே கப்பலை இலங்கைக்கு கொண்டு சென்றிருக்கலாம். அவர்களுக்கு மிகுதியான பயம் ஏற்பட்டதால் பிரமையடைந்து சரணாகதி அடைந்துள்ளனர். என்ன, வித்தியாசமான குதிரை ஓட்டம்.

மாவீரன் அனந்த பத்மனாபனின் வாரிசாக தன்னை அறிமுகப்படுத்துகிற கே.பி. வரதராசன், “குளச்சல் போர்” என்கிற நூலில் இந்த பனந்தடி கதைகளை முற்றிலும் பொய் என்கிறார். அவரும் இந்நூலில், “தளபதி அனந்த பத்மநாபனுக்கு கரம் ஒழிவு தானமாக மன்னன் மார்த்தாண்ட வர்மா அளித்த சொத்து விவரங்கள்” மற்றும் “அனந்தனின் பத்தாவது வாரிசான குமரிக் கவிஞர் கே.பி. வரதராசன் அரசாங்க அலுவலர்களுக்கு சமர்பித்த மனு” என இரண்டு கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

இப்போரில் மீனவர்களின் பங்களிப்பு குறித்து இரா. அரிகரசுதன், “இப்போரில் குளச்சல் பகுதிவாழ் மீனவர்களும் அனந்தன் படையுடன்

இணைந்து போர் புரிந்ததாக வாய்மொழித் தகவல்கள் இருப்பதாக கவிஞர் தொ. சூசைமிக்கேல் அவர்கள் கூறுகின்றார்" என பள்ளம்துறை மீனவர் ஒருவரையும் ஆதாரம் ஆக்கியிருக்கிறார். யார் யார் போரில் கலந்து கொண்டார்கள் என்பது இரா. அரிகரசுதனின் கட்டுரையில் வெளிப்படவில்லை. யாரோ கட்டுரை எழுதிக் கேட்டிருக்கிறார்கள். அவரும் ஆசைப்பட்டு கட்டுரை எழுதிக் கொடுத்திருக்கிறார்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் நவீன கால வரலாற்றுத்துறை பேராசிரியராக பணிபுரிந்த பி. சர்வேசுரன், 1982-ஆம் ஆண்டு ஒட்டன் கதைப் பாடலை நூலாக பதிப்பித்து இருக்கிறார். இந்த கதைப்பாடல் 1850-க்கு முன்னரே எழுதப்பட்டதாக அவருடைய நூலில் குறிப்பிடுகிறார். இக்கதைப்பாடலில் அனந்த பத்மநாபன் தளபதியாக பணி செய்ததாக தெரிவிக்கப்படவில்லை.

"தீரன் அனந்தனை வருத்தி இறையிலி
நிலங்கள் பட்டயமும் கொடுத்து
அனந்த பல்பனாபன் என்ற பெயரும் சூட்டி
அரண்மனையில் அவர் சொந்த பாதுகாவலாக்குகிறார்".

இப்பாடலில் வரும், 'சொந்த பாதுகாவலர்' என்பது 'மெய்க் காவலர்' என்பதனையே குறிக்கும். இப்பொழுது பேசும் தமிழ் வழக்கில் சொல்ல வேண்டுமென்றால் பாதுகாப்புக்கான அடியாள். பாதுகாவலர் என்பதனை படைகளின் தளபதி என்று சொல்வதற்கு வாய்ப்பே இல்லை. மன்னரைச் சுற்றி பல பாதுகாவலர்கள் இருப்பார்கள். அனந்த பத்மநாபனை அரண்மனையில் அவரது சொந்த பாதுகாவலர் ஆக்கினார் என்றால் கோட்டைக்குள் மன்னரின் பாதுகாவலரின் ஒருவராகத்தான் எடுத்துக் கொள்ள முடியும்.

கே.பி. வரதராசனிடம் இருக்கும் செப்பேட்டில், "கண்ணனூர் தேசத்து தச்சன்விளையில் பிரம்மகுல சத்திரியன் அனந்த பத்மனாபனுக்கு கரமொழிவாக விட்டுக்கொடுத்த பூமியாவது: நீ நம்முடைய உற்ற பெந்துவும், வலது கைய்யுமாகவே தினம் தினம் ராப்பகல் ஊணும் உறக்கமும் ஒழிஞ்னு நம்முடைய குணதோசங்களின் பங்கு கொண்டும் ஒரு மெய்யாம் நின்று சத்துரு நிக்கிரகத்திலும் படையோட்டங்களுக்கும் மனசறிஞ்னு சகாயிச்சும் பலப்பொழுதும் தம்முடைய சீவனை ரெக்சிச்சு நடந்து வந்திருந்த மகிமையையும் தீர்தையையும் அடிசதானதாக்கி தமக்குண்டான அதிரற்ற சந்தோசத்தினால் கரமொழிவாக விட்டு கொடுக்கிறேன்" என்று

சொல்லி பேச்சிப்பாறை அருகாமையிலுள்ள ஏராளமான நன்செய் புன்செய் நிலங்களை அனந்த பத்மநாபனுக்கு செப்பேடாக மன்னர் அளித்துள்ளார். அதில், கணக்கு மல்லன் சங்கரன் ஒப்பு செய்துள்ளார். இதிலும் அனந்த பத்மநாபனை தளபதியாக குறிப்பிடவில்லை. அத்துடன் மன்னரின் உயிரை காப்பாற்றியதற்காகவே உதவி செய்ததாகவே வருகிறது.

'வேணாட்டு பண்பாட்டு மையம்' நிறுவனரும் சமூகவியலாளருமான தக்கலை பென்னி, 'ஒரு மறைக்கப்பட்ட வரலாற்றின் மீட்டுருவாக்கம்' என்கிற கட்டுரையில், "அனந்த பத்மநாபனின் படை எதிரிகளைப் பந்தாடியது. அவர் வகுத்த வியூகங்கள் வெற்றியை எளிதாக்கியது. தம்பிமார்களும் ஆதரவாளர்களும் ஒடுக்கப்பட்டனர். தம்பிமார் மற்றும் அவர்களின் ஆதரவாளர் குடும்பத்துப் பெண்களை கண்ணனூர் சாம்பவர்களுக்கும், குளச்சல் முக்குவர்களுக்கும் கட்டி வைத்து சிறுமைப்படுத்தினர். அக்காலத்தில் சமூகத்தின் மிகத்தாழ்ந்த படிநிலையில் மேற்சொன்ன இரு குலங்களும் வைக்கப்பட்டிருந்தன என்பதனை நினைவில் கொள்ள வேண்டும்" என்கிறார்.

சமூகவியலாளர் எனச் சொல்லும் தக்கலை பென்னி, சாதி மயக்கத்தில் இருந்து இன்னும் மீண்டு எழவில்லை. அதனால்தான் அவரால், "தம்பிமார் மற்றும் அவர்களின் ஆதரவாளர் குடும்பத்துப் பெண்களை கண்ணனூர் சாம்பவர்களுக்கும், குளச்சல் முக்குவர்களுக்கும் கட்டி வைத்து சிறுமைப்படுத்தினர்" என எழுத முடிகிறது. தக்கலை பென்னி, கிறித்தவ நாடார் சமூகத்தைச் சார்ந்தவர். குமரி மாவட்டத்தில், பெரும்பாலான முக்குவர்களும் சாம்பவர்களும் கிறித்தவ சமயம் தழுவியிருக்கிறார்கள்.

பொதுவாக இலக்கியத் தளத்தில் இருப்பவர்களுக்குத்தான் சாதி வெறி அதிகம். இலக்கியவாதி என்கிற முறையில் அச்சாதிவெறி தக்கலை பென்னியிடம் இருப்பதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. அன்றைய காலத்தில் நாடார், முக்குவர், சாம்பவர் எல்லோரும் கீழ்நிலை சாதியினர்தான். நாடார் பெண்கள், முக்குவப் பெண்களைப் போன்று கட்டிச் சேலை கட்டி மார்பை மறைத்துக் கொள்ளலாம் என உத்தரவிட்ட மகாராணியின் ஆணையை தக்கலை பென்னி வாசிக்கவில்லை எனக் கருதுகிறேன். "தோள்ச்சீலைப் போராட்டம்" என்கிற கட்டுரையில் முகிலை இராசபாண்டியன் இந்த வரலாற்று செய்தியை நினைவுபடுத்தி இருக்கிறார்.

“கிறித்தவ சாணார்ப் பெண்களைப்போல இந்து சாணார் பெண்கள் ஒரு ரவிக்கை போடுவதிலோ அல்லது எல்லாச் சாணார் பெண்களும் ஒரு முரட்டு உடை அணிந்து முக்குவச்சிகள்போல் சுற்றிக் கட்டிக் கொள்வதிலோ, தங்கள் மார்புகளை வேறு எந்த வகையிலும் மறைப்பதிலோ எவ்வித எதிர்ப்பும் இல்லை என்று இதன்மூலம் நாம் பிரகடனப்படுத்துகிறோம். அனால், அவர்கள் மேல்சாதிப் பெண்களைப்போல் அணியக்கூடாது” (நாகம் அய்யா: 531). இந்தப் பிரகடனம் கிறித்தவ நாடார்களைப்போல் உடை அணியும் உரிமையை இந்து நாடார்களுக்குத் தந்ததே தவிர மொத்தமாக நாடார்கள் எதிர்பார்த்த சாதிய சமத்துவத்தைத் தரவில்லை.

“டச்சுப் படையை வென்ற உதயமார்த்தாண்டன்” என்கிற நூலில், பேராசிரியர் கே. திரவியம், “மன்னர் மார்த்தாண்ட வர்மாவுக்கு ஓயாது தொல்லைகள் பல கொடுத்ததால், அவரைக் கொல்ல சதித் திட்டம் தீட்டியதால், நாட்டில் கலகம் விளைவித்து அமைதியைத் தொலைத்ததால் அவற்றிற்கு காரணமாயிருந்த எட்டுவீட்டு பிள்ளைமார்களின், நாயர்களின் பெண்களை தேச பக்தர்களான மீனவர்களுக்கு திருமணம் முடித்து வைத்தார் மன்னர் மார்த்தாண்டவர்மா. மேலும், சந்தைகளில் மீன் வைப்பதற்கான போதிய வசதிகளையும் இன்னும் நன்செய் நிலங்களையும் அளித்தார்” என்கிறார்.

ஒரே சம்பவம்தான். தக்கலைப் பென்னியின் மூளையும், கே. திரவியத்தின் மூளையும் எப்படி இயங்குகிறது என்பதனை கண்கூடாகப் பார்க்க முடிகிறது. இரண்டுபேரும் நாடார்கள்தான். தக்கலை பென்னி சொல்கிறார், குளச்சல் மீனவர்களுக்குக் கட்டி வைத்து சிறுமைப்படுத்தி விட்டனர். பேராசிரியர் கே. திரவியம் சொல்கிறார், தேச பக்தர்களான மீனவர்களுக்கு திருமணம் முடித்து வைத்து பெருமைபடுத்தினார். இந்த நாயர் பெண்களை முக்குவர்களுக்கும், சாம்பவர்களுக்கும் திருமணம் செய்து வைத்ததால் தக்கலை பென்னியின் மனம் பாதிப்புக்கு உள்ளாகி இருக்கிறது; புண்பட்டு இருக்கிறது என்பதனை அறிய முடிகிறது. ஒருவேளை தக்கலை பென்னி சார்ந்த கத்தோலிக்க நாடார்களுக்கு திருமணம் செய்து வைத்தால் சரியாக இருந்திருக்கலாம் என்பதும் அவரின் யூகமாகக்கூட இருக்கலாம்.

இந்த நாயர் பெண்கள் யார் என்பதனை ஆங்கிலத்துறை பேராசிரியரும் இந்து நடாருமான கே. திரவியம் சொல்கிறார்: “இந்த பப்புத் தம்பியின்

பரம்பரை என்ன? சுசீந்திரம் கோவிலில் நடனமாடி பிறகு மன்னனையே கவர்ந்து விட்டாள். அந்த தேவதாசிக்கும் மன்னனுக்கும் பிறந்த பயக்கள்தான் இந்த பப்புத்தம்பி இராமன்தம்பி. இதைத்தான் ஊர் பேசுது. மதுபானப் பிரியர்களான நம்மவர்கள் நாயர் பெண்களின் அழகிலே சிக்கினர். போர்க் குணம் இழந்தனர்". நாடார்கள், ஏற்கனவே இந்த நாயர் பெண்களின் அழகினிலே மயங்கி போர்க் குணத்தை இழந்து விட்டார்களாம். இதற்கு மேலும் தக்கலை பென்னிக்கு இதுத் தேவையா?

"தம்பிமார்களும் அவர்களின் சொந்தக்காரர்களுமான எட்டுவீட்டு பிள்ளைமார்கள் அதாவது மன்னனின் எட்டு வீடுகளிலுள்ள வைப்பாட்டிகளின் பிள்ளைகள்". அப்படிப்பட்ட இவர்கள், "இப்பொழுது மார்த்தாண்ட வர்மாவை கொன்றுவிட தீர்மானித்துள்ள பப்புத்தம்பி, இராமன்தம்பி. எட்டுவீட்டு பிள்ளைமார்களுக்கு உதவியாக நம்பூதிரி பிராமணர்களும், குறுப்புமார்களும், கிருசுண வகையறா என்று கூறுபவர்களும் இருந்தார்கள்; ஆதரவளித்தார்கள்" என்கிறார் கே. திரவியம்.

ஏற்கனவே, மது பானத்தில் தன்னிலை இழந்தும், நாயர் பெண்களில் அழகில் மயங்கி போர் குணத்தை இழந்த நாடார்கள். பப்புத்தம்பி இராமன்தம்பி ஆகிய, "இவன்களுக்கு ஆதரவாக நம்மவர்களின் சில அஞ்சாம் படைகளும்" என ஒரு பட்டியலை கே. திரவியம் கொடுக்கிறார். நம்மவர்கள் என்பது பேராசிரியர் கே. திரவியம் சார்ந்திருக்கும் நாடார் சாதியினைக் குறிக்கிறது. அப்படியிருக்கையில் எட்டுவீட்டு பிள்ளைமார்களின் மனைவிகளையும், பெண்களையும் முக்குவர்களுக்கும் சாம்பவர்களுக்கும் கொடுப்பதுதானே சிறப்பாக இருந்திருக்க முடியும் தக்கலை பென்னியாரே.

பொ. காசி உதயம், "பகவான் வைகுண்ட சுவாமிகள் வரலாறு" என்கிற நூலில் அன்றைய காலகட்டத்தில் நடந்த சமாதானப் பேச்சு வார்த்தைக் குறித்து எழுதுகிறார். அதில், "திருவிதாங்கூர் அரச பரம்பரையினரின் வாரிசு முறை பெண் முறையானது. அங்ஙனம் பெண் முறை வாரிசானதற்கான காரணம் கூறுகையில், பதவியில் இருக்கும் மன்னர் எந்த சாதிப் பெண்ணையாவது காதலித்து மணந்து அப்பெண் மூலம் பிறக்கும் குழந்தைக்கு வாரிசு முறை ஏற்படுவது இராச வம்சத்தின் புனிதத்திற்கே இழுக்காகும் என்பதால்தான் 'மருமக்கள் வழி' என்ற பெண் வாரிசு முறை ஏற்படுத்தப்பட்டது"

என்று இராமையர் கூறினார். அதற்கு மறுமொழியாக, மக்களிடம் அபிப்பிராயம் கேட்டபின் முடிவு கூறுவதாக அழகப்ப முதலியார் கூறினார். அதன்படி மக்கள் பிரதிநிதிகளின் வாக்கு மூலங்களை முதலியார் கேட்டார். நாடார் குல மக்களைத் தவிர இதர சாதியினர் மார்த்தாண்ட வர்மாவுக்கு ஆதரவு கொடுத்தனர். "நாடார் குல மக்கள் மட்டும் பப்புத் தம்பிக்காக வாக்குமூலம் கொடுத்தனர்".

அழகப்ப முதலியார் தம்பி சகோதரர்களை அழைத்தார். "உங்கள் தரப்பில் நியாயம் இருக்கிறது. எனினும் பெரும்பான்மை மக்கள் மார்த்தாண்ட வர்மாவின் அரசுரிமையை விரும்புவதால் நாம் மக்கள் சக்திக்குப் பணிந்தாக வேண்டும். சரியோ? தப்போ? பெரும்பாலானோர் விரும்புகிறார்கள். அவர்களுக்குப் பணிவதுதான் சனநாயகம். எனவே, இனி இந்த விவகாரத்தை விடுவோம்" என்று உபதேசம் செய்துவிட்டு முதலியார் அவருடைய சேனைகளுடன் திருநெல்வேலிக்குச் சென்றுவிட்டார்.

இருப்பினும், "மார்த்தாண்ட வர்மாவுக்கு இப்போதும் பயம் அகன்றதாக இல்லை. நாடார் குல மக்களின் உதவியுடன் பப்புத் தம்பி மீண்டும் கலகத்தை உண்டு பண்ணிவிடுவாரோ என்று சந்தேகப்பட்டார். எப்படியும் நாடார்களை அடக்க வேண்டும் என்பதற்காக இராமையர் மூலம் திருநெல்வேலி, செங்கோட்டை முதலிய இடங்களில் இருந்து ஆயிரக்கணக்கான மறவர்களை திருவிதாங்கூர் பட்டாளத்திற்காகத் தேர்ந்தெடுத்தார்" என்கிறார் பொ. காசி உதயம்.

இருப்பினும், பயந்துபோன மன்னர் மார்த்தாண்ட வர்மா என்ன செய்வதெனத் தெரியாமல் திக்குமுக்காடினார். இதனால் அவர், "நாடார் சமுதாயத்தில் பெண் எடுக்கவும் முயற்சி செய்தார். மருமக்கள் தாயக் கூட்டத்துடன் எந்தவித தொடர்பும் கொள்ள நாடார் சமுதாயப் பிரமுகர்கள் மறுத்துவிட்டனர்". ஏனெனில் நாடார்கள் அப்பொழுது ஒற்றுமையாக இருந்தனர். பெரு எண்ணிக்கையில் இருந்தனர். இதனை சமாளிக்க விவசாயிகளுக்கு பொன்னு ஆணை, புத்தன் ஆணை ஆகிய இரு அணைகளை மார்த்தாண்ட வர்மா கட்டியதாக பொ. காசி உதயம் குறிப்பிடுகிறார்.

இவையெல்லாம் நடந்த சில மாதங்களுக்குப் பிறகு, மார்த்தாண்ட வர்மா நாகர்கோவிலில் உள்ள அவரது அரண்மனையில்

தங்கியிருந்தார். "ஒருநாள் காலை பப்புத் தம்பி மன்னரிடம் தனது மரியாதை வணக்கத்தை தெரிவிக்க அரண்மனை வந்தார். அவரது தம்பி இராமன் தம்பியும் பப்புத் தம்பியுடன் வந்திருந்தார். பப்புத் தம்பி நேராக அரண்மனைக்குப் பிரவேசித்தார். உடனே அங்கு நின்ற காவலாளி பப்புத் தம்பியத் தடுத்தார். 'எனது மைத்துனரைப் பார்ப்பதற்குத் தடையா?' என்று கம்பீரமாக கர்சித்தார். காவலாளிகள் தடுத்தனர். அந்த அவமானத்தைத் தாங்க முடியாமல் பப்புத் தம்பி தனது உடைவாளை உருவினார். அவ்வளவுதான், பக்கத்தில் இருந்த மற்றொரு காவலாளி தனது வாளினால் பப்புத் தம்பியைக் குத்திவிட்டார். 'ஐயோ!' என்று இரத்தம் பீறிட பப்புத் தம்பி அந்த இடத்திலே மாண்டார்".

"இந்தப் பரிதாப சம்பவத்தைப் பார்த்துக் கொண்டிருந்த இளைய சகோதரர் இராமன் தம்பியின் ஈரல் குலை துடித்தது. தன் கண் முன்னாலேயே அக்கிரமாக அண்ணன் சித்திரவதை செய்யப்படுவதை யாரால்தான் சகிக்க முடியும். இராமன் தம்பி உடனே கோபவேசம் கொண்டு, 'விர்'ரென மாடிப் படியில் ஏறி ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்து கொண்டிருந்த மார்த்தாண்ட வர்மா மீது தமது வாளை ஓங்கிக் குத்தினார். ஆனால் இராமன் தம்பியின் குறி தவறி, உயரே உள்ள மரக்கட்டையில் தட்டி தங்கிக்கொண்டது. இதற்கிடையில் தட்டிய வாளை உருவுவதற்குள் திகைப்படைந்திருந்த மகாராசா தன் உணர்வு பெற்று, தன்னிடமுள்ள வாளுடன், இராமன் தம்பியின் மார்பில் பாய்ந்தார். இராமன் பிள்ளையை கீழே தள்ளி தமது பாரசீக உடை வாளால் மார்பில் இரத்தம் ஓடக் குத்திக் கொன்றார். பிறகு பிரேதத்தை வாரி சன்னல் வழியாக வெளியே விட்டெறிந்தார்... பிரேதம், 'தொம்' என்று வெளியே விழுந்ததை அனைவரும் கண்டனர். தம்பி சகோதரர்களுக்கு ஆதரவாக உள்ளவர்கள் உடனே ஓடிவிட்டனர். மலையாளிகள் மட்டும் நின்று, 'மார்த்தாண்ட வர்மாவுக்கு சே!' என முழங்கியவாறு ஆரவாரம் செய்து கொண்டிருந்தனர்" என்கிறார் பொ. காசி உதயம்.

இந்நிலையில் மார்த்தாண்ட வர்மாவின் அட்டூழியம் வன்மம் எடுத்தது. இதனால் பயந்துபோன நாடார்களில் பலர், "இந்திய தேசத்தைவிட்டு ஓடி இலங்கையில் குடியேறினர்" என்கிறார் பொ. காசி உதயம். "நாடார்கள் இலங்கையிலிருந்து இந்தியா வந்தனர்" என்கிறார் கால்டுவெல். யார் சொல்வது சரியென இந்த இடத்தில் நாடார்கள்தான் முடிவெடுக்க வேண்டும்.

பொ. காசி உதயம் இவ்வாறாகத் தொடர்கிறார்: “அப்போது இலங்கையில் டச்சுக்காரர்கள் படையுடன் முகாமிட்டிருந்தனர். அவர்கள் நாடார்களின் சோகக் கதைகளைக் கேட்டனர். தென் திருவிதாங்கூரில் பெரும்பான்மையினரான நாடார் குல மக்கள் மன்னருக்கு எதிராக இருக்கும் இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்த அவர்கள் திட்டமிட்டனர்”. டச்சுக்காரர்கள் ஏன் குளச்சலைக் கைப்பற்ற நினைத்தார்கள் எனப் பொ. காசி உதயத்தின் மனப்பால் வாசகர்களால் புரிந்துகொள்ள முடியுமென நினைக்கிறேன்.

“மாவீரன் அனந்தபத்மநாபன்” என்கிற கட்டுரையில், “சாதி அளவில், சாணார்கள் மன்னரை ஆதரிக்கவில்லை. மக்கள் தாயத்துக்கு ஆதரவாக அவர்கள் தம்பிமாரை ஆதரித்தார்கள். தம்பிமார் வீழ்ச்சி அடைந்ததும், வெற்றிகொண்ட மருமக்கள் தாயத்தினர் மக்கள் தாயத்தினரை ஒடுக்கினர். இந்த ஒடுக்குமுறை சாணார்கள் மீதும் பெரும் இடியாக விழுந்தது” என்கிறார் சாகித்திய அகாதமி விருதுபெற்ற நாவலாசிரியர் பொன்னீலன். இதன்மூலம் எண்ணற்ற நாடார்களை மார்த்தாண்ட வர்மா கொன்றிருக்கிறார்.

“மார்த்தாண்ட வர்மாவால் கொல்லப்பட்ட பப்புத்தம்பி, இராமன்தம்பி ஆகியோர் இம்மாவட்டத்தில் இருபதுக்கும் மேற்பட்ட ஊர்களில் இன்றும் தெய்வங்களாக வழிபடப்படுகின்றனர். வழிபாடு நடத்துகிறவர்கள் பெரும்பாலும் அடித்தள நாடார்கள் அல்லது பழைய சாணார்களே” என்கிறார் பொன்னீலன். இக்கட்டுரையை அனந்த பத்மநாபனின் முன்னூற்றி நான்காவது பிறந்தநாள் விழாவின்போது கண்ணனூர் தச்சன்விளையில் வைத்து பொன்னீலன் வாசித்தபோது அக்கூட்டத்தில் தக்கலை பென்னியும் இருந்துள்ளார். பென்னியும் அக்கூட்டத்தில் உரையாற்றி இருக்கிறார்.

மார்த்தாண்ட வர்மாவுக்கும் தம்பிமார்களுக்கும் இடையே நடைபெற்ற அதிகார மோதல் மருமக்கள் தாயத்துக்கும், மக்கள் தாயத்துக்கும் இடையே நடைபெற்ற சண்டையாக மாறியது. இதில் நாடார்கள் சிலர் இரு குழுக்களிலும் இடம்பெற்றனர். மக்கள் தாயத்தினரின் வீழ்ச்சியால் அதில் இடம்பெற்ற நாடார்களும் கொல்லப்பட்டார்கள். தம்பிமார்களுக்கு கோயில் கட்டி வழிபாடு நடத்துபவர்கள் நாடார்கள். இப்பொழுது தக்கலை பென்னிக்கு கொஞ்சமாவது விளங்கி இருக்கும்.

தக்கலை பென்னியைத் தொடர்ந்து, 'சாய்வு நாற்காலி' நாவலுக்காக சாகித்திய அகாதமி விருதுபெற்ற தோப்பில் முகம்மது மீரான் அந்நூலில் முக்குவர்கள் குறித்து என்ன சொல்கிறார் எனப் பார்ப்போம்: "எட்டு வீட்டுப் பிள்ளைகளையும், மாடம்பிகளையும் பிடித்து தூக்கில் தொங்கவிட அரச கட்டளை பறந்தது. பிராமணர்களான பண்டாரங்களை இறைபாபத்தை எண்ணி கொலை செய்யாமல் நெற்றியில் வாள் முனையில் நாய்க்கோலம் வரைந்து விடவும் கட்டளைப் பிறந்தது. இவற்றோடு சினம் தணியாத அரசர் எதிரிகள் வம்சத்தை கூண்டோடு அழிப்பதற்காக எதிரிகளின் மனைவிகளையும், பெண் குழந்தைகளையும் மீனவர்களான முக்குவர்கள் கையில் பிடித்துக் கொடுத்து வம்ச நாசம் செய்ய முடிவு கட்டினார். அரண்மனைகளின், தறவாடுகளின், சுற்றுச் சுவருக்குள் வாழ்ந்து, அந்தச் சூழலை மட்டுமே தெரிந்துகொண்ட அந்தபுர அப்பாவிப் பெண்கள், தங்களை ஆட்டு மந்தையைப்போல் தெரு வழியாக நடத்தி மாற்று மதத்தைச் சார்ந்த ஈன சாதியினரிடம் பிடித்துக் கொடுக்க போவதறிந்து மனம் வெடித்து மாண்டனர். சிலர் தற்கொலை செய்து கொண்டனர். இன்னும் சில பெண்களும் கன்னியர்களும் ஊரையும் நாட்டையும் விட்டோடி எங்கெல்லாமோ நிராதரவாளர்களாக வாழ்ந்து பட்டினியால் வாடிச் செத்தனர். பெரும்பான்மையினர் பிடிபட்டனர். பிடிபட்டவர்களை பொது இடத்தில் வைத்து முக்குவர்களுக்குக் கொடுத்தனர்".

யார் இந்த ஈன சாதி? கிறித்தவ மதத்தைச் சார்ந்த முக்குவர்கள். இந்த ஈன சாதியினரை திருமணம் செய்வதைவிட செத்துப் போயிடலாம் என பலர் தற்கொலை செய்து கொண்டனர். பலர் தப்பியோடி பட்டினியால் மரித்துப் போயினர். பப்புத் தம்பியுடன் இணைந்து கிளர்ச்சி செய்த கிளிமானூர் மன்னர் குடும்பத்திலிருந்து வந்த கிருசுணன் தம்புரானின் மனைவி கார்த்திகை தம்புராட்டி என்பவள் கிறித்தவ முக்குவனுக்கு மனைவி ஆக விரும்பாமல் மன்னரிடம் நேருக்கு நேர் பேச விரும்புகிறாள்.

அவள் மன்னரிடம், "அடியேனைப் பொது இடத்தில் வைத்து பல்லாயிரக்கணக்கான மக்கள் முன்னிலையில் தூக்கில் தொங்கவிட்டு துடிக்க வைத்து கொல்ல வேண்டுகிறேன். ஆனால் திருவுளம் கனிந்து பிற பெண்களையாவது அந்நிய மதத்தைச் சார்ந்த ஈன சாதியினரிடம் கொடுக்காமல் அவர்களுக்கு மன்னிப்பருளி அவர்களை இந்துக்களாக வாழ அருள் புரிய வேண்டும்" என்கிறாள். யார் இந்த ஈன சாதி? கிறித்தவ மதத்தைத் தழுவிய முக்குவர்கள். அப்படி என்றால்

கிறித்தவரான தக்கலை பென்னியும், முசுலிமான தோப்பில் முகம்மது மீரானும் ஈன பிறவிக்குள்தான் பிரசவித்து இருக்கிறார்கள். வாருங்கள் கதையை தொடர்வோம். ஆம்! அவள் ஈன சாதிக்காரனுக்கு மனைவி ஆகாமல் குளத்தில் மூழ்கி மாயமானாள்.

அடுத்த கட்டுரையில் எட்டுவீட்டு பிள்ளைமார்களின் மனைவிகளையும், பெண்களையும் யாருக்கு கொடுத்தால் நன்றாக இருக்கும் என்பதனை தக்கலை பென்னியே எழுதலாம். தக்கலை பென்னி என்பவர் சிறந்த ஆய்வாளர் என அவரைச் சுற்றி உள்ளவர்கள் பேசிக் கொள்கிறார்கள். அதனால் அவர் அடுத்த கட்டுரையில் நிச்சயமாக இதற்கான பதிலை எழுத்துப்பூர்வமாக கட்டுரை வடிவில் அறியத் தருவார் என எதிர்பார்க்கிறேன்.

"குளச்சல் போர்" என்கிற நூலை தச்சன்விளை கே.பி. வரதராசன் எழுதியிருக்கிறார். இந்நூலை எழுதிய கே.பி. வரதராசன், இராமைய்யன் தளவாயைவிட அனந்தன் பத்மநாபனை மிகப் பெரியவராக சித்தரிக்கிறார். **1736**-இல் தளவாய் ஆறுமுகம் பிள்ளையும், **1738**-இல் அவரது தம்பி தளவாய் தாணு பிள்ளையும் மரித்தவுடன் கொட்டார இராயச கணக்கராக இருந்த இராமைய்யனை தளவாயாக நியமனம் செய்ய, அனந்தபத்மநாபன் திருப்பார்ப்பூர் நாடார் பரிந்துரை செய்ததாகச் சொல்கிறார்.

அனந்தபத்மநாபன் பரிந்துரை செய்ததான தகவல் இந்நூலைத் தவிர வேறு எந்தவொரு நூலிலும் காணக்கிடைக்கவில்லை. அதுபோல், 'அனந்த பத்மநாபன் திருப்பார்ப்பூர் நாடார்' என்கிற பெயர் எந்தவொரு அரசு ஆவணக் கோப்புகளிலும் இல்லை. கேரள வரலாற்று நூல்களிலும் இல்லை. அனந்தபத்மநாபன் ஓர் நாடார் என்பதே சர்ச்சைக்குரிய செய்தியாகத்தான் குமரி மற்றும் கேரளா வரலாற்று ஆய்வாளர்களால் பார்க்கப்படுகிறது. நூலாசிரியர் நாடார் சாதியைச் சார்ந்தவர் என்பதால் அனந்த பத்மநாபனை நாடார் சாதியில் கொண்டு வந்து இணைக்கிறார். தனது பரம்பரை பட்டியலில் கொண்டு வந்தும் சேர்க்கிறார். அதற்குரிய பரம்பரை பட்டியலை இந்நூலில் நூலாசிரியர் கே.பி. வரதராசன் தரவில்லை என்றாலும், "மாவீரன் தளபதி அனந்தபத்மநாபன்" என்கிற நூலில் தந்திருக்கிறார்.

"தாணுமாலைய பெருமாளுக்கும், இலட்சுமி தேவியாருக்கும் மகனாக **1698**-ஆம் ஆண்டு செப்டம்பர் **9**-ஆம் தேதி அனந்த பத்மநாபன் பிறந்தார்" என பேராசிரியர் பி. சர்வேசுரன், 'மாமன்னரை உருவாக்கிய

மாவீரன்' கட்டுரையில் குறிப்பிடுகிறார். அனந்த பத்மநாபன் தகப்பனார்தான் தாணுமாலைய பெருமாள் என்பதற்கும், அவருடைய தாய் இலட்சுமி தேவி என்பதற்கும் எந்தவித ஆவணக் குறிப்பும் இல்லை. "திருவடி தேசம் திற்பாப்பூர் சான்றோர் இனமும் பிரம்மகுல சத்திரியன் அனந்த பத்மநாபன் நாடாரும்" என்கிற கட்டுரையில் உரப்பனவிளை பொன்னம்பல பாலசுப்ரமணியம், அனந்த பத்மநாபனுக்கு "அவரது பெற்றோர் இட்ட பெயர் அனந்த பெருமாள்" என்கிறார். அதற்கும் சான்றுகள் இல்லை.

1891-இல் சி.வி. இராமன் பிள்ளை எழுதிய, "மார்த்தாண்ட வர்ம்மா" நாவலானது அனந்த பத்மநாபனின் தகப்பனார் தாணுமாலைய பெருமாள் என்பதனை மறுக்கிறது. அனந்த பத்மநாபனின் தகப்பனார் பெயர், "திருமுகத்துப் பிள்ளை" என்கிறது. இந்நாவல் 1953-இல் மலையாள அரசின் உதவியுடன், "ஒரு வரலாற்றுக் கதை" என்கிற பெயரில், ஆறு முதல் பத்தாம் வகுப்பு வரை உள்ள கேரள மாணவர்களின் பாடத்திட்டத்தில் இடம்பெற்றுள்ளது.

1998-இல் டில்லி சாகித்திய அகாதமி, இந்நூலை ஆங்கிலத்தில், "மார்த்தாண்ட வர்ம்மா" என்கிற பெயரில் வெளியிட்டது. 2007-ஆம் ஆண்டு பத்மநாபன் தம்பி என்பவரால் தமிழாக்கம் செய்யப்பட்ட நிலையில், டில்லி சாகித்திய அகாதமி இந்நூலை தமிழில், "மார்த்தாண்ட வர்ம்மா" என்கிற அதேப் பெயரில் வெளியிட்டுள்ளது. இந்த நாவலின் அடிப்படையில் பார்த்தால், அனந்த பத்மநாபன் என்பவரை அனந்தன் பெருமாள் என அழைப்பதும், அவரது தகப்பனார் தாணுமாலைய பெருமாள் என்பதும் கேள்விக்கு உரியதாகிறது. 'தம்பிமார் கதை' எனும் கதைப்பாடலில் அனந்த பத்மநாபனை, 'அனந்த பத்மநாப பிள்ளை' என்று குறிப்பிடுகிறது.

தாணுமாலைய பெருமாளின் தலைமுறையில் அனந்த பத்மநாபன் (அனந்தன் பெருமாள்), ஐயன் பெருமாள், மாயகொண்டப் பெருமாள், அருதன் மாயகொண்டான், பூதத்தான், பொன்னம் பெருமாள், யோசேப் அப்பாவு, யோசப் மாயகொண்டான், யோசப் நல்லதம்பி, யோசப் சின்னப்பிள்ளை, பொன்னுமுத்து நாடார், கே.பி. வரதராசன் ஆகியோர் வருகின்றனர் என்பதனை கே.பி. வரதராசன் எழுதிய, "அனந்தனின் பத்தாவது வாரிசான குமரி கவிஞர் கே.பி. வரதராசன் அரசாங்க அலுவலகங்களுக்கு சமர்பித்த மனு" வாயிலாக அறிய முடிகிறது.

அனந்த பத்மநாபன், அனந்தன் பெருமாளாக மாறுகிற சொல் பிரயோகம் சந்தேகத்தையே கிளப்புகிறது. “அனந்தன், பாசத்துடன் ‘அனந்தன் பல்பனான்’ என்றும், மரியாதையால் ‘பாராந்தகசானன் அனந்த பல்பனாபன்’ என்றும், பெருமையாக ‘பிரம்மகுல சத்திரியன் அனந்த பல்பனாபன்’ என்றும் அழைக்கப்பட்டார்” என பேராசிரியர் பி. சர்வேசுவரன், “மாமன்னரை உருவாக்கிய மாவீரன்” என்கிற கட்டுரையில் குறிப்பிடுகிறார். இதில், ‘அனந்தன் பெருமாள்’ என யாரும் அழைத்ததாக சொல்லப்படவில்லை.

எவ்வளவு பெரிய பெயராக இருந்தாலும் ஒருவரை பெயர் சொல்லி அழைக்கும்போது அவருடைய பெயரை சுருக்கமாகவே அழைப்பது நடைமுறை வழக்கம். அனந்தன் என்பவரை, ‘பாராந்தகசானன் அனந்த பல்பனாபன்’, ‘பிரம்மகுல சத்திரியன் அனந்த பல்பனாபன்’ என்று பெயரை நீட்டி அழைத்ததாக சொல்வது ஏற்றுக்கொள்ளக் கூடிய செய்தியாக இல்லை. அது நடைமுறை சாத்தியமும் இல்லை.

“எனது முன்னவர்களுக்கும் எனது முன்னவர் வழியில் அவதரித்த பின்னவரான அனந்த பத்மநாபனுக்கும் கொடுத்த செப்புப் பட்டையங்களிலுள்ள சொத்துக்கள் அனைத்தும் நாயர் சமுதாயமும் மற்றும் இதர சமுதாயங்களும் கை பலத்தாலும், யானை விட்டு பயமுறுத்தியும் பறிமுதல் செய்திருக்கிறார்கள். இவர்களுக்கு உடந்தையாக அரசு அதிகாரிகளும் செயல்பட்டு இருந்திருக்கின்றனர்” என்கிற ஆதங்கத்தை நூலாசிரியர் கே.பி. வரதராசன் வெளிப்படுத்துகிறார். இப்பரம்பரையில் நூலாசிரியர் கே.பி. வரதராசன் வந்ததாகவும், அவரின் முன்னோர்கள் சொத்துக்களை நாயர்களும், பிற சாதியினரும் பறிமுதல் செய்ததாகவும், அதற்கு அரசுப் பணியாளர்கள் உடந்தையாக இருந்ததாகவும் குறிப்பிடுகிறார். ஒரேயொரு செப்புப் பட்டயத்தை சகுந்தலாதேவி என்ற யேசுவடியாள் காப்பாற்றியதாகவும் குறிப்பிடுகிறார். அந்த செப்பு பட்டயத்தில்கூட அனந்தன் பத்மநாபனின் தாயார் மற்றும் தகப்பனார் பெயர் குறிப்பிடப்படவில்லை.

“குளச்சல் போர் நடக்கும் சமயம் மன்னர் மார்த்தாண்டனும், இளவரசன் தருமராசனும், இராமைய்யனும் காயங்குளம் பக்கம் இருந்ததாக டி.கே. வேலுப்பிள்ளை உருவாக்கிய நாட்டு கையேடு பாகம் இரண்டில் தெள்ளத் தெளிவாக விளக்கியுள்ளார்” என்கிறார் நூலாசிரியர். இந்த ஒரேயொரு செய்தியை வைத்து தளவாய்

இராமைய்யனை குளச்சல் போர் வரலாற்றிலிருந்து வெளியேற்ற முயலுகிறார். அந்தவகையில் நூலாசிரியர் கே.பி. வரதராசனை ஏதோ ஒருவகையில் பாராட்டினாலும், அதனோடு இணைந்து வருகிற கதைகளுக்கு நூலாசிரியர் ஆதாரம் எதுவும் கொடுக்கவில்லை என்பதால் அக்கதைகள் வலுவிழந்து நிற்கிறது.

“பனை மரங்களை துண்டுத் துண்டாக்கி நூற்றுக்கு அதிகமான மாட்டு வண்டிகளில் ஏற்றி போர் முகத்தில் வரிசையாக நிறுத்தி இருந்தனர் என்று வரலாற்று ஆசிரியர்கள் புனைவதைப் பார்த்தால் வியப்பாகவும், சிரிப்பாகவும், மன வெறுப்பாகவும் இருக்கிறது. பனை மரத் துண்டுகளைப் பார்த்து பீரங்கி என்று எண்ணி டச்சுப் படையினர் பயந்து விட்டனர் என்று கூறுகின்றனர். அவ்வளவு சோணகதிகள் அல்ல டச்சுப் படையினர். அவ்விதம் அவர்கள் பயந்திருந்தால் இலங்கை நோக்கி வந்த வழியே அவர்கள் திரும்பிச் சென்றிருப்பர்” என்கிற நூலாசிரியரின் நியாயமான கேள்வி ஏற்கத்தகுந்ததே. இந்த இடத்தில் அவரை நிச்சயமாகப் பாராட்டியே ஆக வேண்டும்.

பனைமரக் கதைகளை அனந்தன் பத்மநாபனின் வாரிசாக தன்னை பிரகடனப்படுத்தும் கே.பி. வரதராசன் ஏற்க மறுப்பதில் இருந்து அவரது நூலை வித்தாயசமான பார்வையில் பார்க்க வேண்டியதாகவே இருக்கிறது. பனை மரத் துண்டுகளைப் பார்த்து பீரங்கி என்று எண்ணி டச்சுப் படையினர் பயந்து விட்டனர் என்றால் அவர்கள் குளச்சல் கடற்கரைக்கு வந்து இறங்க வேண்டிய அவசியம் இருந்திருக்காது. கதை சொல்லிகள், கற்பனைக் கதைகளை சந்தேகத்திற்கு இடமில்லாமல் நிருபிக்கத் தவறியதால் வரலாற்றில் பெரும் குழப்பம் ஏற்பட்டுவிட்டது.

“வேணாட்டு மன்னர்கள் தங்கள் வாரிசில் உட்பட்டவர்களைத்தான் மிக உயர்ந்த பதவிகளில் அமர்த்துவது வழக்கம். உதாரணமாக வேணாட்டு மன்னன் இராம குலசேகர பெருமாள் (இராம வர்மா) என்பவர் அனந்த பத்மநாபனின் தகப்பனாகிய தாணுமலையப் பெருமாளை தனது முதன்மை தளபதியாக அமர்த்தியுள்ளார்” என்கிற நூலாசிரியரின் போக்கு ஏற்பதற்கு கடினமாகவே இருக்கிறது.

நூலாசிரியரின் கூற்றை ஏற்றுக் கொள்வதாக இருந்தால், அனந்த பத்மநாபன் என்பவர் நாடார் சாதியினராக இருக்க வாய்ப்பில்லை. மன்னரின் சத்திரிய சாதியினராகத்தான் இருக்க முடியும்.

மார்த்தாண்டவர்மா, அனந்த பத்மநாபனுக்கு கொடுத்ததாகச் சொல்லி நூலாசிரியர் கே.பி. வரதராசன் வைத்திருக்கும் செப்பேடு அனந்த பத்மநாபனை, "பிரம்மகுல சத்திரியன்" என்றே குறிப்பிடுகிறது. வேறுவகையில், வேணாட்டு மன்னர்களும் நாடார்கள்; அனந்த பத்மநாபனும் நாடார் எனக் கொண்டால் நூலாசிரியரின் சிந்தனைப் போக்கு கருவின் குற்றம் ஆகிவிடும்.

"வேணாட்டு மன்னர்கள் தங்கள் வாரிசில் உட்பட்டவர்களைத்தான் மிக உயர்ந்த பதவிகளில் அமர்த்துவது வழக்கம்" என்பதனை ஏற்றுக் கொண்டால், அய்யர் சாதியைச் சார்ந்த இராமையயனை தளவாயாக உயர் பதவியில் மன்னர் அமர்த்தியது நூலாசிரியரின் கூற்றுக்கு வலு சேர்க்கவில்லை. 'வழக்கம்', முரணிலும் முரணாகத்தான் பார்க்க முடிகிறது. மார்த்தாண்ட வர்மா அரியணை ஏறியவுடன், குமாரசாமி பிள்ளையை முதன்மை தளபதியாகவும், தாணு பிள்ளையை அவருக்கு துணையாக அமர்த்தியிருக்கிறார். இவர்களும் நாடார்கள் அல்ல. வேணாட்டு மன்னர்களின் வாரிசுதாரரர்கள், 'இந்து சத்திரியர்' என்றுதான் இன்றும் சாதி சான்றிதழ் பெறுகிறார்கள். மார்த்தாண்ட வர்மா, மருமக்கள் வழியைச் சார்ந்தவர். நாடார்கள் மக்கள் வழியில் வருபவர்கள். பண்பாட்டு ரீதியான வேறுபாடுகளை பார்க்கும்போது இரு பிரிவினரும் ஒன்றுதான் என முன்வைக்கும் வாதங்கள் வலுவிழந்து விடுகின்றன. வரலாறை மீண்டும் ஒருமுறை வாசித்துவிட்டு கதை எழுதுவதே சிறப்பாக இருக்கும்.

"மார்த்தாண்ட வர்மா காலத்தில் படை பலம் இல்லை. அரசு பதவிகளுக்காக வேணாடு கதி கலங்கியிருந்த காலம்" என நூலாசிரியர் முன்வைக்கும் கூற்றை ஏற்றுக்கொண்டால், "நரசிம்ம மடத்தின் அதிபதியாகவும், ஆயுதக் கிடங்குகளின் தலைவராகவும்" அனந்த பத்மநாபனின் தகப்பனாகிய தாணுமலையப் பெருமாள் இருந்தார் எனச் சொல்லும் நூலாசிரியர் கே.பி. வரதராசன் கூற்று சந்தேகத்தையே கிளப்புகிறது. ஏனெனில் நூலாசிரியரே, மார்த்தாண்டவர்மா காலத்தில் படைப் பலம் இல்லை எனச் சொல்லிவிட்டு ஆயுதக் கிடங்கின் தலைவராக தாணுமலையப் பெருமாள் இருந்தார் எனச் சொல்வது நகைப்புக்கு உரியதாகிறது.

'நாயர் படை' ஒன்று இருந்ததை நூலாசிரியர் மறுப்பதனைப் பார்க்கும்போது அவரின் நாயர் சாதி வெறுப்பு அப்பட்டமாகவே வெளிப்படுகிறது. "கி.பி. 1875-இல் சட்டம்பி சாமியின் தலைமையில்

சூத்திரர்களாக இருந்த 116 சமூகங்கள் சேர்ந்து நாயராக மாறி இருக்கிறார்கள்" என சொல்லும் கே.பி. வரதராசன், அதற்கு எந்தவித ஆதாரத்தையும் முன்வைக்கவில்லை.

"நாயர் என்கிற வார்த்தை ஒன்பதாம் நூற்றாண்டிற்கு பின்புதான் சூத்திரர்களை அழைப்பதற்கு பயன்படுத்தப்பட்டது. ஒன்பதாம் நூற்றாண்டு வரை 'நாயர்கள்', 'நாகர்கள்' என அழைக்கப் பட்டிருக்கலாம். நாகர்கள் அவர்களுடைய கைகளில் வாள்களை வைத்திருந்ததால் அந்நிலத்தில் உள்ள அனைத்து மக்களும் அவர்களை மதித்தனர். உண்மையான நாயர்கள் சந்தேகத்திற்கு இடமின்றி நிலவுடைமையை விட இராணுவத்திற்காக இராணுவ சேவையில் பணியாற்றினார்". மேலும், "பிராமணர்கள் தங்களை உயர்ந்தவர்கள் என ஏற்படுத்திக் கொண்டாலும் நாயர்கள் அவர்களுடைய மரபு சார்ந்த தொழிலையும், சமூகத்தின் இருப்பையும் நிலை நிறுத்தினால் அவர்கள் பிராமணர்களை விட நாகரிகத்தில் சிறந்தவர்களாக இருப்பார்கள். ஆனால் சாதி அறிமுகம், பிராமண உயர்நிலையை கட்டாயமாக அவர்களை ஏற்க வைத்திருக்கலாம்" என்கிறார் பாலக்காடு அரசு விக்டோரியா கல்லூரியின் வரலாற்றுப் பேராசிரியர் முனைவர் கிருசுணன்நாடார்.

கே.பி. வரதராசன் மேலும், "இந்த சமுதாயத்திற்கு உட்பட்டவர் களுக்கும், முக்குவ சமுதாயத்தவர்களுக்கும் ஏழு அடிக்குமேல் மண்சுவர் எழுப்பி வீடு கட்டக்கூடாது. அத்துடன் வீட்டுக்கூரை ஓலையினால்தான் வேயப்பட வேண்டும் என்கிற சட்டம் இருந்ததாக" டி.எம்.எச். தொகுதி ஏழு திட்டவட்டமாக எடுத்துக் கூறுகிறது என்கிறார். அந்த தொகுதியை அடியேனால் பார்க்கக் கிடைக்கவில்லை. நாயர்களையும் முக்குவர்களையும் சமத்துவத்தில் வைத்துப் பார்க்க விரும்பும் நூலாசிரியரின் நோக்கமும் புரிகிறது. அதேவேளையில், அவ்வாறு பார்ப்பதிலும் தவறு இருப்பதாக தெரியவில்லை. அதேவேளையில் நாடார்கள் எத்தனை அடிக்குமேல் மண் சுவர் கட்டலாம் என அந்த தொகுப்பிலிருந்து கோடிட்டுக் காட்டியிருந்தால் இன்னும் அறிந்து கொள்வதற்கு நன்றாகவே இருந்திருக்கும்.

30 ஆகத்து 1917 அன்று பார்ப்பனர் அல்லாத தமிழர் மாநாட்டில், "இந்துக் கோவில்களில் பிற சமயத்தினருக்கு வழங்கப்படும் உரிமைகளை இந்து நாடார்களுக்கும் வழங்க வேண்டும். உயர் சாதி

கிறித்தவரோ, இசுலாமியரோ, ஐரோப்பியரோ இந்துக் கோவில்களுக்குள் நுழைந்து அர்த்த மண்டபம் வரை செல்ல முடிகிறது. இந்து நாடார்களுக்கு இத்தகைய உரிமை இல்லை" என உத்திரபாளையம் முதலியார் பேசியிருக்கிறார்.

1921-இல் திருநெல்வேலி மாவட்டம் கைலாசபுரத்தில், "நாடார்களுக்கு இந்துக் கோயில்களில் சமத்துவம் வழங்காமல் இருப்பது நமக்கு வியப்பை அளிப்பதாகும். நாடார்களுக்கு அத்தகைய சமத்துவத்தை வழங்கிட மறுத்தால் 100 ஆண்டுகள் ஆனாலும்கூட நாடு விடுதலை அடையாது" என காந்தியடிகள் பேசியிருக்கிறார். இச்செய்தி கோ. கேசவன் எழுதிய நூலில் காணக் கிடைக்கிறது.

குமரி மாவட்டத்தில் உள்ள நாடார்களும், முக்குவர்களும் ஏன் மதம் மாறினார்கள் என்பதனை ஆய்வுக்கு உட்புடுத்த வேண்டும். சூத்திரர்களாகக் கருதப்படும் நாயர்கள் பெரும்பாலானோர் இன்னும் இந்து சமயத்தில்தான் இருக்கிறார்கள். அது எப்படி அவர்களுக்கு சாத்தியமானது என்பதனையும் வரலாற்றில் இருந்து கற்றுக்கொள்ள வேண்டும். அனந்தன் பத்மநாபன் பரம்பரையில் இருந்து வந்தவர்களில் சிலர் கிறித்தவத்தைத் தழுவியிருக்கிறார்கள். அவர்கள் திசைமாறி சென்றதன் காரண காரியங்களையும் அறிய வேண்டும்.

இருப்பினும், சூத்திரர்கள்தான் நாயர்கள் என்று நூலாசிரியர் கே.பி. வரதராசன் முடிவு செய்ததற்கான விவரங்கள் எதுவும் நூலுக்குள் இல்லை. இராமைய்யன் என்பவர் நாயர் அல்ல; அவர் ஒரு அய்யர் என்கிற ஒரு சாதாரண செய்திகூட நூலாசிரியருக்குத் தெரியவில்லை. அதனால்தான் இராமைய்யனை நாயர் சாதியினராக நினைக்கிறார். "நாயர் படை இருந்தது ஒரு கற்பனையே. அப்படி ஒரு நாயர் படை இருந்திருந்தால் அது மூலம் திருநாள் காலத்தில்தான் தோன்ற வாய்ப்புள்ளது" என்று நூலாசிரியர் கூறுவதன்மூலம் நூலாசிரியர் கே.பி. வரதராசன் ஒரு கற்பனைக் கதையை பாடமாக முன்வைக்கிறார் என்பதனை காண முடிகிறது. அவர் நடுநிலையோடு நின்று ஆய்வு செய்யவில்லை.

"தளவாய் வேலுத்தம்பி, நீலகண்ட பிள்ளை @ தேவசகாயம் பிள்ளை, ராசா கேசவதாசு, அனந்த பத்மநாபன் திருப்பார்ப்பூர் நாடர் ஆகியோர்கள் நாயர் சமுதாயத்தில் உட்பட்டவர்கள் என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுவது அவர்களின் அறிவீனத்தை எடுத்துக்

காட்டுகிறது" என நூலாசிரியர் கே.பி. வரதராசன் கூறுவது வேடிக்கையாகவே இருக்கிறது. வேலுத்தம்பி, தேவசகாயம் பிள்ளை, அனந்த பத்மநாபன் ஆகியோர் நாடார்கள் என நூலாசிரியர் சொல்ல வருகிறார். இது ஆய்வின் நம்பகத்தன்மையை முற்றிலுமாக இழக்கச் செய்கிறது. இப்படித்தான் தொல்காப்பியரையும் நாடார் சாதியில் இணைப்பதற்கு பலவகையில் சிலர் முயற்சி எடுத்துக்கொண்டு இருக்கிறார்கள்.

"மன்னனுக்காக சமைக்கும் உணவு மற்றும் நீர் ஆகாரம் இவைகளை முதற்கண் அனந்த பத்மநாபன் உண்டு பரிசோதித்த பின்புதான் மன்னனுக்கு பரிமாறப்படும். அவ்வளவுக்கு மன்னனும் அனந்தனும் ஈருடலும் ஒருயிருமாய் திகழ்ந்தார்கள்" என்கிற கற்பனைக் கதைகள் நூலுக்கு வலு சேர்க்கவில்லை. நீர் ஆகாரங்களை அனந்த பத்மநாபன் உண்டு பரிசோதித்த பின்புதான் மன்னன் சாப்பிடுவார் என்றால் மன்னரின் அரண்மனையில் நஞ்சை முறிக்கும் வைத்தியர்கள் இருக்கவில்லையா? நஞ்சு வைத்து மன்னனை கொலை செய்ய, திட்டம் தீட்டிக் கொண்டிருந்த சமையல்காரர்கள் அரண்மனையில் இருந்தார்களா? அவர்களை களை எடுக்கத் தெரியவில்லையா? மன்னனும் அனந்த பத்மநாபனும் ஈருடலும் ஒருயிருமாய் திகழ்ந்தார்கள் என்றால் வேலைக்காரன் ஒருவனை உணவு உண்ண வைத்தபிறகு இருவரும் ஒன்றாக சாப்பிட்டு இருக்கலாமே? ஈருடலும் ஒருயிரும் அல்லவா?

"அனந்தன் சொல்லுக்கு மன்னன் மறுமொழியே பகிர்ந்ததில்லை" என்றால் இங்கு அனந்த பத்மநாபன் அல்லவா மன்னன். அனந்த பத்மநாபனுக்கு மன்னன் ஓர் அடிமை. ஈருடலும் ஒருயிருமாய் இருந்த இருவரையும் பிரிக்க நினைத்த தளபதி இராமையன் மன்னனிடம் சொல்லி இரவு நேரங்களில் அனந்த பத்மநாபனை உளவு பார்க்கும் வேலைக்கு அனுப்பச் செய்தார் என நூலாசிரியர் கதை சொல்கிறார். இரவு நேரத்தில் உளவு பார்த்தவர் பகலில் தூங்கி விடுவார். அப்படி இருக்கையில் நீர் ஆகாரங்களை அனந்த பத்மநாபன் உண்டு பரிசோதித்த பின்புதான் மன்னன் சாப்பிடுவார் என்பது பொய் ஆகிவிடுகிறது. இரவு நேரத்தில் மன்னன் நீர் ஆகாரங்களை அருந்தாமல் அனந்த பத்மநாபன் வரும்வரை உணவை பரிசோதிப்பதற்கு காத்து இருப்பார் என்பதனை எந்தவகையிலும் நம்ப இயலவில்லை.

"காடுகளில் சுற்றித் திரியும் வேளையில் அனந்த பத்மநாபனை கருநாகம்

மூன்று தடவை தீண்டியது. நஞ்சு தலைக்கு ஏறி அனந்தன் அவதிப்பட்டாரே தவிர சாவு அவரைத் தீண்டவில்லை. நஞ்சினால் அனந்தனை கொல்ல முடியாது என்பதனை இராமையன் தளவாய் உணர்ந்துவிட்டார்". தளவாய் ஆறுமுகம் பிள்ளையும், அவரது தம்பி தளவாய் தாணு பிள்ளையும் மரித்தவுடன் இராமையனை தளவாயாக நியமனம் செய்ய அனந்த பத்மநாபன் பரிந்துரை செய்ததாக கதை சொன்ன நூலாசிரியர் அனந்த பத்மநாபனை ஏன் தளவாய் இராமையன் கொலை செய்ய முயற்சி செய்கிறார் என்பதற்கு நம்பும்படியான கதையை சொல்லவில்லை. இயேசு சிலுவையை சுமந்து செல்கிறபோது மூன்றாம் முறையாகக் கீழே விழுந்தார் போன்ற கதைகள் உணர்ச்சியை ஊட்டுவதற்கு உதவலாம்.

அனந்த பத்மநாபனை கொலை செய்ய தளவாய் இராமையன் வேறு பல வழிகளையும் கையாண்டார் என நூலாசிரியர் கதை சொல்கிறார். "கொச்சி அரசனுடன் போர் தொடுக்க அனந்தனை தலைமை தாங்கச் செய்தல் இராமையனின் இரண்டாவது யுக்தியாகும்". காடுகளில் ஒற்றனாக சுற்றித் திரிந்த அனந்த பத்மநாபனை படைகளுக்கு தலைமை தாங்க அழைத்தார்கள் என்பதனை எந்தவகையிலும் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. அப்படி ஒரு வரலாற்றுப் பதிவு எங்குமே காணக் கிடைக்கவில்லை.

தளவாய் இராமையன், "கொச்சியுடன் போர் தொடுக்க ஆசான் படைகளுக்கு அனந்தனே தலைமை தாங்க வேண்டுமென வற்புறுத்தினார்" என நூலாசிரியர் கே.பி. வரதராசன் குறிப்பிடுகிறார். ஆசான் படைகள் என்கிற நாடார் படைகள் ஒன்று இருந்தது என்றும், அப்படைகள்தான் மன்னருக்கு உறுதுணையாக இருந்தது என்றும், அந்த நாடார் படைகளுக்கு நாடார் சாதியைச் சார்ந்த அனந்த பத்மநாபன் தலைமை தாங்க வேண்டும் என இராமையன் சொன்னார் என்கிற செய்திகள் நெருடலாகத்தான் இருக்கிறது. மன்னரும் அதனை அனந்தன் பத்மநாபனிடம் சொல்ல, அனந்த பத்மநாபன் அதனை ஏற்க மறுத்துவிட்டார். இதனை மன்னன் ஒத்துக் கொள்ளவில்லை. மன்னரின் பேச்சைக் கேட்காமல் அனந்த பத்மநாபன் அரண்மனையை விட்டு வெளியே சென்றுவிட்டார் எனக் கதை நகர்த்தப்படுகிறது.

சூலை 24 அன்று கொச்சி அரசனுடன் அனந்த பத்மநாபனின் தலைமையிலான நாடார் படையானது போர் தொடுக்க வேண்டும்.

“சூலை 23-ஆம் தேதி காலையில் அனந்தனையும் எட்டு ஆசான்களையும் காணவில்லை என்று மன்னனுக்கு அறிவிக்கப்பட்டது. அந்த செய்தியைக் கேட்ட மன்னன் ஆறாத்துயரில் ஆழ்ந்து அப்படியே சாய்ந்து மயங்கிவிட்டார். மயக்கம் தெளிந்த மன்னன், இராமையனை அழைத்து கொச்சி அரசுடன் ஒரு சமாதான உடன்படிக்கை செய்ய வேண்டுமென்று கூறி, இராமையன் தலைமையில் ஒரு குழுவை கொச்சிக்கு அனுப்பி வைத்தார்”. மன்னருக்கு நம்பிக்கை துரோகம் செய்த அதே அனந்த பத்மநாபன் சூலை 31-ஆம் தேதி குளச்சல் துறைமுகம் வந்த டச்சுப் படையை இல்லாமல் செய்து விட்டார் என்கிற கதையை கற்பனை கலந்த கலவையாகத்தான் பார்க்க முடிகிறது. அனந்தன் பத்மநாபன் சென்றுவிட்டார் என்பதனை அறிந்து மன்னன் ஆறாத்துயரில் ஆழ்ந்து அப்படியே சாய்ந்து மயங்கிவிட்டார் என்பது கதை மயங்கிகளின் விறுவிறுப்புக்கு தீனி ஆகலாம்.

டச்சுப்படை குளச்சலில் வந்தது மன்னருக்குத் தெரியாது. “டச்சுப் படையினர் வேணாட்டின் மீது படையெடுக்க இலங்கையில் இருந்து குளச்சல் துறைமுகத்தில் வந்து இறங்குவதாக ஒரு செய்தியை ஒற்றர்மூலம் அறிந்தார் அனந்த பத்மநாபன். மன்னன் மார்த்தாண்டன் இல்லாத சமயம் டச்சுப் படையுடன் மோதுவது ஒரு நல்ல வேளையாய் இருக்குமென்று அனந்தன் கருதினார். உடனே காலதாமதம் இல்லாமல் போரைப் பற்றி பேசி முடிவெடுக்க எட்டு ஆசான்களுக்கும் அனந்தன் அழைப்பு விடுத்தான். குறித்த நேரத்தில் எட்டு ஆசான்களும் சாரோடு கொட்டாரத்தில் வந்து சேர்ந்தனர். போரைப் பற்றி பேசி முடிவு எடுத்தனர்”. வேணாட்டில் மன்னரிடம் இல்லாத, டச்சுப் படையை எதிர்க்க வலிமையுள்ள இன்னொரு ஆசான் படை வலுவாக இருந்திருக்கிறது என்கிற நூலாசிரியரின் போக்கு அவரின் சாதிப் பாசத்தை அப்பட்டமாக வெளிப்படுத்துகிறது.

“மார்த்தாண்ட வர்மாவுக்கு திருமுற்ற பண்டாரப் பாளையமும், 108 நாடார் போர்ப் பயிற்சி களரிகளும், களரிகளின் தலைவன் அனந்த பத்மநாபனும் மற்றும் மாங்கோடு ஆசான், செல்லங்கோணம் ஆசான், பாலவிளை ஆசான், அதங்கோடு ஆசான், மேக்கோடு ஆசான், நடுவூர்க்கரை ஆசான், உரப்பனவிளை ஆசான், நடுதேரி ஆசான் ஆகிய எட்டு பிரபல ஆசான்களும் துணை நின்றார்களே தவிர வேறு யாரும் உதவிக்கரம் நீட்டவில்லை” என்கிறார் நூலாசிரியர். இங்கும் வரலாற்று சிக்கல் ஒன்று எழுகிறது.

என்ன சிக்கல் என்றால் நாடார் பெண்கள் மார்பை துணியால் மறைக்கக்கூடாது என்ற போதும், முலைவரி வசூலிக்கப்பட்ட போதும், தலை வரி வசூலிக்கப்பட்ட போதும், நாடார் பெண்கள் சந்தைகளில் அவமானப்படுத்தப்பட்ட போதும், தீட்டு என்பதால் பன்னிரண்டு அடிக்கு அப்பால் நிற்க வேண்டும் என்ற போதும் இந்த நாடார் ஆசான்கள் எங்கே போனார்கள்? ஓடி ஒழிந்து விட்டனரா? இவர்களுடைய நோக்கு வர்மம் நிலைகுலைந்து போனதா? தனது நாடார் சாதிக்காக குரல் கொடுக்காமல் அடங்கி ஒடுங்கி விட்டார்களா? போன்ற கேள்விகள் ஆழமாகவே எழுகிறது. நாடார் குல ஆசான்மார்களின் நோக்கு வர்மத்தால் இந்த உரிமைகள் மீட்டெடுக்கப்படவில்லை என்பதனை அனைவரும் அறிந்திருக்கிறார்கள். அப்படி ஒருவேளை மீட்க முடியுமென்றால் இவ்வளவு தூரம் இந்து சமயத்தைவிட்டு தூரமாக கிறித்தவத்தை நோக்கி நாடார்கள் நகர்ந்திருக்கமாட்டார்கள்.

“அனந்த பத்மநாபன் தலைமை தாங்கி எட்டு ஆசான்கள் படை சூழ சூலை 30-ஆம் தேதி குளச்சல் துறைமுகம் சென்றடைந்தனர். கி.பி. 1741 சூலை 31-ஆம் தேதி அருணோயத்தில் இலங்கையில் இருந்து டச்சுப் படையினர் குளச்சல் துறைமுகம் வந்து இறங்கினர். இரு திறத்தாருக்கும் போர் மூண்டது. மின்னல் வேகத்தில் டச்சுப் படையினரை வேணாட்டுப் படையினர் புறமுதுகு காட்டி ஓடச் செய்தனர். அனந்தனும் எட்டு ஆசான்களும் படை சூழ்ந்து டிலனாவையும் மற்றும் ஐந்து பேர்களையும் கைதிகளாகப் பிடித்து சாரோடு கொட்டாரத்தில் கொண்டு சேர்த்தனர். குளச்சல் போரைப் பற்றிய விவரத்தை காயங்குளத்தில் இருக்கும் மன்னன் மார்த்தாண்டனுக்கு ஒற்றர் மூலம் அறிவிக்கப்பட்டது”. எவ்வளவு அற்புதமான, யாராலும் அசைக்க முடியாத, பீரங்கிகளையும் துப்பாக்கிகளையும் தகர்க்கக்கூடிய படை ஒன்று வேணாட்டு மன்னரின் கட்டுப்பாட்டுக்கு வெளியே இருந்திருக்கிறது. அது எப்படி வேணாட்டு படை என்று அழைக்கப்பட்டது? அதுவும் அனந்த பத்மநாபன் தலைமையில்... கற்பனையை வெகுநேரம் தூக்கி சுமப்பது கடினமான காரியம்தான்.

போர் நடந்த நிகழ்வினை நூலாசிரியர் கே.பி. வரதராசன் வர்ணிக்கும் விதமானது புராண காலப் போரினையே தோற்கடித்து விடுகிறது. “போர் முகத்தில் அனந்தனும் எட்டு ஆசான்களும் காட்டிய தீர செயலைப் பார்த்தால் இந்த வையகமே அரண்டுவிடும், நடுங்கிவிடும்.

அவ்வளவு மாய, மந்திர தந்திர சாலம் காட்டி டச்சுப் படையினரை குருடராக்கி விட்டனர். டச்சுப் படையினரின் துப்பாக்கிகளையும், பீரங்கிகளையும் செயலிழக்கச் செய்தனர். துப்பாக்கி சத்தமோ பீரங்கி சத்தமோ குளச்சல் போரில் கேட்டதில்லை. ஆசான்களின் ஆத்ம சக்தியினால் டச்சுப் படையினர் சதம்பனமாகி கற்சிலைகள் போன்று காட்சியளித்தனர். இப்போரில் யாரும் இரத்தம் சிந்தவோ பலியாகவோ இல்லை என்பது உறுதியிலும் உறுதி. இதுதான் உண்மையாகும்".

குளச்சல் போரானது மாய தந்திர மந்திர யுக்தியின் மூலம்தான் நடைபெற்றது என்று நூலாசிரியர் குறிப்பிடுகிறார். இந்த வெற்றிக்கு நாடார்களைத் தவிர வேறு எவருக்கும் பங்கு இல்லை என்பதும் அவரது ஆழமான கூற்று. இப்போரில் யாரும் இரத்தம் சிந்தவோ பலியாகவோ இல்லை என்பது உறுதியிலும் உறுதி. இதுதான் உண்மையாகும் என சத்தியம் செய்வது ஆய்வாளருக்கும் ஆய்வுக்கும் அழகல்ல.

இப்படிப்பட்ட கற்பனைக் கதைகளை இந்த நூற்றாண்டு மக்கள் யாரும் இலகுவாக நம்பப் போவதில்லை; வரலாறும் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை. சாதி பற்றாளர்கள் சில காலம் இக்கதைகளை தூக்கி சுமக்கலாம். அதுவும் கால ஓட்டத்தில் நின்றுபோகும். மாய, மந்திர தந்திர சாலம் காட்டி டச்சுப் படையினரை குருடராக்கி விட்டனர் என்பதனை வாசித்தபோது, சோறு பீயாக மாறியது என கதை அளந்த இரையுமன் சாகரின் 'வேளாப் பாடு' கதைதான் ஞாபகத்திற்கு வந்தது.

அனந்த பத்மநாபனைக் குறித்த தரவுகள் மிகமிகக் குறைவாகவே இருக்கிறது. அதனால்தான் அவர் நாடார் சாதி என்றும், அவர் ஒரு தளபதி என்றும், குளச்சல் போரில் டச்சுவை வீழ்த்தியவர் என்றும் ஊதி பெரிதாக்கப்பட்டிருக்கிறார். கால ஓட்டத்தில் சாதி ரீதியாக எழுதப்படும் நூல்கள் பிற்காலத்தில் ஆதராமாக முன்வைக்கப்படுகிறது. அதனை உண்மை வரலாறாக காண்பிக்க சில எழுத்தாளர்கள் முற்படுகிறார்கள்.

நேசமணி, திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசை துவங்கினார் என்கிற பொய் வரலாறை உடைப்பதற்கு பல வருடங்கள் தேவைப்பட்டன. மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் நவீன வரலாற்றுத் துறைத் தலைவராக பணியாற்றிய குமரி மாவட்டத்தைச் சார்ந்த, நாடார்

சமூகத்தைச் சார்ந்த பேராசிரியர் டி. டேனியல், “திருவாங்கூர் தமிழர் போராட்டம்” நூல் வாயிலாக ஆதாரத்துடன் ‘நேசமணி திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிசை துவங்கினார்’ என்கிற பொய் வரலாறை உடைத்து எறிந்தார்.

குமரி மாவட்டத்தில் பொய் வரலாறுகளை எழுதுவதற்காகவே ஒரு கூட்டம் இருக்கிறது. இவர்கள் ஆங்காங்கே சாதி உணர்வுடன் கூடிக் கொள்வதுண்டு. உண்மையை எழுதுகிறவர்களை வசைமாரி பொழிவதுண்டு. அவ்வாறு வசைமாரி பொழிகிறவர்கள் தங்களை ஆய்வாளார்கள் என பிரபலப்படுத்திக் கொள்வதுண்டு. அவர்களுக்குள்ளாகவே ஒருவருக்கொருவர் மாறிமாறி பாராட்டிக் கொள்வதுண்டு. இந்த வட்டத்தில் பல பேராசிரியர்களும் இடம் பெற்றிருக்கிறார்கள். அண்மைக்காலமாக அனந்த பத்மநாபன் குறித்த வரலாறுகள் அதிகரிக்கத் துவங்கின. அதற்கான ஆதாரங்களை அவர்கள் முன்வைக்கவில்லை. கதைகளுக்கு மேல் கதைகளை அடுக்கி கோட்டையைக் கட்டி எழுப்பினார்கள். அவர்கள் கட்டி எழுப்பியது எஃகு கோட்டை அல்ல; காகித கோட்டை என்பது அவர்களுக்கே தெரியவில்லை.

அனந்த பத்மநாபன் ஓர் நாடார் என்பதனை நிருபிக்க வேண்டிய பொறுப்பு அவரது வழித் தோன்றலாகக் கருதப்படும் கே.பி. வரதராசன் குடும்பத்தாருக்கு உள்ளது. அவர் அரசுக்கு எழுதிய பல கடிதங்கள் புறக்கணிக்கப்பட்டு உள்ளது. பல கடிதங்கள் ஏறெடுத்துப் பார்க்கப்படவில்லை. அவர் தொடுத்த வழக்குகளில் நீதிமன்றம் கதவினை மூடிக் கொண்டது. இருப்பினும், அதனை அவர் குடும்பத்தார் ஏதாவது ஒருவகையில் நிருபிக்காததுவரை அனந்த பத்மநாபன் என்பவர் நாடாரா என்கிற கேள்வி வாசகர்களுக்குள் பிறந்துகொண்டே இருக்கும்.

இந்நிலையில், குளச்சல் துறைமுகம் மீது படையெடுத்த டச்சுப் படையை வென்ற அனந்த பத்மநாபன் நாடாருக்கு தச்சன்விளையில் நினைவு இல்லம் அமைக்க வேண்டும் என்று பாட்டாளி மக்கள் கட்சி நிறுவனர் மருத்துவர் இராமதாசு ஓர் அறிக்கையை வெளியிட்டார். அந்த அறிக்கையில் கூறியிருப்பதாவது:

“கன்னியாகுமரி மாவட்டத்தின் வரலாறு மலையாளிகளால் தொடர்ந்து திரிக்கப்பட்டு வருகிறது. கன்னியாகுமரி மாவட்டத்தின்

பூர்வ குடிமக்கள் நாடார்கள்தான் என்ற நிலையில், நாயர்கள்தான் பூர்வக் குடிமக்கள் என்றும், நாடார்கள் வந்தேறிகள் என்றும், மத்திய இடைநிலைக் கல்வி வாரியம் தயாரித்த ஒன்பதாம் வகுப்புப் பாடநூலில் திரித்து எழுதப்பட்டிருந்தது.

சானகி நாயர் என்ற மலையாளப் பேராசிரியர்தான் இதைத் திரித்து எழுதினார் என்பதை கடந்த ஆண்டு நான் அம்பலப்படுத்தினேன். அதன்பின்னர் ஒட்டுமொத்த தமிழகமே கிளர்ந்து எழுந்ததை அடுத்து, இந்தத் தவறைத் திருத்த மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் ஒப்புக் கொண்டது.

1741-ஆம் ஆண்டில் இலங்கைமீது போர் தொடுத்து வெற்றிபெற்ற டச்சுக்காரர்கள் அடுத்த கட்டமாக இந்தியாவைக் கைப்பற்றும் நோக்குடன் குளச்சல் துறைமுகம்மீது படையெடுத்தனர். அவர்களைத் திருவிதாங்கூர் மன்னன் மார்த்தாண்ட வர்மாவின் தளபதியாக இருந்த தமிழரான அனந்த பத்மநாபன் நாடார் தமது படைகளுடன் சென்று போரிட்டு வீழ்த்தினார். இதற்காக அவரைப் பாராட்டி பல நினைவிடங்களை அமைத்த மன்னர் மார்த்த்தாண்ட வர்மா, பல ஊர்களுக்கு அனந்த பத்மநாபன் பெயரைச் சூட்டினார். குமரி மாவட்டத்தில் உள்ள பத்மநாபபுரம் அரண்மனையின் பெயரே இவரது நினைவாக சூட்டப்பட்டதுதான்.

அதன்பின்னர் கன்னியாகுமரி மாவட்டத்தில் நடந்த தோள்சீலைப் போராட்டத்தின் போதும், வேறு சில நிகழ்வுகளின் போதும் தமிழர் என்ற ஒரே காரணத்திற்காக அனந்த பத்மநாபன் நாடாரின் நினைவை சுமந்து கொண்டிருந்த கட்டிடங்கள் அனைத்தையும் கேரள நாயர்கள் அழித்தனர்.

இதற்கு முக்கிய காரணமாக இருந்தவர் வேலுத்தம்பி தளவாய் நாயர் என்ற மலையாளி. திருவிதாங்கூர் நாட்டின் தளபதியாக பொறுப்பு வகித்த இவன்தான் 1809-ஆம் ஆண்டில் மூன்றாயிரத்திற்கும் மேற்பட்ட தமிழர்களை வெட்டி படுகொலை செய்து கடலில் வீசியவன். தமிழர்களுக்கான வரியை இரட்டிப்பாக்கி கொடுமைப்படுத்தியவன். வீரபாண்டிய கட்டப்பொம்மனை வீழ்த்த ஆங்கிலேயர்களுக்கு உதவி செய்தவனும் இவன்தான். தமிழினத்தை ஒழிப்பதையே நோக்கமாகக் கொண்டிருந்த இவனை, ஆங்கிலேயர்களை வீழ்த்திய வீரன் என்று ஒருபுறம் போற்றிக்கொண்டு,

மறுபுறம் அனந்த பத்மநாபன் நாடாரின் சாதனை வரலாற்றைக் குழிதோண்டி புதைக்கும் முயற்சியில் நாயர்கள் பல ஆண்டுகளாக ஈடுபட்டு வருகின்றனர். இதற்கு தமிழக அரசும் தெரிந்தோ, தெரியாமலோ துணை போயிருக்கிறது என்பதுதான் வேதனை அளிக்கும் உண்மையாகும்.

குமரி மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் அனந்த பத்மநாபன் நாடாரின் நினைவாக அமைக்கப்பட்டு, பின்னர் நாயர்களால் சிதைக்கப்பட்ட கட்டிடங்களை சீரமைக்க தமிழக அரசு எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. மாறாக முந்தைய திமுக ஆட்சியில் வேலுத்தம்பி தளவாய் நாயருக்கு குமரி மாவட்டம் தலக்குளத்தில் ரூ 1.5 கோடியில் நினைவு இல்லமும், ரூ 35 இலட்சத்தில் 7 இடங்களில் நுழைவு வாயில்களும் அமைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறாக, குமரி மாவட்டத்தில் நாயர்களை பெருமைப்படுத்தி, நாடார்களை அவமதிக்கும் வகையில் வரலாற்றைத் திரிக்கும் நடவடிக்கைகளை இனியும் அனுமதிக்கக்கூடாது. குமரி மாவட்டத்தில் வேலுத்தம்பி தளவாய் நாயர் உள்ளிட்ட மலையாளிகளின் நினைவாக அமைக்கப்பட்டுள்ள நினைவுச் சின்னங்களை அகற்ற வேண்டும். புதிதாக எதையும் அமைக்கக்கூடாது.

அதேநேரத்தில் டச்சுப் படையை வென்ற அனந்த பத்மநாபன் நாடாருக்கு தச்சன்விளையில் நினைவு இல்லமும், நுழைவு வாயிலும் அமைக்கப்பட வேண்டும். களியக்காவிளையில் உருவச்சிலை அமைப்பதுடன், அஞ்சல் தலையும் வெளியிடச் செய்ய வேண்டும். மேலும், குமரி மாவட்ட மக்களின் உரிமைகளுக்காகவும், சுயமரியாதைக்காகவும் போராடிய அய்யா வைகுண்டர், நேசமணி, வெள்ளையன் நாடார் ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றை பள்ளி, கல்லூரிகளில் பாடத் திட்டத்தில் சேர்க்கவும் மத்திய, மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்க வேண்டும்". இவ்வாறு மருத்துவர் இராமதாசு அந்த அறிக்கையில் கூறியிருக்கிறார்.

மருத்துவர் இராமதாசு கூறிய மேற்படி செய்தி 17 ஏப்ரல் 2013 அன்று தினத்தந்தி நாளிதழில் வெளியானது. இவ்வாறு மருத்துவர் இராமதாசு அனந்த பத்மநாபன் என்கிற பெயரை அனந்த பத்மநாபன் நாடார் என்று சொல்வதற்கு முன்வந்ததற்குக் காரணம் நாடார்களின் வாக்கு வங்கியே தவிர வேறெதுவும் இருக்க முடியாது. வன்னியர்கள் இல்லாத

இடத்தில் கட்சியை வளர்ப்பதற்கு இதைவிட வேறு ஆயுதங்கள் எதுவும் இராமதாசுக்கு கிடைத்துவிடப் போவதில்லை. இதனால் குமரி மாவட்டத்தில் உள்ள சிறுபான்மை நாயர் மீது காழ்புணர்ச்சி காட்டி, பெரும்பான்மை நாடார் மீது பாசம் காட்டி கட்சி வளர்க்கும் வித்தையை இராமதாசு முன்னெடுத்து இருக்கிறார்.

குமரி மண்ணில் மத அரசியல் நடக்கிறது. சாதி அரசியல் நடக்கவில்லை என்கிற உண்மையை இராமதாசு கற்றுக் கொள்ளவில்லை. குமரி மாவட்டத்தில் வேலுத்தம்பி தளவாய் நாயர் உள்ளிட்ட மலையாளிகளின் நினைவாக அமைக்கப்பட்டுள்ள நினைவுச் சின்னங்களை அகற்ற வேண்டும் என்பதிலிருந்து அவரது வெறித்தனத்தின் தாண்டவம் வாசிப்பவர்களை புலப்பட வைத்துவிடும்.

டச்சுப் படையைத் திருவிதாங்கூர் தளபதி அனந்த பத்மநாபன் தனது படைகளுடன் போரிட்டு வீழ்த்தினார். இதற்காக அவரைப் பாராட்டி பல நினைவிடங்களை மன்னர் மார்த்தாண்ட வர்மா பல ஊர்களுக்கு அனந்த பத்மநாபன் பெயரைச் சூட்டினார். குமரி மாவட்டத்திலுள்ள பத்மநாபபுரம் அரண்மனையின் பெயரே இவரது நினைவாக சூட்டப்பட்டதுதான் என்கிற இராமதாசால் அவ்வூர்களின் பெயர்களைக் குறிப்பிட இயலவில்லை. இருப்பினும் இந்த ஊர்களின் பெயர்களை, "கன்னியாகுமரி மாவட்டம் - அரசியல் சமூக வரலாறு" என்கிற நூலில் கே.பி. வரதராசன் குறிப்பிட்டுள்ளார். அவைகள்:

"திருஅனந்தபுரம், அனந்தன்பறைவயல், அனந்தன்விளை, அனந்தன்காடு (பஞ்சவன்காடு), அனந்தன் தெற்பக்குளம் (பார்வதிபுரம் பக்கம்), அனந்தன்குளம், அனந்தன்பாலம், அனந்தன்நகர், அனந்த பத்மநாபபுரம் (லாயம்), சிறிபத்மநாபநல்லூர் (சீதப்பால்), பத்மநாபபுரம், அனந்தன் கால்வாய், அனந்தன் விக்டோரியா மார்த்தாண்டன் சானல், அனந்த மங்கலம் (விளவங்கோடு வட்டம்), பத்மநாபன் திட்டை (பத்தனந்திட்டை), அனந்தன் பாறை இன்னும் இதுபோல் பல ஊர்களும், ஆறு குளங்களும் அனந்தன் பெயரைச் சூட்டிக் கொண்டு எல்லா நேரங்களிலும் அனந்தனின் புகழ்ப்பாடிக் கொண்டே இருக்கின்றன!" என்கிறார்.

'திரு - அனந்த - புரம்' என்பதன் பொருள் விளக்கம் பலரால் முன்மொழியப்பட்டுள்ளது. அனந்தன் என்ற பாம்பின் மீது அரங்கநாதர்

(திருமால்) படுத்திருப்பார். அவ்வகையில் கடவுளின் பெயரினைத் தழுவியே அனந்தன் நகரம் உருவானதாக புராணக் கதைகள் கூறுகின்றன. புராணம் என்றால் பழமை; பழங்கதை; பழைய வரலாறு. அதாவது இவ்வூர், 'திரு அனந்தனின் நகரம்' என அழைக்கப்படுகிறது. அனந்தன் என்கிற பெயர் ஆதி காலங்களிலே புராணங்களிலும் இலக்கியங்களிலும் காணக்கிடக்கின்றன. அனந்தன் என்பவர் நவநாகங்களில் ஒருவர். இவர் காசிப முனிவருக்கும் கத்ருவற்கும் பிறந்த முதல் ஒன்பது நாகங்களில் ஒருவர். இவரது மகளான சந்திர ரேகையை தேவாங்கன் என்கிற தேவ முனிவருக்கு மணம் முடித்து வைத்தார் எனப் புராணக் கதைக் கூறுகிறது.

கபால பைரவரை பல்வேறு தோத்திரம் செய்து அனந்தன் வணங்கினான். அப்பொழுது சிறிமன் நாராயணன், "அன்பனே, நீ வேண்டும் வரம் யாது?" என்று வினவினார். அப்பொழுது அனந்தன், "பிரபுவே! தங்கள்மீது நான் கொண்டுள்ள பக்தி எப்போதும் ஒர் எள்ளளவும் குறையாது இருக்க வேண்டும். அதுமட்டுமல்ல, நான் எப்போதும் தங்கள் அருகிலே இருக்க விரும்புகிறேன். ஆகவே தங்களைத் தாங்கும் படுக்கையாக என்னை ஏற்க வேண்டும்" என்ற வரம் கேட்டான். "அப்படியே ஆகட்டும்" என வரம் தந்த பகவான், அவனைப் படுக்கையாக ஏற்றுக்கொண்டார்.

அனந்தன் மீது சயனித்து ஆயிரம் ஆண்டுகள் யோக நித்திரை செய்தார். அத்தனை காலமும் அவருக்கு எந்தவிதமான தொந்தரவும் வராமல் கண்ணை இமை காப்பதுபோல அனந்தன் பார்த்துக் கொண்டான். நித்திரை தெளிந்து எழுந்த மாதவன், நடந்ததை அறிந்து மகிழ்ச்சி கொண்டார். "உனது கைங்கர்யம் அபாரமானது. என் மனதை மகிழ்விக்கிறது. நீ வேண்டும் வரம் கேள்!" என்றார். "நான் எப்பொழுதும் உங்களை சுமக்கும் பாக்கியம் பெற்றுள்ளேன். இதைவிட வேறு சௌபாக்கியம் தேவையில்லை. ஆனால் ஒரு சந்தேகத்தை நீங்கள் நிவர்த்தி செய்ய வேண்டும்!" என்றான். "ஆகா கேள்" என்றார் பரந்தாமன்.

"ஐயனே ஆயிரம் ஆண்டுகள் யோக நித்திரை செய்தீரே! அதற்கு என்ன காரணம்?" என்றான் அனந்தன். "சர்வ வியாபியாகத் திகழும் ஈசனைக் குறித்தத் தியானத்தை செய்து வந்தேன்" என்றார் மகாவிசுணு. இதைக்கேட்ட அனந்தன் ஆச்சரியம் அடைந்தான். "என்ன! தாங்கள் ஈசனைக் குறித்து தவம் செய்தீரா?". "ஆமாம்!" என்ற விசுணு,

அனந்தனுக்கு சிவபஞ்சாட்சரத்தின் மேன்மைகளை விளக்கினார். "இந்த பிரபஞ்சம் ஒருநாள் பிரளயத்தில் மூழ்கி அழிவடையும்போது சகல கலைகளும் சூரிய, சந்திரர்கள், அக்னி ஆகிய கலைகளில் ஐக்கியமாகும். அவைகள் ஈசனிடம் சென்று தங்கியிருக்கும். பிரளய காலம் முடிந்து மீண்டும் ஆண்ட சராசரங்கள் பிறக்கும்போது ஈசன் அந்தக் கலைகளை உபதேசிக்கிறார். அதனாலேயே அவருக்கு கலாபி என்ற திருநாமம் ஏற்பட்டது. அவருக்கும் எனக்கும் வேறுபாடு இல்லை. அவர் கண்களை மூடி என்னையே தியானிப்பார். நான் யோக நித்திரை செய்கையில் அவரையே தியானிப்பேன். எங்களுக்குள் ஏற்றத்தாழ்வு எதுவும் இல்லை" என விளக்கினார் மகாவிசுணு. இத்தகவல், 'மச்ச புராணம்' நூலில் உள்ளது. மச்ச புராணம் என்பது நீர் பிரளயத்திலிருந்து உலகைக் காக்க மச்ச (மீன்) அவதாரம் எடுத்த திருமால், தனது பக்தனிடம் சிவ பெருமானுடைய பெருமை விளங்க உபதேசித்த புராணம்.

இந்த மச்ச புராணக் கதையை வாசித்த யூதன் ஒருவன், நோவா காலத்தில் பிரளயம் ஏற்பட்டதாக கதை எழுதினான். அக்கதை பின்னால் விவிலியத்தில் சேர்க்கப்பட்டது. அதனை அவர்கள், அவர்களுடைய ஆலங்களில் மிகப் பெரிய அதிசயமாக பிரசங்கித்து வருகிறார்கள். திருமால் மீனின் அவதாரம் எடுத்து, வைசுத மனுவுக்கு நரசிம்ம அவதாரப் பெருமைப் பற்றியும், நான்கு வேதங்களின் பொருள் பற்றியும் உரைத்த பதினான்காயிரம் சுலோகங்களைக் கொண்டது மச்ச புராணம்.

அரபிக் கடலை ஒட்டி வீற்றிருக்கும் திருவனந்தபுரம் நகரம் ஏழு கடற்கரை மலைகளை ஒட்டி அமைந்திருக்கிறது. ஆயிரம் தலைகளைக் கொண்ட ஆதிசேசன் அல்லது அனந்தன் என்ற ஐதீக சர்ப்ப உருவத்தின் மீது வீற்றிருக்கும் மகாவிசுணுவின் பெயரால் இந்நகரம் அழைக்கப்படுகிறது. மகாவிசுணு, திருவனந்தபுரத்தில் சிறி அனந்தபத்மநாப சுவாமி கோவிலில் அதே அவதாரத்தில் எழுந்தருளினார். பத்மநாபன் என்பது கடவுள் விசுணுவை குறிக்கிறது. இப்பொழுது அதனை மாற்றி புதிய கதைகளை குமரி மாவட்ட எழுத்தாளர்கள் உருவாக்குகிறார்கள். கதைகளை உருவாக்குவதில் குமரி மாவட்ட எழுத்தாளர்களுக்கு நிகர் அவர்களே.

மருத்துவர் இராமதாசின் அறிக்கைக்கு மறுப்பாக முனைவர் பத்மநாபன், அவருடைய ஆய்வுக் களஞ்சியம் இதழில், "மருத்துவர்

இராமதாசு தொண்டை மண்டலத்தைச் சார்ந்தவர். அவருக்குத் திருவிதாங்கூர் வரலாறு தெரியாது. திருவிதாங்கூர் மன்னர் ஆட்சியில் பள்ளிக்கூடத் திட்டத்தில் திருவிதாங்கூர் சரித்திரம், திருவிதாங்கூர் பூமி நூல் என்று இணைத்து வட்டார வரலாற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. நாங்கள் பள்ளியில் படிக்கும்போது திருவிதாங்கூர் வரலாற்றை பாடமாகப் படித்துள்ளோம். அந்த வரலாற்றில் மருத்துவர் இராமதாசு கூறிய தகவல் எதுவும் இல்லை. யாரோ வரலாறு தெரியாதவர்கள் அவருக்குத் தவறான தகவல்களை கூறியிருக்க வேண்டும்.

வேணாட்டின் தலைநகராக இருந்த கல்குளத்திலிருந்து தலைநகரை திருவனந்தபுரத்திற்கு மாற்றி, சங்க காலத்தில் சிறப்புடன் திகழ்ந்த வேணாட்டை (வேள் + நாடு) திருவிதாங்கூர் நாடாக விரிவுபடுத்தி திருவிதாங்கூர் நாட்டை திருவனந்தபுரத்திலுள்ள திரு பத்மநாப சுவாமிக்கு சமர்பித்து திரு பத்மநாப தாசராக திருவிதாங்கூரை ஆண்டு வந்தார். கல்குளத்திற்கு பத்மநாபபுரம் என்று பெயரிடப்பட்டது என்பது நூல்களில் படித்த வரலாறு. அந்த உண்மையை மாற்றி அனந்த பத்ம நாடார் பெயர் இடப்பட்டது என்று பொய்யான தகவலை வெளியிட்டுள்ளது கண்டிக்கத்தக்கது. அதுமட்டுமல்ல, டச்சுக்கார டிலனாயை தோற்கடித்தவர் அனந்த பத்மநாபன் நாடார் என்ற பொய்யான தகவலையும் வெளியிட்டுள்ளார்.

டிலனாயின் பீரங்கி மற்றும் துப்பாக்கிக்கு நேரே நின்று வாளை வைத்துக்கொண்டு நாம் போரிட முடியாது. அதனால் குளச்சல் வட்டார மக்கள் மிகவும் தந்திரமாக டி லெனாயை அடிபணிய வைத்தனர் என்பதுதான் வரலாறு. ஒரு பாறையை கப்பல்போல் அலங்கரித்து டிலனாயை ஏமாற்றினார். அந்த பாறை இன்று குண்டடிச்சான் பாறை என்று அழைக்கப்படுகிறது. பின்னர் மாட்டு வண்டிகளில் பனந்தடியை வெட்டி வைத்து பீரங்கிபோல் காட்டினர். அதேநாள் இரவு தீப்பந்தங்களுடன் மீனவர்கள் கப்பலை நோக்கி படகிலே சென்றனர். இதைகண்டு பயந்துபோன டிலனாய் வெள்ளைக் கொடி காட்டி அடிபணிந்தார் என்று கூறப்படுகிறது. இதுதான் உண்மை. இதற்கு மாறாக அனந்த பத்மநாபன் நாடார் டிலனாயை தோற்கடித்தார் என்பது தவறான செயலாகும்.

வேலுத்தம்பி தளவாய் ஆங்கிலேயர் ஆதிக்கத்திற்கு எதிராகவே செயல்பட்டு உயிர்விட்டவர். ஆங்கிலேயர் படைகள் கையால்

உயிரிழக்க மனமில்லாமல் தானாகவே கழுத்தை அறுத்து உயிரிழந்தவர். ஆங்கிலேயர்கள், வேலுத்தம்பியின் உயிரற்ற உடலை கட்டித் தொங்கவிட்டு வெற்றி ஊர்வலமாகக் கொண்டு சென்று ஆங்கிலேயர் படை தங்கள் எதிர்ப்பை தெரிவித்தது. வீரர் வேலுத்தம்பியின் மரித்த உடலைக்கூட ஆங்கிலேயர்கள் விடவில்லை. அனந்த பத்மநாபனின் நினைவுச் சினங்களை நாயர்கள் அழித்தார்கள் என்று கூறுவது பொய்யான தகவலாகும். இது சாதி வெறியைத் தூண்டுவதாகும். இதற்கு முக்கிய காரணமாக இருந்தவர் வேலுத்தம்பி தளவாய் என்று கூறுவதும் பொய்யான தகவல்தான். அனந்த பத்மநாபன் படைத் தளபதியாக இருந்தார் என்பது பொய். மன்னர் மார்த்தாண்ட வர்மாவை அவரது எதிரிகளிடமிருந்து காப்பாற்றியவர்கள் பலர் உண்டு. அவர்களில் அனந்த பத்மநாபனும் ஒருவர். அவ்வளவு நாள் குமரி மாவட்டத்தில் வேலுத்தம்பி தளவாய் உள்ளிட்ட மலையாளிகளின் நினைவாக அமைக்கப்பட்டுள்ள நினைவுச் சின்னங்களை அகற்ற வேண்டுமென மருத்துவர் இராமதாசு கூறுவது சாதி வெறியைத் தூண்டுவதாக உள்ளது.

திருவிதாங்கூர் வரலாறு தெரியாமல் திருவிதாங்கூர் பற்றிப் பேசுவது தவறாகும். அவரது பேச்சு சாதி வெறியைத் தூண்டுகிறது. தமிழ் மொழியும், தமிழ்ப் பண்பாடும் பண்டைய சேர நாடான இன்றைய கேரளத்தில் பாதுகாக்கப்படுகிறது என்பதுதான் உண்மை. அதை மருத்துவர் இராமதாசு அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். தமிழின் சிறப்பெழுத்தான 'ழ'கரத்தைப் பாதுகாத்து வருபவர்கள் மலையாளிகள்தான்" என ஓர் மறுப்புக் கட்டுரையை, 'ஆய்வு களஞ்சியம்' இதழ் மூலம் முனைவர் பத்மநாபன் கொடுத்துள்ளார்.

குளச்சல் போர் குறித்து முனைவரும் ஆய்வாளருமான பத்மநாபன் முன்வைக்கும் விசயத்தில் குளச்சல் மக்கள் மிகவும் தந்திரமாக ஒரு பாறையை கப்பல்போல் அலங்கரித்து டி லெனாயை ஏமாற்றினர். அந்த பாறை இன்று குண்டடிச்சான் பாறை என்று அழைக்கப்படுகிறது. பின்னர் மாட்டு வண்டிகளில் பனந்தடியை வெட்டி வைத்து பீரங்கிபோல் காட்டினர். அதேநாள் இரவு தீப்பந்தங்களுடன் மீனவர்கள் கப்பலை நோக்கி படகிலே சென்றனர். இதைகண்டு பயந்துபோன டி லெனாய் வெள்ளைக் கொடி காட்டி அடிபணிந்தார் என்பதற்கு எந்தவித ஆதாரத்தையும் பத்மநாபன் முன்வைக்கவில்லை. இதுவும் இராமதாசின் வெற்று அறிக்கை போன்றுதான் உள்ளது.

இருப்பினும் மருத்துவர் இராமதாசுக்கு மறுப்பாக முனைவர் பத்மநாபன் முன்வைத்திருக்கும் சில கருத்துகள் ஏற்கத்தகுந்ததே. அனந்த பத்மநாபன் பெயரால்தான் பத்மநாபபுரம் ஊர் பெயர் உருவானது என்று அறிவித்த இராமதாசுக்கு குமரி மாவட்ட வரலாறு தெரியாது என்பது உண்மைதான். முனைவர் பத்மநாபன் எழுதிய மறுப்புக் கட்டுரையை வாசித்துவிட்டு சிலர் அவரை அலைபேசியில் மிரட்டி இருக்கிறார்கள்.

ஆய்வுக் களஞ்சியம் ஆசிரியர் பத்மநாபனை கைது செய்யும்படி பெருந்தலைவர் மக்கள் கட்சியானது சுவரொட்டிகள் ஒட்டியது. இதுகுறித்து முனைவர் பத்மநாபன் அவரது இதழில் கூறியிப்பதாவது: "நாகர்கோவிலின் பல பகுதிகளில் இந்த சுவரொட்டிகள் ஒட்டப்பட்டுள்ளது. சுவரொட்டியில் அச்சகம் பெயரும் இல்லை. அதனை அடித்தவர் பெயரும் இல்லை. முகவரியும் இல்லை. பெருந்தலைவர் மக்கள் கட்சி என்று மட்டும் இருந்தது. அது மட்டுமல்ல, அந்த சுவரொட்டியின் ஒரு நகலையும், அத்துடன் ஒரு குறிப்பையும் வைத்து எனக்கு அனுப்பி இருந்தனர்.

அந்த சுவரொட்டியில், தமிழக அரசே! மாவீரன் அனந்த பத்மநாபன் நாடார் அவர்கள் வரலாற்றை இழிவுபடுத்திய ஒட்டுமொத்த நாடார் சமுதாய மக்களின் உணர்வுகளைப் புண்படுத்தி, சாதிக் கலவரத்தை உருவாக்கும் நாஞ்சில் நாட்டு வெள்ளாளர் டாக்டர் பத்மநாபனை கைது செய்து சிறையில் அடை. ஆய்வுக் களஞ்சியத்தை தடை செய். மாவீரன் அனந்த பத்மநாபன் நாடார் அவர்களுக்கு தச்சன்விளையில் மணிமண்டபம் நிறுவு. பெருந்தலைவர் மக்கள் கட்சி, குமரி மாவட்டம் என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

அந்த குறிப்பில், திருவள்ளுவரை நாஞ்சில் நாட்டவர் என்கிறாய். நாஞ்சில் நாட்டவருக்கு திருவிதாங்கூர் மன்னர் ஆட்சி பொற்காலம் என்கிறாய். மலையாளிகளுக்கு வால் பிடிக்கிறாய். நாடார் சமுதாய மக்களை இழிவுபடுத்துகிறாய். இதை நிறுத்தவில்லை என்றால் உன் ஆய்வுக் களஞ்சியத்தை நடுவண் அரசிடம் முறையிட்டு முடக்குவோம். குறிப்பின் அடியில் எந்த பெயரும் இல்லை. தபால் உறையில் மட்டும் சக்திவேல் முருகன், பெருந்தலைவர் மக்கள் கட்சி, குமரி மாவட்டத் தலைவர் என்று எழுதியிருந்தது.

அனந்த பத்மநாபன் என்பவர் டிலனாயை போரில் தோற்கடித்தார் என்கிற தகவல் தவறாகும். துப்பாக்கியோடு வாள் போரிட முடியாது.

அவரை குமரி மக்கள் தந்திரமாக அடிபணிய வைத்தனர் என்பதுதான் உண்மை. டிலனாயை அனந்த பத்மநாபன் எந்த இடத்தில் போர் நடத்தி வெற்றி பெற்றார் என்று ஆதாரங்களோடு பெருந்தலைவர் மக்கள் கட்சித் தலைவர் நிருபணம் செய்தால் அந்த உண்மை ஆய்வுக் களஞ்சியத்தில் வெளியிடப்படும். ஆனால் அக்கட்சியை தொடர்பு கொள்ள என்னால் முடியவில்லை. அவர்கள் வெளியிட்ட சுவரொட்டியிலும், எனக்கு அஞ்சல் வழி அனுப்பிய குறிப்பிலும் அவர்களது முகவரியோ, தொலைபேசி எண்ணோ இடம் பெறவில்லை. அனந்த பத்மநாபன் பற்றிய உண்மையான வரலாற்றை தகுந்த ஆதாரங்களோடு அனுப்பினால் ஆய்வுக் களஞ்சியம் மகிழ்ச்சியோடு வெளியிடும் என்பதை இதன்மூலம் தெரிவித்துக் கொள்கிறேன். நாடார் சமுதாய மக்களிடம் எனக்கு எந்தவித விரோதமும் கிடையாது. எனது இளைய மகளின் கணவர் நாடார் சமுதாயத்தைச் சார்ந்தவர்தான். அவர் தனது குடும்பத்தோடு ஆத்திரேலியா நாட்டில் உள்ளார்" (ஆய்வுக் களஞ்சியம், சூலை 2013) என்கிறார் முனைவர் பத்மநாபன்.

மேலும் அவர் எழுதுகையில், "குமரி மண்ணில் பெருமை என்கிற தலைப்பில் மதுரையில் நான் ஒரு உரை நிகழ்த்தியபோது ஒருவர் எழுந்து, குமரி மாவட்டம் எல்லா வளமும் கொண்டது. அனால், அங்குள்ள மக்களுக்கு மனவளம் அறவே கிடையாது. பொறாமையும், சாதி வெறியும், மதவெறியும் மிக்கவர்கள். பழி போடுவதில் சிறந்தவர்கள். நல்லதை பாராட்ட மாட்டார்கள். படித்தோர் நிறைந்த குமரி மாவட்டத்தில் நாகர்கோவில் நகர்மன்ற நூலகத்தில் உள்ள பழமையான அரிய நூல்களை தீயிட்டு எரிக்கும் அநாகரிக செயலை நான் நேரிலே பார்த்து கொதிப்படைந்தேன். மக்கள் படித்து என்ன பயன் என்று அவர் கூறியதற்கு எனக்கு பதில் கூறவே முடியவில்லை. நாணி நின்றேன்" என முனைவர் பத்மநாபன் குறிப்பிடுகிறார். அவரின் வேதனை நியாயமானதே.

முனைவர் பத்மநாபன் கருத்துக்கு மறுப்பாக ஆனைக்குடியைச் சாந்த, 'நாடார் மக்கள் சக்தி' இயக்கம் ஒரு மறுப்பு நூலை வெளியிட்டது. அதில், "மலையாள ஆட்சி நடைபெற்ற கி.பி. 1798 முதல் கி.பி. 1956 வரையிலான 158 ஆண்டுகளில் வரலாற்றை எழுதிய சிறீதர மேனன், சங்குண்ணி மேனன், டி.கே. வேலுப்பிள்ளை போன்ற அனைத்து நாயர் வரலாற்று ஆசிரியர்களும் மாவீரன் அனந்த பத்மநாபன் நாடாரின்

வரலாற்றை சாதி காழ்ப்புணர்ச்சியில் ஒரு வரிகூட எழுதாமல் மறைந்தனர்.

இது போதாதென்று, கி.பி. 1828-இல் நடைபெற்ற தோள்சீலைப் போராட்டத்தின்போது மாவீரன் அனந்த பத்மநாபன் நாடாரின் கல்லறை, அதில் மன்னன் மார்த்தாண்ட வர்மன் நாட்டிய வீரக்கல், 23 செப்புப் பட்டயங்கள், அவர் வழிபட்ட பத்திரகாளி அம்மன் கோயில், கொட்டாரம் போன்ற வீடு உள்ளிட்ட அனைத்து வரலாற்றுத் தடயங்களையும் திருவிதாங்கூர் அரசு உதவியுடன் நாயர் சமுதாயத்தவர்கள் அழித்தனர்" என்கிறது. அந்த நூலில், இந்த அழிப்புக்கான எந்தவித தரவுகளும் அந்நூலில் இடம்பெறவில்லை. இந்த அழிப்புக்கான தரவுகள் எதுவும் இல்லை என்பதனை அந்த நூலை தொகுத்த, நாடார் சமூகத்தைச் சார்ந்த நாராயணன் நாடார், அந்தோணி நாடார் மற்றும் செல்வன் நாடார் ஆகியோர் ஒப்புக்கொள்கிறார்கள்.

அதில் மேலும், "158 ஆண்டுகளாக மறைக்கப்பட்ட வரலாற்றை இன்றைய மக்களாட்சியில் நாடார் சமுதாய மக்கள் தூக்கி நிறுத்தத் தொடங்கிய வேளையில் அதனை வெட்டிவிடும் வகையில் குருதிவழிப் பகை கொண்ட அதே ஆதிக்க சக்தியினர் முயற்சித்து வருகின்றனர். அத்தகைய 158 ஆண்டுகாலப் போராட்டத்தின் தொடர்ச்சியாகத்தான் டாக்டர் எச். பத்மநாபன் அவர்கள் வீரத்தமிழன் அனந்த பத்மநாபன் நாடாரின் புகழுக்கு பங்கம் விளைவிக்கும் வகையில் ஆய்வுக் களஞ்சியத்தில் எழுதிய ஆசிரியர் உரையைப் பார்க்க வேண்டும்" என்கிறார்கள்.

அவர்களுடைய மறுப்பின் சாராம்சம்: "மாவீரன் அனந்த பத்மநாபன் நாடார் எதிரிகளால் வஞ்சனையால் கொல்லப்பட்ட பிறகு மன்னர் மார்த்தாண்ட வர்மன் மிகவும் கவலையுற்றார். தன்னை ஊணும் உறக்கமுமின்றி உண்மையாய் இருந்து காத்ததின் நன்றிக்கடனாகக் கல்குளம் கோட்டைக்கு பப்பநாபன் கோட்டை என்று பெயர் சூட்டினார். அதுவே காலப்போக்கில் பத்மநாபபுரம் கோட்டை என்று ஆகியது" என்கிறார்கள். இதற்கான ஆதாரம் முன்வைக்கப்படவில்லை. இச்செய்தி வாழையடி வாழையாக குமரி மாவட்ட மக்கள் கூறி வருகிறார்கள் என்கிறார்கள்.

"அனந்த பத்மநாபன் நாடார் படைத் தளபதியாக இருந்தார் என்பதற்கு பிராந்தநேரியில் கி.பி. 1671-ஆம் ஆண்டு நிறுவப்பட்ட தமிழ்க்

கல்வெட்டு உறுதி செய்யப்படுகிறது" என நூலில் கூறப்படுகிறது. அதற்கான கல்வெட்டு ஆதாரத்தை இந்நூலில் அவர்கள் பதிவு செய்யவில்லை.

"டிலெனாயின் பீரங்கி மற்றும் துப்பாக்கிக்கு நேரே நின்று வாளை வைத்துக்கொண்டு நாம் போரிட முடியாது" என்கிற டாக்டர் பத்மநாபன் கருத்துக்கு, "தமிழர்களான சான்றோர் சமுதாய மக்களும் மீனவ சமுதாய மக்களும், தமிழ் இசுலாமியர்களும் தோளோடு தோள் நின்று ஒருங்கிணைந்து மாவீரன் அனந்த பத்மநாபன் நாடார் தலைமையில் போராடி வெற்றிபெற்றனர்" என்கிற பதில் திருப்திகரமாக இல்லை.

திருவிதாங்கூர் திவானாக இருந்த வேலுத்தம்பி கீழ்ச்சாதியாக இருந்த தமிழர்களை ஒடுக்கினார். மூவாயிரத்திற்கு மேற்பட்ட தமிழர்களைக் கொலை செய்தார் என்பதற்கு பழ. நெடுமாறன் **2013**-இல் எழுதிய, 'தமிழன் இழந்த மண்' நூல் ஆதாரமாக இந்நூலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. நெடுமாறன் எழுதிய நூலை அப்படியே நம்பிவிட முடியாது. அந்நூலில் அதற்கான ஆதாரத்தை அவர் சமர்பிக்கவில்லை. "கோவளம் பகுதியில் வர்த்தகத் துறைமுகம் அமைவதை இலங்கை தடுப்பதாகவும், இந்தியாவை மிரட்டுவதாகவும்" பொய்பெசித் திரியும் பழ நெடுமாறன் எழுதும் வரலாறுகளை பெரும்பாலான மக்கள் நம்புவதும் இல்லை; ஏற்பதும் இல்லை. அங்கு வருவது வர்த்தகத் துறைமுகம் அல்ல; பெட்டகத் துறைமுகம் என்கிற ஒரு சிறு அறிவுகூட இல்லாதவர் பழ நெடுமாறன். கோடிக்கணக்கான பணம் செலவு செய்து, இலங்கைக்கு இந்தியா தொழிற்சாலைகள், துறைமுகங்கள், வீடுகள், மருத்துவ ஊர்திகள் ஆகியவற்றை இலவசமாகக் கட்டிக் கொடுக்கின்றன. அந்த இலங்கையானது இந்தியாவை மிரட்டுகிறதாம். பழ நெடுமாறனின் முட்டாள்தனமான சிந்தனைப் போக்கை உலகம் அறிந்து வியக்கிறது.

குளச்சல் யுத்தத்தில் மாவீரன் ஆற்றிய எழுச்சி உரை என்று ஒரு நீண்ட உரையை அந்த புத்தகத்தில் வைத்திருக்கிறார்கள். எப்படி, இப்படி எல்லாம் ஆதராம் இல்லாமல் உரைகள் உருவாக்க முடிகிறது என்பது ஆச்சரியமாகவே இருக்கிறது. இப்பொழுது மாவீரன் அனந்த பத்மநாபன் ஆற்றிய உரை, உங்களுக்காக...

"வீரத் தமிழர்களே! நமக்கு சோதனைகள் மேல் சோதனைகள் நேர்ந்த வண்ணம் இருக்கிறது. காரிருள் அகன்றது. விடிவெள்ளி தோன்றியது

என்று பூரித்தோம். நாம் சிந்திய இரத்தம் வீண் போகவில்லை. கொடியவர்களை, ஆதிக்க வெறியர்களை, கொண்டுங்கோல் ஆட்சியர்களைக் கொன்று முடித்தோம். திருவிதாங்கோடு இராச்சியத்தில் உள்ள மக்கள் எல்லாம் நம் வீரத்தைப் போற்றிப் புகழ்ந்து, மகிழ்ந்து, ஆராதனை செய்துவரும் இந்நாளில் மீண்டும் போர்ப்பறை ஒலிக்கட்டும். சங்குகள் முழங்கட்டும்.

இதுவரை நாம் நடத்திய போரெல்லாம் உள்நாட்டுப் போர்களே! பலம் வாய்ந்த எதிரிகளை, நயவஞ்சகங்களை மற்றும் சதிகாரக் கும்பல்களை வீழ்த்தவே! ஆனால் நாம் நாளை சந்திக்கப் போகும் எதிரி சாதாரணமானவர்கள் அல்ல. சக்தி மிகுந்தவர்கள். உடல் வலிமையையும் உள்ளத் திடமும் தன்னம்பிக்கையும் மதிநுட்பமும் எதையும் நன்கு ஆராய்ந்து முடிவெடுக்கும் ஆற்றலும் உடையவர்கள். புதிய போர்க் கலைகள் நன்கு கற்றவர்கள். எதிரிகளைத் துப்பாக்கிகளாலும், பீரங்கிகளாலும் தாக்கி கதிகலங்க வைப்பதில் பேர் போனவர்கள். எளிதில் வென்றுவிடலாம் என்று நினைத்தால் ஏமாந்து விடுவோம். மிகவும் எச்சரிக்கையோடு செயல்பட வேண்டும். நாளை விடிவதற்குள் எல்லா ஏற்பாடுகளும் செய்தாக வேண்டும். தூக்கத்தைத் தவிர்த்து ஆக்கத்தோடும் ஊக்கத்தோடும் செயல்பட்டால்தான் போர்க்களத்தில் நாம் வெற்றிவாகை சூட முடியும். நமது ஒற்றர்களும் படை வீரர்களும் கடலோரங்களில் அணிவகுக்க வேண்டும்.

தோற்கடிக்கப்பட்ட எட்டுவீட்டு நாயர் நில பிரபுக்களின் மிச்ச சொச்சங்கள் அயலானுக்கு நம்மைக் காட்டிக் கொடுக்காமல் கண்காணிக்க வேண்டும். அது மட்டுமல்ல, கோட்டை கொத்தளங்களையும் அரண்மனைகளையும் எதிரிகளின் எதிர்பாராத் தாக்குதலில் இருந்து பாதுகாக்க வேண்டும். சிலம்பக் கலையில் வல்லுநர்களாக உள்ள நம் ஆசான்களும் ஆளுக்கு ஆயிரம் சான்றோர் இளைஞர்களுடன் கையில் கிடைத்த வெட்டுக்கத்தி, அரிவாள், கோடாரி, வாள், கடப்பாறை, வில், அம்பு போன்றவற்றுடன் படைதிரண்டு குளச்சல் நோக்கி வர வேண்டும்.

பரங்கிகள் பீரங்கி உபயோகித்துத் தாக்குவதில் வல்லவர்கள். நம்மிடம் பீரங்கிகள் இல்லாததால் பரங்கிகளை கதிகலங்க வைக்க சில உபாயங்களும், போர்த் தந்திர முறைகளும் கடைபிடிக்க வேண்டும். நூற்றுக்கணக்கான பனை மரங்களை முறித்து அவற்றை 10 முதல் 15 அடி நீளத்தில் துண்டு போட வேண்டும். பிறகு அவற்றின்

நடுப்பகுதியிலுள்ள வெள்ளையான பகுதியை அகற்ற வேண்டும். இரண்டு பக்கத்திலும் கரி பூசிக் கறுப்பாக்க வேண்டும். அவற்றின் முனையில் வட்ட வடிவிலான வெடிக்கல்லை வைத்து வெடிக்கச் செய்ய வேண்டும். நாம் எவருக்கு அடிமையில்லை. ஒன்றுபடுவோம். போராடுவோம். வெற்றி நமதே!"

அனந்த பத்மநாபன் குறித்த அனைத்து ஆவணங்களையும் நாயர்கள் அழித்துவிட்டதாக கூப்பாடு போட்டவர்கள் எப்படி அனந்த பத்மநாபனின் உரையை அச்சு பிசகாமல் எடுத்து இயம்ப முடிந்தது? ஏன் முடியும் என்றால் எங்களிடம்தான் ஆதரங்கள் இல்லையே தவிர கற்பனை வளத்திற்கு பஞ்சம் இல்லையே?

மருத்துவர் இராமதாசின் கருத்துக்கு குமரி மாவட்டத்தைச் சார்ந்த ஆய்வாளர் அ.கா. பெருமாள் மறுப்புத் தெரிவித்துள்ளார். அவர் கூறுவதாவது: "நினைவுச் சின்னங்களை அழிப்பது என்பது வரலாற்றை மறைப்பது போன்றது. அதிலும் நாட்டிற்காக உயிர் கொடுத்தவர்களின் நினைவுகளை அழிக்கக் கூறுவது கொடூரமானது. தன் இனம் தவிர்த்த பிற இன நினைவுகளை அழிக்கக் கூறுவது அதிலும் கொடுமையானது. உண்மையான வரலாற்று நினைவுகள் தெருவோர சிலைகளிலும், கட்டிடங்களிலும், சுவரொட்டிகளிலும், துண்டு பிரசுரங்களிலும், காற்றில் கரையும் பேராசைகளிலும் வாழவில்லை. மக்களின் நினைவுகளிலும், வாய்மொழிச் செய்திகளிலும், ஆவணங்களிலும் பதிந்துள்ளன. எல்லா காலத்திலும் உண்மையைத் தோண்டி எடுக்கும் ஆய்வாளன் பிறந்துகொண்டே இருக்கிறான். கட்டப்பொம்மனை தூக்கிலிட்டபோது கிழக்கிந்திய நிறுவன அதிகாரிகள் அவன் தொடர்பான ஆவணங்களை அழிக்க எடுத்த முயற்சியை வரலாறு கூறுகிறது.

தமிழகத்தில் வீரப்பாண்டிய கட்டப்பொம்மன், பெரிய மருது, சின்ன மருது, கான் சாகிப் போன்றோர்களுக்குரிய முதல் இடம் வேலுத்தம்பி தளவாய்க்கும் உண்டு. கேரளத்தில் ஆங்கிலக் கிழக்கிந்திய நிறுவனப் படையுடன் மோதிய ஆரம்பகால வீரர்களில் மலபார் பழசிராசா, கொச்சி பலியத் அச்சன், வேலுத்தம்பித் தளவாய் ஆகிய மூவரும் முக்கியமானவர்கள். வேலுத்தம்பி 1765 - 1809 ஆண்டுகளில் வாழ்ந்தவர். இவர் 1799 வரை இரணியல் காரியக்காரராக இருந்தார். இதே ஆண்டில் திவான் ஆனார்.

இவர் காலத்தில் கிழக்கிந்திய நிறுவன அரசானது திருவிதாங்கூர் அரசரிடம் 8 இலட்ச ரூபாய் கப்பம் கேட்டது. திவான் வேலுத்தம்பி திருவிதாங்கூரின் பொருளாதார நிலையை விளக்கினார். ஆளுநர் வெல்லிசுக்கு கடிதம் எழுதினார். நிறுவன அரசு அவர் கடிதத்தை நிராகரித்தது. அதனால் அவர் நிறுவனப் படையை எதிர்கொள்ள வேண்டியதாயிற்று.

1809-இல் கர்னல் மேசர் ஆரல்வாய்மொழி கோட்டையை இடித்துவிட்டு கொல்லம் சென்றார். மண்ணடியில் வேலுத்தம்பியுடன் போரிட்டார். வேலுத்தம்பி டச்சுப்படை வீரர்களால் சூழ, அவர்கள் கையால் சாவு ஏற்படாமல் இருக்க தானே தன் கழுத்தை வெட்டி மரணம் அடைந்தார். அன்றைய திருவிதாங்கூர் ரெசிடென்றின் சிபாரிசில் தம்பியின் மரித்த உடலை திருவனந்தபுரத்தில் கழுவில் குத்தி வைத்தார்கள். உள்ளூர் துரோகிகள் சிலர், கட்டப்பொம்மன் தூக்கிலிடப்பட்டபோது அவனது உடலை இப்படி அவமானப்படுத்தவில்லை.

கட்டப்பொம்மன் தூக்கிலிடப்பட்ட பிறகுதான் வேலுத்தம்பி திவான் ஆனார். கட்டப்பொம்மனைப் போன்று கப்பம் கொடுக்க மறுத்த காரணத்திற்காகவே கொலை செய்யப்பட்டார். இது வரலாறு. இப்படியான தியாகியின் நினைவுச் சின்னத்தை அழிப்பது என்பது வெள்ளைகார அரசும், ரெசிடென்றுகளும் தம்பியின் மரித்த உடலைக் கம்பியால் குத்தி வைத்து வேடிக்கை பார்ப்பதைவிட கொடூரமான செயல். அதைவிடக் கொடூரமான செயல் வேலுத்தம்பியின் நினைவுச் சின்னத்தை அழிப்பது" என்கிறார் அ.கா. பெருமாள். மேலும் அவர் அனந்த பத்மநாபனைப் பற்றி சில குறிப்புகளையும் தருகிறார்:-

1. ஒட்டன் கதையில் (சர்வேசுரன் பதிப்பு, மனோ வெளியீடு, மதுரை 1982) அனந்தன் களரி வீரனாக ஒட்டனுக்கு உதவுபவனாக வருகிறான் (வரி 77 - 85) இதில் அனந்தன் பெரியவனாக வர்ணிக்கப்படுகிறான். மார்த்தாண்ட வர்மன் இவன் பாதுகாப்பில் மாதம் வாழ்கிறார் (வரி 84).

2. அனந்தன்போல் மார்த்தாண்ட வர்மாவிற்கு அக்கலாத்தில் உதவியவர்கள் ஒட்டன், தாணுமலையன் எனப் பலர் (வரி 99, 100).

3. எட்டுவீட்டு தம்புரான் கதை அனந்தனைப்போல் வேறு சில வீரர்கள் மார்த்தாண்ட வர்மாவுக்கு உதவியதைப் பட்டியலிடும்.

திருவிதாங்கூர் வரலாறு தெரியாமல் மருத்துவர் இராமதாசு வேலுத்தம்பியைப் பற்றி அபசாரமாகப் பேசியது தவறாகும் (ஆய்வுக் களஞ்சியம், மே **2013**) எனவும் தனது கருத்துக்களை அ.கா. பெருமாள் பதிவு செய்திருக்கிறார்.

கேரள அரசானது, வேலுத்தம்பி தளவாய் நாயரின் திருவுருவச் சிலையை திருவனந்தபுரம் தலைமைச் செயலகத்தின் முன்பாக நிறுவி அழகு பார்க்கிறது. அவருக்கு மண்ணடியில் திருவுருவ சிலை அமைக்கப்பட்டுள்ளது. தலக்குளத்தில் தமிழக அரசு சார்பில் அவருக்கு திருவுருவ சிலை அமைக்கப்படுள்ளது. கேரள அரசானது, கேரள பல்கலைக்கழகம் சார்பில் திருவனந்தபுரத்தில் வேலுத்தம்பி நினைவு நாயர் சேவை சமூகக் கல்லூரி ஒன்றினை நிறுவியுள்ளது. அருமனையில் வேலுத் தம்பியைப் பெருமைப்படுத்தும் வகையில் வேலுத்தம்பி நினைவு கலை மற்றும் அறிவியல் கல்லூரி ஒன்று உள்ளது.

வரலாறுகள் வாசகர்கள் மத்தியில் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருக்கிறது. நடுநிலையான வாசகர்களால்தான் உண்மையான வரலாறை புரிந்து கொள்ளவும், தெரிந்து கொள்ளவும் முடியும். அதற்கு சாதி கடந்த பார்வை நிச்சயம் அவசியம்.

## 4

# டி லெனாயை கைது செய்தவர் குமார உதய மார்த்தாண்டன் நாடார்!

'இது ஒரு வரலாற்று நாவல்' என்கிற அடைமொழியோடு, "டச்சுப்படை வென்ற குமார உதய மார்த்தாண்டன் நாடார்" என்கிற பெயரில் கே. திரவியம் என்பவர் இந்நூலை எழுதியிருக்கிறார். இந்நூல் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ளது. இந்நூலை எழுதியவர் மண்டைக்காடு அருகிலுள்ள நடுவூர்க்கரை ஊரைச் சார்ந்தவர். சென்னையில் ஆங்கிலத்துறை பேராசரியராக பணி செய்து வந்தவர். இவரது நாவலில் குளச்சல் போர் குறித்து கூறப்படுவதைக் காண்போம்:-

"அரண்மனை நுழைவாயிலில் ஒரே கூச்சலும், குழப்பமும், எல்லோரும் திகைத்தனர். ஊருக்கு புதிதாக, தோற்றத்திலும் புதுமையாக, புதிராக மூன்று நபர்கள். அரைக்கட்டில் வாளும், துப்பாக்கியும், கத்தியும் தரித்திருந்தனர். வெள்ளை வெளேரென்று நிறம். கடல் நுரைபோல் நரைத்த தலைமயிர். பூனை கண்கள். மொழி புரியாததால் அவர்களை நுழைவாயிலில் நின்ற படைவீரர்கள் தடுத்தனர். ஆனால், அவர்கள் தடுத்தவர்களை பிடித்து தள்ளி கோட்டைக்குள் நுழைய எத்தனித்தனர். உடனே படைவீரர்கள், அவர்களை விடாதே பிடி, வெட்டு என்று கூச்சல் போட்டனர். செய்தி அனந்த பப்புவுக்கு எட்டியதும் அவர்களை அரண்மனைக்குள் புக அனுமதி கொடுத்து ஆணையிட்டார். பதினைந்து மின்னல் வேகப் படைவீரர்கள் அவர்களை பின் தொடர்ந்தனர்".

ஒரு நாட்டிற்குள், அதுவும் அரண்மனை வாசல் வரை வெளிநாட்டைச் சார்ந்த மூன்றுபேர் வந்திருக்கிறார்கள். அவர்கள் இந்த நாட்டைச் சார்ந்தவர்கள் அல்ல என்பதனை மிக இலகுவாக அடையாளம் கண்டிட முடியும். அவர்களைப் பற்றிய எந்தவொரு தகவலும் ஒற்றர்களால் முன்கூட்டியே கொடுக்க இயலவில்லை. அப்படியாக திருவிதாங்கூர் நாடு ஒன்று இருந்திருக்கிறது. அனந்த பத்மநாபனைத்தான் இக்கதையில் இவர் அனந்தபப்பு என்கிறார்.

“அவர்கள் கொச்சையான ஆங்கிலத்தில் கூறியதை செபமணி நாடார் தமிழ் படுத்தினார். அவர்கள் காலந்து நாட்டைச் சார்ந்தவர்கள், மாலுமிகள். தங்களுடைய பெயர்கள் முறையே டிலனாய், பிரான்சிசு, சேவியர் என்பதாகும். தங்களுடைய தேசத்து மன்னர், திருவிதாங்கோடு இராச்சியத்தின் மன்னருடன் வாணிபத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள விரும்புவதாகவும், அதன்பொருட்டு இந்நாட்டு மன்னரைப் பார்த்து, உரையாடி உடன்பாடு ஏற்படுத்தி கொள்ள வேண்டுமென்ற குறிக்கோளுடன் வந்துள்ளதாகக் கூறினர்”. அவர்கள் கொச்சையான ஆங்கிலத்தில்தான் பேசினார்கள் என்பது ஆங்கிலம் படித்து, ஆங்கிலத் துறையில் பணிபுரியும் பேராசிரியர் கே. திரவியம் சொன்னால் மாணவர்களைப் போன்று வாசகர்களும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

ஒரு சிறப்பான விருந்து வேளைக்குப் பிறகு மீண்டும் சபை கூடியது. அப்பொழுது, “டிலனாய் என்பவன் எழுந்து அவர்கள் நாட்டு மன்னனிடம் செய்து கொள்ளவேண்டிய உடன்பாட்டை விளக்கினான். அதை செபமணி நாடார் தமிழில் மொழிபெயர்த்தார். திருவிதங்கோட்டு இராச்சியத்தின் மன்னர் வீரபராக்கிரமன் திரு. மார்த்தாண்ட வர்மனை காலந்து மன்னன் சார்பில் பல்லாண்டு வாழ்க, வாழ்க என்று வாழ்த்துகிறேன். உங்கள் நாடு மலைவளம், மண்வளம், நீர்வளம் மிகுந்த சிங்காரத் தோட்டம். இது ஒரு சொர்க்க பூமி என்று கேள்விப்பட்டு உங்கள் நாட்டோடு வாணிபத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளலாம் என்பது எங்கள் குறிக்கோள். மா, பலா பழங்கள், காபி, மிளகு, ஏலக்காய் போன்ற பொருட்கள் எங்களுக்கு மிகவும் பிடித்தமானவை. எங்கள் நாட்டில் அரிதானவை. எனவே இந்த அரிய பொருட்களை உங்களிடமிருந்து பெற்றுச்செல்ல எங்களுக்கு பெரிய அவா. நாங்கள் எங்கள் பொருட்களை தந்து பண்டமாற்று செய்து கொள்ளலாம். நாங்கள் நிர்ணயிக்கும் விலையை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். மேலும், இயற்கை துறைமுகமான குளச்சலில் ஒரு தானியக்கிடங்கு கட்டுவதற்கும் எங்கள் படை வீரர்கள் தங்குவதற்கு பாதுகாப்பாக ஒரு கோட்டை கட்டுவதற்கும் அனுமதிக்க வேண்டும். ஆங்கிலேயர்களை கோட்டை கட்டுவதற்கு அனுமதிக்கக்கூடாது. வேறெந்த நாட்டு கப்பல்களும், குறிப்பாக ஆங்கிலேய, பிரஞ்சு, போர்ச்சுக்கீசு, இத்தாலிய நாட்டு கப்பல்களை துறைமுகத்தில் தங்க அனுமதி மறுக்க வேண்டும்” என்று கோரினார். அந்த காலத்தில் இருந்தது எல்லாமே இயற்கைத் துறைமுகம்தான். இயற்கைத்

துறைமுகமான குளச்சலில் என்று டிலனாய் பேசுவதற்கு வாய்ப்பே இல்லை என்றாலும் நாவலில் முன்பின் இருக்கத்தான் செய்யும்.

"இந்த, "உடன்பாட்டை நீங்கள் புறக்கணித்தால், ஒத்துக் கொள்ளாவிட்டால் போர் மூளும். அதன் விளைவு பயங்கரமாக இருக்கும். எங்கள் நாட்டு புதிய போர் முறைகள் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருப்பீர்கள். உடனே அனந்தபப்பு குறுக்கிட்டு, ஆம்! உங்களுடைய புதிய போர் முறைகளைப் பற்றி கேள்விப் பட்டிருக்கிறோம். உடன்பாட்டுக்கான நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும் அல்லது விளைவு பயங்கரமாக இருக்கும். என்ன இறுமாப்பு. எத்தனையோ மைலுக்கு அப்பாலில் இருந்துவந்து எங்களை எச்சரிக்கிறாயா? நாங்கள் என்ன காய்கறிகளா வெட்டி நறுக்க அல்லது பூ வைத்த பூவையர்களா பாய்ந்துபோய் ஒளிந்துகொள்ள. உடனே மாவீரன் செல்லையாவும், யூசுப்பும், இசுமாயிலும், மூப்பனும் வாளையும், துப்பாக்கியையும் எடுத்துக்கொண்டு பறங்கிகள்மீது பாய்ந்தனர். மாவீரன் அனந்தபப்பு நாடார் அவர்களை தடுத்து நிறுத்தினார்".

செல்லையாவும், யூசுப்பும், இசுமாயிலும், மூப்பனும் இக்கதையில் புதிதாக இடம்பிடித்து இருக்கிறார்கள். அவர்களும் அரண்மனை மெய்காப்பாளர்களாக இருந்திருக்கலாம். அவர்களைப் பற்றிய பதிவுகள் ஏதும் ஆவணங்களில் இல்லை. இந்நூலை எழுதிய பேராசிரியர் கே. திரவியம், எந்தெந்த நூல்களை ஆதாரத்திற்கு எடுத்துக் கொண்டார் என்கிற விவரம் நூலில் சொல்லப்படவில்லை. இது ஒரு கதை நாவல் என்பதால் அது தேவையில்லை எனக் கூட நூலாசிரியர் கருதியிருக்கலாம். இருப்பினும், அதில் வரலாற்றைத் தேடுகிற வாசகர்களுக்குத்தான் சிக்கல் எழுகிறது.

'பூ வைத்த பூவையர்களா பாய்ந்துபோய் ஒளிந்துகொள்ள' என்கிற வார்த்தையானது பெண்கள் வீரமற்றவர்கள், கோழைகள் என்பதனை பறைசாற்றுகிறது. வேலு நாச்சியார், சல்காரி பாய், இராணி அவந்திபாய் போன்ற வீர மங்கைகள் பலர் இருந்துள்ளனர். 1810-இல் இராணி கௌரி இலட்சுமிபாய் திருவிதாங்கூரை ஆட்சி செய்தார். 1923-இல் சேது இலட்சுமிபாய் திருவிதாங்கூரை ஆட்சி செய்தார். அதற்காக நூலாசிரியரை, வரலாறு படிக்காத ஆங்கிலப் பேராசிரியர் என எடுத்துக் கொள்ளக்கூடாது.

தூதுவந்த டிலனாய், பிரான்சிசு, சேவியர் ஆகியோரைப் பார்த்து அனந்தபப்பு பேசுவதுதான் விசித்திரமானவை. "எங்கள் முன்னோர்கள் எழுப்பிய கோவில்களை, கோட்டைகளை, அரண்மனைகளை பிடித்துக்கொண்டு எக்காளமடித்து, எங்குல மக்களுக்கு இறைவழிபாடு செய்யக்கூட மறுத்தனர். எங்குல மக்கள் தேங்காய், பழம், பொற்காசுடன் இறைவழிபாட்டுக்கு சென்ற பொழுதெல்லாம், சுயநலமே உருவெடுத்த பிராமணர்களால் ஏவி விடப்பட்ட குண்டர்கள் குண்டாந்தடியுடன் எங்குல மக்களை தடுத்து நிறுத்தி, பொற்காசையும், தேங்காய், பழம், சர்க்கரை, அரிசி முதலியவற்றை பெற்றுக்கொண்டு கோயிலினுள் வராதே என்று அடித்துத் துரத்தினர். அப்பொழுதெல்லாம் புராணங்களில் கதைகளில் தோன்றுவதுபோல் இறைவன் தோன்றி பக்தர்களை இரட்சிப்பான் என்று நம்பி ஏமாந்து தவித்தபொழுது, 'உன்னைப்போல் உன் அயலானையும் நேசி' என்ற இயேசு கிறித்துவின் போதனையுடன் ஆலய மணிகள் ஒலித்தன; நேசமணிகளின் நேசக்கரங்கள் எங்குல மக்களை அரவணைத்து ஆலிங்கனம் செய்தது". இவையெல்லாம் யார் கிட்ட பேசுகிறாரு என்றால் டிலனாயிடம் பேசுகிறார். அதுவும் நாடார்களின் பிரச்சனைகள் குறித்து பேசுகிறார்.

"காட்டு மிராண்டிகளிடம் உதைப்படப் போவதை, கீழ்த்தரமாக நடத்தப்படுவதை வெறுத்தனர். மனம் மாறினர். மதம் மாறினர். மனம் மாறுவதோ, மதம் மாறுவதோ ஒரு நம்பிக்கையைவிட்டு இன்னொரு நம்பிக்கையை ஏற்றுக் கொள்வதோ ஒரு மனிதனின் பிறப்புரிமை. இதனால் இன்னொரு மனிதன் கடினமோ, இழப்போ, விருப்போ, வெறுப்போ அடைய தேவையில்லை என்பதுதான் எங்குல மன்னன் மனிதருள் மாணிக்கம் மார்த்தாண்ட வர்மாவின் கொள்கையும். அதேவேளையில் நாயக்கர்கள் காட்டுமிராண்டிகளை ஏவிவிட்டு பல தேவாலயங்களையும், மசூதிகளையும் தீக்கிரையாக்கி எங்குல மக்களை அச்சுறுத்தினர். ஆனால் எங்குல மக்களோ உடைக்கப்பட்ட, நொறுக்கப்பட்ட, பொசுக்கப்பட்ட தேவாலயங்களின் மசூதிகளின் சாம்பலால், பொடியால், துரும்பால் புதிய தேவாலயங்களை மசூதிகளை அஞ்சாது தயங்காது துவளாது கட்டி எழுப்பினர். தன்மானத்தோடு இறைவழிபாடு செய்தனர்". டிலனாயிடம் கிறித்தவத்திற்கும், இசுலாமிற்கும் மாறியவர்களைக் குறித்து பெருமையுடன் அனந்த பத்மநாபன் பேசுகிறார்.

மேலும் அவர் தொடர்ந்து, "எங்கள் அடிமைத்தளை அறுக்கப்

படுவதற்கு நாங்கள் சுயமாக சிந்திப்பதற்கு, சுய மரியாதையோடு வாழ்வதற்கு செபமணி நாடாரின் போதனையும் ஒன்று. எனவே எங்குல மக்களுக்கு செபமணி நாடார் ஒரு வரப்பிரசாதம். ஒருகாலத்தில் காட்டுமிராண்டிகளாக இருந்த ஐரோப்பியர்களை நற்பண்பு மிக்க மனிதர்களாக, நாகரீகம் உடையவர்களாக மாற்றிய இயேசுவின் நற்போதனைகளை, எங்குல மக்கள் இங்கே ஏற்கனவே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்பதனை நான் பெருமிதத்தோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஒருகாலத்தில் காட்டுமிராண்டிகளாக இருந்த அரேபியர்களையும், மத்திய ஆசிய மக்களையும் பண்புடைய மனிதர்களாக, நாகரீகம் படைத்தவர்களாக மாற்றிய இயேசுவின், நபியின் போதனைகள் எங்குல மக்கள் இங்கேயும் ஏற்றுக்கொண்டு புகழ் மணக்க வாழ்கின்றனர். ஆயினும் நாங்கள் மதபேதமில்லாமல் பகைவனின் பிரித்தாளும் சூழ்ச்சியால் மயங்காமல் ஒருதாய் பிள்ளைகளைப்போல் ஒன்றாக வாழ்கிறோம். இந்த தென்னாட்டில் என்பதை உனக்கு கூறிக்கொள்ள விரும்புகிறோம். நீ கூறிய நிபந்தனைகள் அடங்கிய உடன்பாட்டை நாங்கள் ஏற்றுக்கொள்ள தயாரில்லை. இப்பொழுதே, இன்றோ, நாளையோ, எப்பொழுதாகிலும் போர்க்களத்தில் சந்திக்கத் தயார்" என்றார்.

நாடார் சாதியினரின் அடிமைத் தளை அறுக்கப்படுவதற்கும், நாடார்கள் சுயமாக சிந்திப்பதற்கும், சுய மரியாதையோடு வாழ்வதற்கும் செபமணி நாடாரின் போதனைகள்தான் காரணமாம். இதனை இந்து நாடார்கள் எப்படி ஏற்றுக் கொள்வார்கள்? அனந்தனுக்கும் கிறித்தவ செபமணி நாடார்தான் வழிகாட்டியாக இருந்திருக்கிறார். இல்லை என்றால் அனந்தன் சுயமாக சிந்திப்பதற்கும், சுய மரியாதையோடும் வழ்வதற்கு வாய்ப்பில்லை. இதனை டிலனாயிடம் அனந்தன் ஆவேசமாகப் பேசியிருக்கிறார்.

ஐரோப்பியர்களையும், அரேபியர்களையும், மத்திய ஆசிய மக்களையும் நாகரீகம் படைத்த மக்களாக இயேசு மற்றும் முகம்மதுவின் போதனைகள் மாற்றியிருக்கிறது. அப்படிப்பட்ட கிறித்தவ, இசுலாமியப் போதனைகளை நாடார்கள் உள்வாங்கி இருக்கிறார்கள். அதன்மூலம் அவர்கள் அனைவரும் நாகரீக உலகிற்குள் நுழைந்திருக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் ஒருதாய் பிள்ளைகளைப் போன்று வாழ்ந்திருக்கிறார்கள்.

கிறித்தவம், இசுலாம் தழுவாத பிற சாதியினர் நாகரீகம் அடையாமல் இருந்திருக்கிறார்கள். மதம் மாறியவர்கள் கீழ்சாதி, மேல்சாதி

கட்டமைப்புகளிருந்து வெளியே வந்துவிட்டார்கள் என்பதனை தலைகீழாக நிமிர்ந்து நின்று நம்பலாம்.

"நாளை போர் களத்தில் சந்திப்போம் என்று கூறி, சவால் விட்டுச் சென்றனர் டிலனாயும், தோழர்களும்". டிலனாயும் அவரோடு வந்தவர்களும் எப்பாதையில் எங்கு திரும்பிச் சென்றார்கள் என்கிற செய்தி அக்கதையில் சொல்லப்படவில்லை. நாளை போர் என்பதால் பரபரப்பு ஏற்பட்டது. திருவிதாங்கூர் நாட்டிலுள்ள நாடார்களுக்கு அறிவிப்புகள் கொடுக்கப்பட்டன.

"திருவிதாங்கோடு இராச்சியத்தின் தலைநகரான பத்மநாபபுரம் போர்க்கோலம் பூண்டது. இராச்சியத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்து சான்றோர் குலப் படை வீரர்களும், ஆசான்களும் மாவீரனின் அழைப்பை ஏற்றுக்கொண்டு மேலும் மேலுமாக வந்த வண்ணமாக இருந்தனர். மூப்பன்கள் வெடி மருந்துகளுடன் வந்தனர்". தொலைபேசிகளும், தொலைக் காட்சிகளும் இல்லாத அன்றைய காலகட்டத்தில் மின்னல் வேகத்தில் அனைவருக்கும் அழைப்பு கொடுத்திருக்கிறார்கள். அவர்களும் மின்னலைப் போன்று வந்துவிட்டார்கள். வெடி மருந்துகளுடன் வந்து விட்டார்கள். அன்றைய காலகட்டத்தில் மக்கள் வெடி மருந்துகள் வைத்துக்கொள்ள மன்னன் அனுமதித்து இருக்கிறார்.

அவர்கள் மத்தியில், "இளைஞர்களையும், களம் பல கண்ட காளையர்களையும், மார்பிலே காயங்கொண்ட தழும்பேறிய மாவீரர்களையும், ஆசான்களையும் புன்முறுவல் பூத்து பூரிப்புடன் வரவேற்று, வரப்போகும் குளச்சல் யுத்தத்தில் செயல்பாடு முறைகளையும் யுக்திகளையும் விளக்கி ஒரு நீண்ட சொற்பொழிவு ஆற்றினார் மாவீரன்". போருக்கான திட்டமிடுதல் மிக முக்கியமாக கருதப்படுகிறது. அதற்கான பணிகளை செய்வதற்கு அனந்தபப்பு ஆலோசனை வழங்கினார்.

"நாளை நாம் சந்திக்கப் போகும் எதிரி சாதரணமானவர்கள் அல்ல. சக்தி மிகுந்தவர்கள். உடல் வலிமையையும், உள்ளத்தில் திடமும், தன்னம்பிக்கையும், மதிநுட்பமும், எதையும் நன்கு ஆராய்ந்து முடிவெடுக்கும் ஆற்றலும் உடையவர்கள். புதிய போர் கலைகளை நன்கு கற்றவர்கள். எதிரிகளை துப்பாக்கியாலும், பீரங்கிகளாலும் தாக்கி கதிகலங்க வைப்பதில் பெயர் போனவர்கள். எளிதில் வென்று விடலாம் என்று நினைத்தால் ஏமாந்து விடுவோம். மிகவும் எச்சரிக்கையோடு

செயல்பட வேண்டும். நாளை விடிவதற்குள் எல்லா ஏற்பாடுகளும் செய்தாக வேண்டும். தூக்கத்தை தவிர்த்து ஆக்கத்தொடும், ஊக்கத்தோடும் செயல்பட்டால்தான் போர்க்களத்தில் நாம் வெற்றிவாகை சூட முடியும். நமது ஒற்றர்களும் படைவீரர்களும் கடல் ஓரங்களில் அணிவகுக்க வேண்டும். தோற்கடிக்கப்பட்ட எதிரிகளின் மிச்ச சொச்சங்கள் அயலானுக்கு நம்மை காட்டி கொடுக்காமல் கண்காணிக்க வேண்டும். மட்டுமல்ல, கோட்டை கொத்தளங்களையும் அரண்மனைகளையும் எதிரிகளின் எதிர்பாரா தாக்குதலில் இருந்து பாதுகாக்க வேண்டும்". ஆம்! எதிரிகள் எப்படிப்பட்டவர்கள் என்பது குறித்து ஒரு விளக்கவுரை ஆற்றியிருக்கிறார். இவ்வாறு யாரும் தூங்காமல் பணி செய்ய வேண்டுமென அறிவுரை கூறியிருக்கிறார். நாளை விடிவதற்குள் எல்லா வேலைகளையும் செய்து முடித்துவிட வேண்டும் என்கிறார். இதன் பிறகுதான் ஒரு முக்கிய செய்தியானது வருகிறது.

"படை நிலத்திலும், கல்குளத்திலும் பகைவர்களை தோற்கடித்து புறமுதுகு காட்டி ஓடச்செய்து வெற்றிவாகை சூடி சான்றோர் குலப் படைக்கு மங்காப்புகழ் ஈட்டித் தந்த வீரத் திருமகன் நடுவூர்க்கரை குமார உதய மார்த்தாண்டனே குளச்சல் போரையும் வென்று வரலாறு படைத்து வையகம் புகழ பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்". இதுவரை நடந்த போர்களிலும், கல்குளத்தில் வைத்து நடந்த யுத்தத்திலும் பகைவர்களைத் தோற்கடித்து வெற்றிவாகை சூடியவர் தளபதியார் நடுவூர்க்கரை குமார உதய மார்த்தாண்டன். அவரின்மீது அனந்தனுக்கு நம்பிக்கை இருக்கிறது. எப்போராக இருந்தாலும் அவர் வெற்றிவாகை சூடிடுவார். அந்த வகையில் குளச்சல் போருக்கு தலைமை தாங்கும் பொறுப்பும் நடுவூர்க்கரை குமார உதயமார்த்தாண்டனுக்கு வழங்கப்பட்டது.

நடுவூர்க்கரை என்கிற ஊரானது மண்டைக்காடு அருகாமையில் உள்ளது. திருவள்ளுவர் முட்டத்தில் அருகிலுள்ள திருநயினார் குறிச்சியில் பிறந்தார் என எழுதியதற்காக, அதில் மனம் மகிழ்ந்து மாதம் தோறும் ஏழாயிரம் ரூபாயை, 'ஆய்வுக் களஞ்சியம்' ஆசிரியர் பத்மநாபனுக்கு பணி ஓய்வு ஊதியமாக, மரிக்கும் வரை சேப்பியார் கொடுத்து வந்தார். அதுபோல் வருங்காலங்களில் யாராவது ஒருவர் உணர்வுகளால் எழுப்பப்பட்டு இந்த நாவலாசிரியருக்கும் உதவி செய்ய வரக்கூடும்.

“வெள்ளை பறங்கிகள், பீரங்கிகள் உபயோகித்து தாக்குவதில் வல்லுனர்கள் என்பது நாடறிந்த உண்மை. நம்மிடம் பீரங்கிகள் இல்லாததால் பறங்கிகளை கதிகலங்க வைக்க சில உபாயங்களையும், போர் தந்திர முறைகளையும் கடைபிடிக்க வேண்டும். நூற்றுக்கணக்கான பனை மரங்களை முறித்து, அவற்றை பத்து பதினைந்து அடி நீளத்தில் துண்டு போட வேண்டும். பிறகு அவற்றின் நடுப்பகுதியிலுள்ள வெள்ளையானப் பகுதியை அகற்ற வேண்டும். இரண்டு பக்கத்தில் கரிப்பூசி கறுப்பாக்க வேண்டும். வெடி மருந்துகளை பயன்படுத்துவதில் புகழ்பெற்ற நமது மூப்பன்கள் நம்மிடம் இருக்கும் வெடி மருந்துக்களை பனைமரப் பொந்துகளில் வைத்து அவற்றுடன் இரும்பு போன்ற குண்டுகளை வைக்க வேண்டும். அவர்களுக்கு தெரிந்த மற்ற உபாயங்களை அவர்களே கடை பிடிக்கலாம். பாறைகளை உடைத்து சிலை வடிப்பதிலும், கோட்டை எழுப்புவதிலும், அரண்மனைகளை கட்டுவதிலும் தலைசிறந்து விளங்கும் நாடார்கள் கல்லக்குறிச்சி என்னும் ஊரில் வாழ்கிறார்கள். அவர்களை சந்தித்து நாளை விடிவதற்குள் இரும்பு போன்ற திடமான கற்களில் குண்டுகளை செய்து மூப்பனார்களிடம் கொடுக்க வேண்டும். யூசுப் மூப்பனார் இந்த ஏற்பாடுகளை எல்லாம் செய்ய வேண்டும். உடனடியாக செயல்பட வேண்டும். தாக்குதல் எப்பொழுதும் ஏற்படலாம்” என்றார்.

ஏதோ டச்சுப் படைகளை ஏமாற்றி திருவிதாங்கூர் படை வெற்றி பெற்றதாக யாரும் நினைத்துவிட வேண்டாம். நம்மிடம் உண்மையாகவே பனைமரப் பீரங்கிகள் இருந்தன. அன்றைய காலகட்டத்தில் கோட்டைகளைத் தகர்ப்பதற்கான இரும்பு குண்டுகள் இருந்தன என்பதனை ஆய்வாளர் லால் மோகன் அடியேனிடம் காண்பித்து இருக்கிறார். அதனைப் பார்த்தபோது ஆச்சியரியமாகத்தான் இருந்தது. ஆனால் பனை மரத்தில் பயன்படுத்த இருப்பவை இரும்புபோன்ற உருண்டை வடிவ கற்கள். பனை மரத்தினுள் அவற்றை வைத்து வெடிமருந்து உதவியுடன் தாக்குவதற்கு ஆயுத்தம் ஆகியிருக்கிறார்கள் என்றால் ஆச்சரியாமகத்தான் இருக்கிறது. மூப்பனார்கள் முசுலிம் என்பதும் ஆச்சரியப்பட வைக்கிறது. குளச்சல் போரில் முசுலிம்களுக்கும் பங்கு இருந்திருக்கிறது. புதிதாக யூசுப் மூப்பனார் இக்கதை வழியாக குளச்சல் போரில் அறிமுகமாகிறார். இனிமேல் குளச்சல் போர் குறித்து எங்கெல்லாம் பேசப்படுகிறதோ, அங்கெல்லாம் முசுலிம்கள் தங்கள் தொடைகளைத் தட்டிக் கொள்ளலாம்.

“தளபதி குமார உதய மார்த்தாண்டனுக்கும் கடலோர மக்களுக்கும் நெருங்கிய தொடர்பும் நட்பும் இருப்பதால் குளச்சலில் இருந்து முட்டம் வரையுள்ள கடலோர மக்களை உடனடியாக சந்தித்து அவர்கள் ஒன்றாக அணிதிரண்டு பறங்கிகளின் படையெடுப்பை முறியடித்து, நாட்டை பாதுகாக்க வேண்டிய முக்கியத்துவத்தை விளக்க வேண்டும். பறங்கிகள் யாராவது நடமாடினால் உடனடியாக அவர்களை சிறைபிடிக்க வேண்டும். கடலோரத்தில் இருந்து சுமார் இரண்டு மைல் தூரம் கிழக்கிலுள்ள பகுதிகளை குதிரைமீது ரோந்து சுற்றியவாறு சுமார் நூறு படை வீரர்களை இன்றிரவே அனுப்பி வைக்க வேண்டும். பூவாறு முதலாளி சுமார் ஐநூறு குதிரைகளை அனுப்பித் தருவதாக செய்திகள் அனுப்பியிருக்கிறார்”.

குமார உதய மார்த்தாண்டன் நடுவூர்கரைகாரர் என்பதால் அவருக்கும் கடலோர மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்கிறது. நடுவூர்க்கரை மக்கள், புதூரத்துறை மீனவர்களுடன் கடலுக்கு மீன் பிடிக்க சென்றுள்ளதை அடியேன் சிறுவயதில் பார்த்திருக்கிறேன். இந்து நாடார்களுக்கும் முக்குவர்களுக்குமான உறவு என்பது அன்றைக்கு வலுவாகத்தான் இருந்தது என்பது உண்மைதான். அந்தவகையில் குமார உதய மார்த்தாண்டனுக்கும் மீனவர்களுக்கும் நட்பு இருந்தது என்று சொன்னால் அதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை. பூவாறு முதலாளி சுமார் ஐநூறு குதிரைகளை அனுப்பித் தருவதாக வாக்குறுதி அளித்திருக்கிறார். இவ்வளவு குதிரைகளை வைத்திருந்த பூவாறு முதலாளி பெயரை குறிப்பிடாமல் விட்டதற்கு காரணம் கண்டிப்பாக உண்டு. அதனை வைத்துக்கொண்டு ஆய்வு என்கிற பெயரில் சிலர் பூவாறுக்கு செல்லக்கூடும்.

“இவ்வாறு உரை நிகழ்த்திக் கொண்டிருக்கையில் குளச்சலில் இருந்து இரண்டு மீனவ நண்பர்கள் அனந்தபத்மநாபனிடம் வந்தனர். அவர்கள் சுமார் பத்து மைல் தூரம் மூச்சுத்திணறி ஓடி வந்ததால் சற்றுநேரம் பேச முடியாமல் தவித்தனர். அவர்கள் ஏதோ முக்கியமான செய்தியுடன் வந்திருப்பதை உணர்ந்த அனந்தபத்மநாபன், அவர்களிடம் சற்றுநேரம் இளைப்பாறிவிட்டு, உணவும் அருந்திவிட்டு, செய்திகளை பரிமாறிக் கொள்ளலாம் என வேண்டிக் கொண்டார்”.

ஏதோ ஒரு முக்கிய செய்தியை கொண்டு மீனவர் இருவர் கொண்டு வந்திருக்கிறார்கள். அவர்கள் அச்செய்தியைச் சொல்வதற்கு ஓடோடி வந்ததால் மூச்சு வாங்கியது. அவர்களை ஆறஅமர உட்காரச் சொல்லி,

உணவும் பரிமாறிவிட்டு, அதன்பின்பாக செய்திகளை கேட்டிருக்கிறார்கள். விருந்தோம்பல் பண்பாடு என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும்.

அந்திவேளை, "மூன்று வெள்ளைப் பறங்கிகள் குளச்சல் கரையோரங்களில் நோட்டம் போட்டனர். பிறகு ஆங்கிலம் தெரிந்த மீனவரை தேடிப்பிடித்து தங்கள் கருத்துக்களை, எண்ணங்களை, நோக்கங்களை கூறினர். மீனவர் மக்கள், தங்கள் பக்கம் சேர்ந்து போர்செய்தால் இன்னும் ஒரு சில நாட்களில் நிகழப்போகும் போரில் திருவிதாங்கோடு இராச்சியத்தின் மன்னனை எளிதில் தோற்கடித்துவிடலாம். தங்களுக்கு உதவுபவர்களுக்கு பொன்னும் பொருளும் பரிசளிப்பதோடு கடற்படை பயிற்சியும், ஆட்சிப் பொறுப்பும் அளிக்கப்படும் என்று ஆசை வார்த்தைகளை அள்ளி வீசினர். அவற்றை எல்லாம் கேட்ட அந்தோணியார் அடிமை மிகவும் நிதானத்துடன் இராசதந்திரத்துடன் செயல்பட்டார். ஆங்கிலம் இலத்தீன் மொழிகளில் பயிற்சிபெற்ற அன்னார் நாட்டுப் பற்றும், தமிழ்மொழிப் பற்றும், மன்னர் மார்த்தாண்ட வர்மாவிடம் மிகுந்த பயபக்தியும் உடையவராக இருந்தார். வெள்ளை பறங்கிகளின் நயவஞ்சக செயல்களையும், சூழ்ச்சித் திறனையும் நன்குணர்ந்த அந்தோணியார் அடிமை, அவனுடைய வேண்டுகோளுக்கு இசைந்தது மாதிரி பாசாங்கு செய்தார்".

குளச்சல் போரில் முக்குவர் சாதியிலிருந்து அந்தோணியார் அடிமை என்கிற பெயரில் ஒரு மாவீரன் இக்கதை வாயிலாக அறிமுகமாகிறார். அந்தோணி அடிமை, பனி அடிமை, மிக்கேல் அடிமை என்கிற பெயர்களை கடற்கரையில் கேள்விப் பட்டிருக்கிறேன். 'அந்தோணியார் அடிமை' என்கிற பெயரை இக்கதை வாயிலாகத்தான் முதன்முதலில் அறியமுடிகிறது. அந்தோணியார் அடிமைக்கு நாட்டுப்பற்று, தமிழ் மொழிப்பற்று இருந்திருக்கிறது. குளச்சல் போர் வெற்றிக்கு காரணமாகவும் இருந்திருக்கிறார். 'மறைசாட்சி தேவசகாயம் பிள்ளை புனிதர் பட்டப் பணிக்குழு' அந்தோணியார் அடிமையை கேள்விப்பட்டிருந்தால் அவருக்கும் புனிதர் பட்டத்திற்கு முயற்சி செய்திருப்பார்கள். முக்குவர் நலப் பேரவைத் தலைவர் லியோ அனிட்டன் கேள்விப்பட்டிருந்தால், குளச்சலில் அந்தோணியார் அடிமைக்கு திருவுருவச் சிலை வைக்க முயற்சி செய்திருப்பார்.

"நான் ஆயிரத்திற்கு மேற்பட்ட மீனவ இளைஞர்களை திரட்டி,

மன்னனை எதிர்த்து சண்டைபோடத் தயார் என்றார். மேலும், மீனவர்களைத் திரட்டவும், ஆயுதப் பயிற்சி அளிக்கவும், இரண்டு மூன்று நாட்கள் அவகாசம் வேண்டும் என்றார். மட்டுமல்ல, போதிய ஆயுதமும் வழங்க வேண்டும். போர் நிகழும் நாள், நேரம், இடம் போன்றவற்றை தெரிந்தால் ஆயிரம் மீனவர்களை குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட இடத்தில் போருக்கு ஆயுத்தமாக நிறுத்தலாம். உடனே மகிழ்ச்சி மிகுதியால் அந்த வெள்ளைப் பறங்கி தங்களுடைய திட்டங்களில் ஒருசிலவற்றை கூறிவிட்டான். இன்றிலிருந்து மூன்றாவது நாள், நடுப்பகலில் தாக்குதல் தொடுப்பார்களாம். மீனவர்கள் கடலோரத்தில் மன்னர் பக்கம் இருப்பதுபோல் பாசாங்கு செய்துவிட்டு அவர்கள்பக்கம் சேர்ந்து போர் செய்ய வேண்டுமாம். குளச்சலில் இருந்து சுமார் ஒரு மைலுக்கு மேற்கில் கொஞ்சம் பறங்கிகள் கரையேறும்பொழுது மீனவர்கள் அவர்களை பிடிப்பதுபோல் பாசாங்கு செய்துவிட்டு அவர்களுடன் சேர்ந்து போர் செய்ய வேண்டுமாம்".

டச்சுப் படையினர் எதனையும் சுலபமாக நம்பிவிடுவார்கள். எதனையும் சந்தேகக்கண் கொண்டு அவர்கள் பார்ப்பதில்லை என்பது படைப்பாளியின் கற்பனையாக இருந்திருக்கிறது. அந்தோனியார் அடிமை சொன்னதை டச்சுப் படையினர் உண்மையென நம்பிவிட்டார்கள். மீனவர்களுக்கு ஆயதப் பயிற்சி அளிக்கும்போது அது மன்னரின் பார்வைக்கு கிடைக்காமல் போய்விடுமா என்கிற கேள்வி எழத்தான் செய்கிறது.

"பறங்கிகள் அங்கிருந்து சென்றதும் மரியதாசு, யேசுதாசு என்ற இரண்டு மீனவர்களை அழைத்து தான் கேட்டவற்றையும், கண்டவற்றையும் தெளிவாக விளக்கியும், விரிவாக எடுத்துச் சொல்லியும் அவர்களை அனந்தபத்மநாபனிடம் அனுப்பி வைத்தார்" அந்தோணியார் அடிமை. எல்லா செய்திகளும் அனந்த பத்மநாபனிடம்தான் சொல்லப்படும். மன்னரிடம் சொல்ல முடியாது. ஏனெனில் அனந்த பத்மநாபன்தான் அங்கு எல்லாமே.

"நாட்டு மக்களை இரண்டுபடுத்தும் வெள்ளை பறங்கியின் இரைபோட்டு மீன்பிடிக்கும் உபாயத்தின் இரகசிய திட்டம் அம்பலமாகி, குளச்சல் போரின் வெற்றிக்கு முன்னோடியாய் இருந்தது". இத்திட்டத்தை முன்கூட்டியே அம்பலமாக்கிய பெருமை அந்தோணியார் அடிமையைச் சாரும். அவர், அந்தோணியாருக்கு

மட்டும் அடிமை அல்ல; திருவிதாங்கூர் நாட்டிற்கே அடிமையாக இருந்திருக்கிறார். மன்னருக்கு அடிமையாகவும், விசுவாசமாக இருந்ததால்தான் தக்கலை பென்னி, "தம்பிமார் மற்றும் அவர்களின் ஆதரவாளர் குடும்பத்துப் பெண்களை கண்ணனூர் சாம்பவர்களுக்கும், குளச்சல் முக்குவர்களுக்கும் கட்டி வைத்து சிறுமைப்படுத்தினர்" என்கிறார்.

நாட்டு மக்களை பிளவுபடுத்தி, மன்னரை வீழ்த்தலாம் என்று நினைத்த இரகசியத் திட்டத்தை அந்தோணியார் அடிமை அம்பலமாக்கியதன் மூலம் குளச்சல் போர் வெற்றிக்கு முக்குவர்கள் முன்னோடியாக இருந்தார்கள். "அந்தோணியார் அடிமையை நேரில் சென்று பாராட்ட அப்பொழுதே குளச்சலுக்கு செல்லத் தீர்மானித்தார் மாவீரன் அனந்த பத்மநாபன்". போரில் மீனவர்களின் பங்கு அளப்பரியது. பணத்திற்கும், பொன்னுக்கும், ஆட்சி அதிகாரத்திற்கும் மயங்காத தியாக செம்மல்களாக இருந்துள்ளனர்.

"நாம் எவருக்கும் அடிமை இல்லை; நமக்கு எவரும் அடிமை இல்லை. ஒன்றுபடுவோம்! போராடுவோம்! குளச்சல் போரின் வெற்றி நமதே! அங்கிருந்த படைவீரர்கள் தொடர்ந்து குரல் எழுப்பினர். வீரமுழக்கம் வெள்ளிமலையில் எதிரொலித்து. திருவிதாங்கோடு இராச்சியம் எங்கும் வியாபித்தது". திருவிதாங்கூரில் திருவிவிலியமும் திருக்குரானும் வந்து வெளிச்சம் கொடுத்தபிறகு அடிமைகள் இருக்க வாய்ப்பில்லைதான்.

பீரங்கிகள்போல் உருவாக்கப்பட்ட பனை மரங்களை தும்பி கரங்களில் ஏந்தியவாறு நூற்றுக்கணக்கான யானைகள் குளச்சல் கடலோரத்தில் வந்து கொண்டிருந்தன. மூப்பன்கள் உடனுக்குடன் குண்டு கற்களையும், வெடி மருந்துகளையும் பனைமரப் பொந்துகளில் நிறைத்துக் கொண்டிருந்தனர். நிரப்பப்பட்ட பனைமரங்களை நாடார்களும் முக்குவர்களும் தோளோடு தோள்நின்று கடலோரத்தில் உள்ள உயர்ந்த மணல் மேடுகளில் கடலை நோக்கியவாறு சுமார் இரண்டு மைல் தூரத்திற்கு அடுக்கி வைத்தனர். தளபதி உதய மார்த்தாண்டன் நாடார் குதிரைமீது அங்குமிங்குமாக ஆணையிட்டவாறு ஏற்பாடுகளை கவனித்துக் கொண்டிருந்தார்.

சுமார் பத்தாயிரம் படை வீரர்கள் பல்வேறு ஆயுதங்களுடன் முக்கியமான இடங்களில் நிறுத்தப்பட்டிருந்தனர். திருச்செந்தூர், கொற்கை, காயாமொழி, மாநாடு, தண்டபத்து, வாழையடி குட்டம், கும்மடிக்கோட்டை, உடன்குடி, திசையன்விளை, களக்காடு, ஏர்வாடி,

சேரமாதேவி, சாத்தன்குளம் போன்ற ஊர்களில் இருந்து சுமார் ஐயாயிரம் படை வீரர்கள் தண்டபத்து மலைக்குட்டி நாடார் தலைமையில் கடற்கரை வழியாக அணிவகுத்து குளச்சலுக்கு வந்தது. மீனவர்கள், மூன்று நாட்களாக மீன்பிடிக்கச் செல்லவில்லை. பெற்றோரிடமும் உற்றாரிடமும் நல்லாசி பெற்று ஆயுதங்கள் ஏந்தி அந்தோணியார் அடிமை தலைமையில் கடலோரத்தில் குழுமினர்".

ஏன் டச்சுப் படையினர் மதிய நேரத்தை போர் செய்வதற்காக தேர்வு செய்தார்கள் என்பதற்கு நூலாசிரியர் கே. திரவியம் ஒரு அறிவியல் ஆதாரத்தை முன்வைக்கிறார். "குளச்சல், மண்டைக்காடு, மணவாளக்குறிச்சி, முட்டம் போன்ற பகுதிகளில் கடலோரங்களில் மணல் மேடுகள் மிகுதியாக உள்ளன. அவற்றில் சக்திவாய்ந்த உலோகப் பொருட்களான மோனோசயிற்று, கார்ணயிற்று, இல்மனயிற்று, சிற்காண் போன்றவை அடங்கி இருக்கின்றன. சூரிய கணைகள் பட்டதும், ஏற்படுகின்ற வெப்பத்தில் இருந்து தப்புவது ஒரு சிறந்த சாதனை. இதனை நன்குணர்ந்துதான் தாக்குதலுக்கு டச்சுப்படை மதிய வேளையை தேர்ந்தெடுத்தது".

ஆங்கிலப் பேராசிரியர் கே. திரவியம் ஆய்ந்து தந்திருக்கும் அறிவியல் பூர்வமான உண்மையை அறிந்தவர்கள் இனிமேல் மணவாளக்குறிச்சி அரியவகை மணல் நிறுவனத்திற்கு கடற்கரை மணல்களை அள்ளிக்கொடுத்து ஒப்பந்த அடிப்படையில் கூலிக்கு வேலை செய்யும் சின்னவிளை, பெரியவிளை, புதூர்த்துறை முக்குவர்களை பாராட்டுவார்கள் எனக் கருதலாம். கடலோர கிராமங்களில் நிலவும் வெப்பத்தைத் தணிப்பவர்களாக, மீனவர்களின் உயிரினை வெப்பத்திலிருந்து காப்பற்றும் இரட்சகர்களாக இவ்வூர் மக்கள் இருந்து வருகிறார்கள். இதைத்தான் பெரியவிளை ஊர்க்காரரர் பொனுப்பாசு பேசும்போது, "இந்த சக்தி வாய்ந்த உலோகப் பொருட்களை நாங்கள் அப்புறப்படுத்திக் கொண்டிருப்பதால்தான் புற்றுநோயின் தாக்கம் குறைந்திருக்கிறது" என்றார்.

அரியவகை மணல் ஆலைக்கு எதிராக, 'புற்றுநோய் இல்லா கடிகை இளைஞர் இயக்கம்' என்கிற அமைப்பு அண்மையில், 'புற்று நோயைப் பரப்பும் ஐஆர்இ நிர்வாகமே வெளியேறு!' என ஒரு செய்தியை வெளியிட்டு பரபரப்பை ஏற்படுத்தியது. கடியப்பட்டணம் ஊரானது புற்று நோயின் கூடாரமாக மாறியிருக்கிறது. மோனோசயிற்று, கார்ணயிற்று, இல்மனயிற்று, சிற்காண் போன்றவைகளை அகற்றி

வெயிலின் வெப்பத்தில் இருந்து மீனவர்களை தொடர்ந்து காப்பாற்றிக் வருபவர்களால் புற்று நோயிலிருந்து மீனவர்களை காப்பாற்ற இயலவில்லை என்றுதான் எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அரியவகை மணல் ஆலை வருவதற்கு முன்பாக வெப்பத்தின் அளவு தாங்காமல் கடலோரத்தில் குடியிருந்த மீனவர்கள் கொத்துகொத்தாக மடிந்து கொண்டிருந்தார்கள் என்றுதான் பேராசிரியர் கே. திரவியம் ஆய்ந்து தந்திருக்கும் அறிவியல் ஆய்வு. இதுகுறித்து இன்னும் பல ஆய்வுகள் வெளிவரலாம்.

இந்த கொடுமையான வெப்பத்தை தணிப்பதற்கு வசதியாக, "பனை ஓலைகள் மணல் மேடுகள் மீது பரப்பப்பட்டன. ஊர் மக்கள் திரண்டெழுந்து கடல் நீரையும், வாய்க்கால் நீரையும் கொணர்ந்து கொதிக்கும் மணல்மீது பரப்பப்பட்ட ஓலைகள்மீது கொட்டிய வண்ணமிருந்தனர். இவ்வாறு கதிரவன் ஒளியை சமாளித்துக் கொண்டிருந்தனர்". கோவில் திருவிழாக்களின்போது செருப்பு போடாமல் பக்தர்கள் ஊர்வலம் வரும்போது சாலையிலுள்ள சூட்டினை தணிப்பதற்கு தண்ணீர் ஊற்றுவது வழக்கம். அதுபோல்தான் அங்கே தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தனர். சண்டை நடக்கும்போது சூடு மணல் இடையூறாகத்தான் இருக்கும்.

"இவற்றை எல்லாம் தொலைநோக்கியால் கவனத்துக் கொண்டிருந்தனர் டச்சு மாலுமிகள். மணற்மேடுகளில் கடலைநோக்கி வைக்கப்பட்டிருந்த பனை மரங்களை நவீன பீரங்கிகள் என்று நம்பி கதி கலங்கினர்". தொலை நோக்கியால் பார்த்த அவர்கள் நவீன பீரங்கிகளைப் பார்த்து ஒருகணம் உயிரை கையில் பிடித்துப் பார்த்துக் கொண்டனர். அப்படியெனில் பனை மரத்தில் வைக்கப்பட்ட மருந்துகள் உண்மையில்லையா என்கிற கேள்விக்கணை எழும்பக்கூடும்.

"டச்சுப்படை போர் கப்பல்களில் பீரங்கிகள் பொருத்தப்பட்டு இருந்தன. படை வீரர்கள் நவீனப் படைக் கருவிகளான துப்பாக்கிகள் ஏந்தி இருந்தனர். இன்னும் கத்தி, கடாரி, வாள் போன்ற ஆயுதங்களை அணிந்திருந்தனர். மேலும், சற்றுதூரத்தில் பத்து கப்பல்களில் சுமார் ஆயிரம் குதிரைப்படை வீரர்களும் இருந்தனர்". மொத்தம் பதினொரு டச்சு கப்பல்கள் குளச்சல் கடலில் வட்டமிட்டபடி நின்றன. அப்படி இருந்தும் கடலோரத்தில் இருந்த படைவீரர்களையும், நவீன பீரங்கிகளையும் கண்டு திட்டத்தை மாற்றினர். படைக் கலங்களைக்

கடலில் பின்வாங்கி செல்வதுபோல் நடித்து, பின்னோக்கி செலுத்தினர். இந்த கபட நாடகம் குறித்து மன்னரிடம், தளபதி குமார உதய மார்த்தாண்டனிடமும், மலைக்குட்டி நாடாரிடமும் அனந்த பத்மநாபன் உரையாடிக் கொண்டிருந்தார். எப்படியும் மறுநாள் மத்தியானம் வேளையில் தாக்குதல் நடத்துவது உறுதியாகிவிட்டது.

இரவு ஒரு மணியளவில் மீனவர்களிடம் மாடன்பிள்ளை வந்து ஒரு மரத்தோணி வேண்டும் எனக் கேட்கிறார். எதற்கென மீனவர்கள் கேட்டபோது, ஒரு ஓலையைக் காட்டி மாவீரன் அனுப்பி வைத்தார். தோணியில் சென்று டச்சுக்காரர்களிடம் கொடுக்கச் சொன்னார் என்கிறார். ஓலையைக் கேட்டதற்கு, அது இரகசிய ஓலை என்று பதில் அளிக்கிறார். ஓலையைப் பார்க்கக் கேட்டு அவர்களுக்குள் சண்டை நடைபெறுகிறது. மூன்றுபேர் சண்டை போட்டுக் கொண்டிருப்பதனை மாவீரன் அனந்தபத்மநாபன் பார்க்கிறார். ஓலையை வங்கிப் படிக்கிறார். அது ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருகிறது.

“சாணான்மார் பனைமரத்தைக் காட்டி பீரங்கி என்று ஏமாற்றுகிறார்கள். பெரும்பான்மை படைகள் வடக்கு, கிழக்கு எல்லைக்குள் அனுப்பிவிட்டார்கள். வடக்கிலிருந்து குதிரைப்படை வந்து கொண்டிருக்கிறது. மன்னன் மார்த்தாண்டனை பிடித்துக் கொன்றுவிடுவோம். நீங்களும் உடனடி தாக்குதல் தொடுக்க வேண்டும். இப்படிக்கு எட்டுவீட்டு பிள்ளைமார்கள், காரியக்காரர்கள், மாடாம்பிமார்கள்”. கடலில் கிடக்கிற டச்சுப்படைக்கு தூது அனுப்புவதற்கு மாடன்பிள்ளை என்கிற ஒருவர் இரவு ஒரு மணிக்கு மீனவர்களை தேடி வந்தார் என்கிற கதை கேட்பதற்கே நன்றாகத்தான் இருக்கிறது. எட்டுவீட்டு பிள்ளைமார்களின் உறவு முக்குவர்களின் தொப்புள் கொடி உறவுபோல் நீண்டு கிடக்கிறது. இருப்பினும் அந்த உறவுக்காரனுக்கு மீனவர்கள் உதவவில்லை. மார்த்தாண்ட வர்மாவை கொலை செய்யவும், குளச்சலை கைப்பற்றவும் திட்டமிடுகிறபோது ஒரு கடிதத்தை கொண்டு சேர்ப்பதற்கான திட்டமிடல் என்பது முதல் கோணல் முற்றும் கோணலாக மாறிப்போனது.

ஒற்றன் மாடன் பிள்ளையை பீரங்கிகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் தூரத்திலிருந்து சுமார் இருபத்தைந்து அடிகளுக்கு முன்னால் இடுப்புவரை ஆழம் தோண்டி பள்ளத்தில் நிறுத்தி மணலால் நிரப்பினர். ‘ஆம்! சுட்டுப் பொசுக்கு’ என்று மாவீரன் ஆணைபோட, “திருவிதாங்கோடு மூப்பன் பனைமர பீரங்கியில் தீ வைத்தார்.

இடிமுழக்கம் போன்ற சத்தம் எல்லோரையும் நடுங்க வைத்தது. மாடன் பிள்ளையின் தலை உடலிலிருந்து வேறுபடுத்தப்பட்டு நூறடி தூரத்திற்கு அப்பால் சென்று விழுந்தது". திருவிதாங்கூர் பீரங்கி, சாதாரண பீரங்கி அல்ல. அது பனைமரப் பீரங்கி. உண்மையான பீரங்கி. டச்சுப்படையை ஏமாற்ற வேண்டும் என்பதற்காக உருவாக்கப்பட்ட போலி பீரங்கி அல்ல. சில பைத்தியக்காரர்கள் அதனை போலி பீரங்கி என்று எழுதிக் கொண்டிருக்கிறார்கள்.

டச்சுப்படை கப்பலில் இருந்த குடிநீர் மற்றும் உணவுப் பொருட்கள் இன்னும் ஓரிரு நாட்களுக்கு மட்டுமே போதுமானதாக இருந்தது. அவைகளுக்காக கரைக்கு சென்றே தீர வேண்டும் என்கிற நிர்பந்தம் இருந்தது. அதனால் பகல் பன்னிரெண்டு மணிக்கு பீரங்கிகளையும், குதிரைப் படைகளையும் வைத்து தாக்குதல் நடத்த முடிவு செய்தனர். "கடலில் வானளாவிய அலைகள் தோன்றின. கடும் புயலுக்கான அறிகுறி இருந்தது. எனவே டச்சுப்படை தாக்குதலை விரைவுபடுத்த எண்ணினர். காலையிலே படை கரைநோக்கி விரைந்தது".

புயலின் அறிகுறி தோன்றியிருக்கிறது. கடல் அலையின் கொந்தளிப்பு வானளாவிய அலைகளாக எழும்பி கரையை தாக்குகிறது. இந்நிலையில் கப்பலை கரைக்கு கொண்டுசெல்ல இயலாது என்கிற பொது அறிவுகூட டச்சுக்காரர்களுக்கு இல்லாமல் போய்விட்டதாக கதை நகர்த்தியிருப்பது கதைக்கு அழகு சேர்க்கவில்லை. அவர்கள் குளச்சல் கடற்கரைக்கு வர வேண்டிய நிர்பந்தம் என்னவென்றால் கப்பலில் இருந்த குடிநீர் விரைவில் தீர்ந்துவிடப் போகிறது.

கப்பல்கள் கரையை நோக்கி விரைந்தன. போர் கப்பல்களிலிருந்து பீரங்கிகள் முழங்கின. "பனைமர பீரங்கிகளும் பதிலுக்கு முழங்கின. எண்ணற்ற பீரங்கிகள் ஆங்காங்கே வைத்திருப்பதை பார்த்ததும் டச்சுப்படை பீதியடைந்தது. இடிமுழக்கம் போன்ற அதன் சத்தத்தால் நடுங்கினர். இரண்டு மூன்று கப்பல்கள் கரைக்கு மிக அருகில் வந்ததால் வேறு வழியின்றி துப்பாக்கியுடன் கரைசேரத் துணிந்தனர். பனைமரப் பீரங்கி வெடித்ததில் பலர் மாண்டனர். இன்னும் சிலர் மீனவர்களின் வலையில் மாட்டிக் கொண்டனர்".

மண்டைகாடு மதக் கலவரத்தின்போது பள்ளம்துறை மீனவர்கள் அவர்கள் விரித்திருந்த வலைகள் வாயிலாக காவல்துறை வந்த வாகனத்தை ஆய்வாளரோடு அப்படியே தூக்கி கடற்கரைக்குக் கொண்டு சென்றார்கள். புதூர்த்துறை மீனவர் கிராமத்திலும்

காவலர்கள் உள்ளே நுழைந்தால் அவர்களைத் தூக்குவதற்கு வசதியாக சகாயமாதா குருசடி முன்னுள்ள சாலையில் வலையினை விரித்து போட்டிருந்ததைப் பார்த்திருக்கிறேன். வலை என்றால் சாதாரண வலை அல்ல; மடி வலை. இதனை மீனவர்கள் குளச்சல் போரில் பயன்படுத்தி இருக்கிறார்கள் என்பதனை கேட்கும்போது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஒருவேளை மண்டைக்காடு கலவரத்தின்போது நேரில் பார்த்ததை அப்படியே குளச்சல் போரில் கொண்டு நூலாசிரியர் சேர்த்திருப்பாரோ என்று எண்ணவும் தோன்றுகிறது.

“பனை மரப் பீரங்கிகளையும், எண்ணற்ற படை வீரர்களையும் பார்த்து வியந்து பயந்த போர் கப்பல்கள் பல நடுகடலுக்கு செலுத்தப்பட்டதால் கரைக்கு வந்த டிலனாயையும், அவர் நண்பர்களையும் காட்டிக்கொடுத்து ஆபத்தில் சிக்க வைத்துவிட்டனர். மாவீரன் குளச்சல் நூர்முகம்மது, யூசுப், தளபதி குமார உதய மார்த்தாண்டன், அந்தோணி அடிமை, செபமணி நாடார் போன்றோர் துப்பாக்கியுடன் தங்களை நோக்கி பாய்ந்து வருவதை பார்த்ததும், மேலும் போர் செய்வது பயனளிக்காது என்பதனை உணர்ந்து கையிலிருந்த வெள்ளை துண்டை உயர்த்திக்காட்டி டிலனாயும், மேலும் ஐந்து டச்சுப் போர்வீரர்களும் சரணாகதி அடைந்தனர். எனவே அவர்களை துன்புறுத்தாது பத்மனாபபுரம் அரண்மனைக்கு கொண்டு செல்ல ஆணையிட்டார் தளபதி குமார உதயமார்த்தாண்டன்”.

அந்தோணியார் அடிமை, அந்தோணி அடிமை என இவ்விடத்தில் மாறியிருகிறது. முடிவில் சரியான பெயரை நூலாசிரியர் உச்சரித்து இருக்கிறார். சரணடைந்த டிலனாயை கைது செய்தவர் தளபதி குமார உதயமார்த்தாண்டன். அவரை மன்னரிடம் ஒப்படைக்க அவர் உத்தரவிட்டார். கரைக்கு வந்த டிலனாயையும், அவர் நண்பர்களையும் காட்டிக்கொடுத்து ஆபத்தில் சிக்க வைத்துவிட்டனர் என்கிற பழிச்சொல் இங்கு வாய் பிளந்து நிற்கிறது.

குளச்சல் போரின் வெற்றிக்கு துணை நின்ற மாவீரர்கள் பாராட்டப்பட்டார்கள். அவர்கள்: “அனந்தபத்மநாபன் நாடார், நடுவூர்க்கரை குமார உதய மார்த்தாண்ட நாடார், பூவார் ரசாக் முதலாளி, திருவிதாங்கோடு செய்யது முகம்மது, யோசப் நாடார், நாகமணி நாடார், பள்ளியாடி நேசப்பெருமாள், குலசேகர பெருமாள் நாடார், காட்டுக்கடை ஆசான், மூலச்சி ஆசான், அதங்கோட்டு

ஆசான், குளச்சல் நூர் முகம்மது, வன்னிய பெருமாள் நாடார், செல்லப் பெருமாள் நாடார், அந்தோணி அடிமை, சூசை மிக்கேல், முகம்மது அலி போன்றவர்களாகும்".

பூவாறில் இருந்து ஐநூறு குதிரைகளை கொடுத்து உதவியவர் யார் எனத் தேடினால் அவர்தான் ரசாக் முதலாளி. குளச்சல் போர் வெற்றிக்கு குதிரைப் படையே காரணம் என பூவாறு ரசாக்கைக் குறித்து முசுலிம்கள் ஒரு கட்டுரை எழுதலாம். குளச்சல் நூர் முகம்மது, முகம்மது அலி, திருவிதாங்கோடு செய்யது முகம்மது என நான்கு முசுலிம்கள் பாராட்டு விருதுகள் பெற்றிருக்கிறார்கள். "விடுதலைப் போரில் வீரமிகு முசுலிம்கள்" என்கிற தலைப்பில் திருநெல்வேலி திவான் ஒரு நூல் எழுதியிருப்பதாக கேள்விப்பட்டேன். அதில் குளச்சல் போரில் முசுலிம்களின் பங்கும் இடம் பெற்றிருக்கிறதாம். நூல் கைவசம் கிடைக்கவில்லை.

அந்தோணி அடிமையைப் பற்றி கே. திரவியம் ஒருவரே கதை சொல்லியிருக்கிறார். இதற்கு நேர்மாறாக, "குளச்சல் போரில் கடலோர ஆசான்மார்களான நீந்தல் நிபுணர்களைத் திரட்டி டச்சு இராணுவத்தை திருப்பிவிடாமல் கைது செய்யத் துணை புரிந்தவர் மரியா மல்லன் மாயக்குட்டி" என அமலகிரி அந்தோனிமுத்து குறிப்பிடுகிறார். இந்த மரிய மல்லன் மாயக்குட்டி என்பவர், "திருமுத்து பண்டாரப் பாளையக்குதிரைப் படையின் தலைவர்" எனவும், "வேதகலா பனைக் காலத்தில் டிலனாய் இவரை மலபாரிலுள்ள போர்த்துக்கீசிய படையில் சேர்த்துவிட்டார்" எனவும், "தேவசகாயம் பிள்ளையைக் கொல்லக்கூடாது என்று மன்னரின் படைகள் மூலம் குரல் கொடுத்தவர் இவர்" என அமலகிரி அந்தோனிமுத்து கதை சொல்கிறார். இவ்வாறு பல்வேறு கதைகள் ஆதாரமின்றி ஊர்வலம் வருகிறது.

இருப்பினும், "சான்றோர்குல சத்திரியப் படை வீரர்களின் முடிவற்ற பெயர் பட்டியலை இங்கு குறிப்பிட முடியவில்லை" என கே. திரவியம் ஆதங்கத்தை வெளிபடுத்தி இருக்கிறார். உங்களுடைய மூதாதையர் பெயர் விடுபட்டிருந்தால் வருத்தப்பட வேண்டாம். நீங்களே கதை எழுதி அவர்கள் பெயரினை சேர்த்துக் கொள்ளலாம். அதற்கு ஒரு நூல் வெளியீட்டு விழா வைக்கலாம். யாரைக் கூப்பிட்டாலும் வந்து பாராட்டிச் செல்வார்கள்.

# 5

## டி லெனாயை கைது செய்தவர் பொன்பாண்டித் தேவர்!

பொ. இராமச்சந்திரன், நா. திருநாவுக்கரசு ஆகியோரால் எழுதப்பட்ட நூல், 'மறக்கப்பட்ட மாவீரன் பொன்பாண்டித் தேவர் வீர வரலாறு'. இந்நூல், பாலமார்த்தாண்டபுரம் அருள்மிகு முப்பிடாரி அம்மன் திருக்கோயில் அறக்கட்டளையால் வெளியிடப்பட்டுள்ளது. இனி அந்நூலில் கூறப்படும் தகவல்களைக் காணலாம்:

சிதம்பரத்தேவர், பாண்டிய மன்னன் படைப் பிரிவில் தலைவராகப் பணிபுரிந்தவர். அவருடைய சொந்த ஊர் மதுரை அருகிலுள்ள சிந்தாமணி. சிதம்பரத் தேவரின் மகனாகப் பிறந்தவர் பொன்பாண்டித் தேவர்.

மதுரையை ஆண்டு கொண்டிருந்த பாண்டிய மன்னன், மீனாட்சி சுந்தரேசுவர் ஆலயத்திற்கு வழக்கம்போல் செல்லும்போது ஒருநாள் சிதம்பரத்தேவர் தன்னுடைய மகன் பொன்பாண்டித் தேவரையும் அழைத்துச் சென்றிருந்தார். மன்னர், பொற்றாமரைக் குளத்தில் கை கால்களை கழுவி, நீரை தீர்த்தமாக தலையில் தெளித்து வணங்கும் முன்பாக பொன்னாலான தலை கிரீடத்தை படிக்கட்டில் இறக்கி வைத்தார். அதனைக்கண்ட சிறுவன் பொன்பாண்டித் தேவர் அதனை எடுத்து தன் தலையில் வைத்துக் கொண்டான். இதைக்கண்ட அனைவரும் சிறுவனை தண்டிக்க முற்பட்டனர். மன்னர் அவர்களைத் தடுத்து, அறியாத பருவம், அது அவனுக்கு மிக அழகாகவும் இருக்கிறது என்று சொல்லி அவனை, 'பொன்முடி தரித்த பொன் பாண்டியன்' என வாழ்த்தினார்.

பொன்முடி தரித்த பொன்பாண்டித் தேவர், தன்னுடைய பன்னிரண்டு வயதிலேயே குதிரை ஏற்றம், மல்யுத்தம், சிலம்பம், வாள்வீச்சு ஆகியவற்றை கற்றுத் தேர்ந்தார். அந்த பாண்டிய மன்னர் யார் என்பது இந்த நூலிலே சொல்லப்படவில்லை என்பது ஒரு குறையாகத்தான் இருக்கிறது. அதனால்தான் மேற்படி கதையானது, "கர்ண பரம்பரை கதை' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பொன்பாண்டித் தேவர், மிக

அழகாக இருப்பார் என்பதால் அவரை, 'பொன்னம் பாண்டித்தேவர்' என அழைப்பதும் உண்டு என நூலாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்.

மார்த்தாண்ட வர்மா ஆட்சி பொறுப்பு ஏற்றபோது, "தன்மீது நம்பிக்கையும் திறமையும் கொண்டவர்களை அரசாங்க பதவியில் அமத்தினார். அவர்களில் முதன்மையானவர் இராமையர். இவரது ஊர் ஏர்வாடி... அதேபோன்று தாணுபிள்ளை, குமாரசாமி பிள்ளை ஆகியோரையும் அரசுப் பணியில் தன்னுடன் வைத்துக் கொண்டார்" என்கிறார்கள் பொ. இராமச்சந்திரன் மற்றும் நா. திருநாவுக்கரசு. அனந்த பத்மநாபன் என்பவரை பதவியில் வைத்துக் கொள்ளவில்லை என்பது இந்நூல் வாயிலாகத் தெரிய வருகிறது. இந்நூல் வாயிலாக சொல்லப்படும் குளச்சல் போரில் அனந்த பத்மநாபன் பெயரை கருவேப்பலை அளவுகூட பயன்படுத்தவில்லை.

"மன்னர் மார்த்தாண்ட வர்மா நாகர்கோவில் அரண்மனையில் இருப்பதை அறிந்து தம்பிமார்கள் மன்னனைக் கொல்ல திட்டமிட்டு அரண்மனையை அடைந்தனர். ஆனால் அவர்களது திட்டம் வெற்றி பெறவில்லை. மன்னர் அவ்விருவர் தலைகளையும் வெட்டி வீழ்த்தினார். அது மட்டுமல்லாமல் தம்பிமார்களுக்கு உதவிய உறவினர்களுக்கு சரியான தண்டனையைக் கொடுத்தார். பத்மநாபபுரம் முக்கு மண்டபத்தில் நாற்பத்தி இரண்டு பேர் தூக்கில் இடப்பட்டனர். எட்டுவீட்டு பிள்ளைமார்களின் பெண் வாரிசுகள் முட்டம் கடற்கரையில் ஏலம் விடப்பட்டனர்".

பப்புத் தம்பி, இராமன் தம்பி ஆகியோரை கொன்றவர் மன்னர் மார்த்தாண்ட வர்மா. இதில் உரிமை கோர எந்த சாதியினருக்கும் இடமில்லை. எட்டுவீட்டுப் பிள்ளைமார்களின் பெண்களை முட்டத்தில் வைத்து ஏலமிட்டனர். அதாவது முக்குவர்களுக்கு ஏலமிட்டனர். சாம்பவர் சாதியினருக்கு விற்பனை செய்யவில்லை. ஆய்வாளர் தக்கலை பென்னி, கொஞ்சம் இதனையும் கவனத்தில் கொள்ளவும்.

மன்னர் மார்த்தாண்ட வர்மாவை நாஞ்சில் மக்களும், மலைவாழ் மக்களும் பார்க்கச் செல்வார்கள். ஈத்தாமொழி தேங்காய், பொட்டல் பலா, இராசாவூர் கத்திரிக்காய், இலாயம் முருங்கைக்காய், செண்பகராமன்புதூர் கீரைத்தண்டு, ஆரல்வாய்மொழி அரைக்கீரை, தோவாளை தூதளக்கீரை, பிச்சிப்பூ, மல்லிகைப்பூ... காணிக்காரர்கள்

தேன், கனி என அவரவர் நிலத்தில் விளைந்த பொருட்களைக் கொண்டு சென்று மன்னரை வணங்குவர். மீனவர்கள் மட்டும் இதில் விடுபட்டுப் போனார்கள் என்பதனைவிட உயர்சாதி வகுப்பைச் சார்ந்த மன்னர் மார்த்தாண்டவர்மா அசைவம் சாப்பிட மாட்டார் என்றே எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அதனால், மீனவர்கள் யாரும் மன்னருக்கு மீன் கொண்டு செல்லவில்லை. இதிலிருந்து மன்னர் சைவம் என்பது உறுதியாகிறது. மன்னரைப் பார்க்க மீனவர்கள் உதவி கேட்டுச் சென்றதுமில்லை.

“திருவிதாங்கூர் மீது **1731**-இல் காயங்குளத்து மன்னர் மார்த்தாண்டவர்மா மீது தொடுத்த போரே திருவிதாங்கூரின் முதல் போர்”. காயங்குளத்து மன்னர்தான் திருவிதாங்கூர் மீது போர் தொடுக்கிறார். மார்த்தாண்டவர்மா போர் தொடுக்கவில்லை.

கொல்லம் மன்னர், காயங்குளத்து மன்னரோடு ஒப்பந்தம் செய்து கொண்டதால் கோபமடைந்த மார்த்தாண்டவர்மா, தன் தலைமையில் ஒரு பெரும் படையைத் திரட்டிக்கொண்டு கொல்லம் நோக்கிச் செல்கிறார். கொல்லத்து மன்னன் உன்னி கேரள வர்மாவை தோற்கடித்து அவனைக் கைது செய்து திருவனந்தபுத்திற்கு கொண்டு வந்து சிறையில் அடைக்கிறார். அதன்பின்பாக கொல்லம் மன்னர் சிறை மீள்கிறார். கொல்லம் மன்னருக்கு காயங்குளத்து மன்னர் உதவி செய்கிறார். இதனால் கோபம் அடைந்த மார்த்தாண்ட வர்மாவின் தளபதிகள் தாணுப்பிள்ளை, குமாரசாமிப்பிள்ளை, இராமையன் தளவாய் ஆகியோர் தலைமையில் படையின் ஒரு பகுதியைக் காயங்குளத்திற்கும், மற்றொரு படைப் பகுதியை கொல்லத்திற்கும் அனுப்புகிறார்கள். போரில் மார்த்தாண்டவர்மா தோல்வியைத் தழுவுகிறார்.

மார்த்தாண்டவர்மா தோல்வியைத் தழுவியதால், பாண்டிய மன்னரிடம் பொன்பாண்டித் தேவரை திருவிதாங்கூருக்கு அனுப்பி வைக்க வேண்டுகிறார். மன்னரும் அனுப்பி வைக்கிறார். ஆயிரத்திற்கு மேற்பட்ட குதிரைப் படைகளுடன் பொன்பாண்டித் தேவர் வருகிறார். “காயங்குளத்து படையும், டச்சுக்காரர்களுடைய படையும் இணைந்து ஆற்றின்கல் வரை வந்தது. பொன்பாண்டித் தேவர் தலைமையிலான குதிரைப்படை அவர்களை ஓடஓட விரட்டி அடித்தது. கொச்சி அரசன் வீழ்த்தப்பட்டு திருவிதாங்கூர் எல்லை, கொச்சி வரை நீடித்தது”. திருவிதாங்கூர் எல்கை கொச்சிவரை பெரிய நாடாக

விரிவடைந்ததற்குக் காரணமாக இருந்தவர் பொன்பாண்டித் தேவர். நாயர் படை வீழ்த்தியது, நாடார் படை வீழ்த்தியது எனச் சொல்வதெல்லாம் பொய்களின் உச்சகட்டம் என்பது இந்த நூல் வாயிலாகத் தெரிய வருகிறது. இதுவெல்லாம் தெரியாமல் குமரியில் சிலர் இன்னும் புதிதுபுதிதாக வரலாறு எழுதிக் கொண்டிருக்கிறார்கள்.

டச்சுக்காரர்கள் காயங்குளத்து மன்னருக்கு எல்லா வகையிலும் உதவி செய்து வந்தார்கள். மார்த்தாண்ட வர்மாவை வீழ்த்த வேண்டும் என்பது அவர்களின் நோக்கமாக இருந்தது. இதையறிந்த மார்த்தாண்டவர்மா, "தன்னுடைய போர்ப் படை தளபதிகளான இராமையன், பொன்பாண்டித் தேவர், குமாரசாமி பிள்ளை ஆகியோருடன் அருவிக்கரை ஆலோசனை மண்டபத்தில் இரகசியமாக கூடி ஆலோசித்தார்".

அப்பொழுது பொன்பாண்டித் தேவர், "இப்போரை மும்முனை தாக்குதலாக நடத்த வேண்டும். மன்னர் மார்த்தாண்டவர்மா வீரர்களுடன் ஒரு பக்கமும், இராமையன் தளவாயின் மற்றொரு படை மற்றொரு பக்கமாகவும், தன்னுடைய தலைமையில் உள்ள குதிரைப்படை தனியாகவும் இறங்க வேண்டும். அதுவே வெற்றிக்கு வழி வகுக்கும். இலங்கையில் இருந்து டச்சு வீரர்கள் கடல் வழியாக வர இருப்பதை தடுத்து நிறுத்த வேண்டும். அவர்கள் கரையில் இறங்கவிடாமல் பெரிய பெரிய படகுகளை நிறுத்தி திறமையுடைய படகோட்டிகள் மூலம் அவர்களை தடுத்து நிறுத்திட வேண்டும்" என்றார்.

"மன்னர் மார்த்தாண்டவர்மா, திருவட்டார் ஆதிகேசவப் பெருமாள் கோவிலுக்குச் சென்று தன்னுடைய போர் வாளை கற்பக் கிரகத்தில் வைத்து எடுத்துக் கொண்டார். மானம் காக்க தங்கள் இன்னுயிரையும் பணயம் வைக்கும் சிறந்த வீரர்களைச் சேர்த்துக்கொண்டு குளச்சல் போருக்குப் புறப்பட்டார்". மன்னரின் படைகள் குளச்சலை நோக்கிப் புறப்பட்டு சென்றது. இராமையன் தலைமையிலான மற்றொரு படை இரணியலுக்கும் கோட்டாற்றுக்கும் இடையே நிறுத்தப்பட்டு போருக்குத் தயாரான நிலையில் இருந்தது" என்கிறார்கள் நூலாசிரியர்கள். "குளச்சல் யுத்தம் முதல் சுதந்திரப் போர்" என்கிற கட்டுரை வாயிலாக இரா. அரிகரசுதன் இதனைத்தான் சொல்ல வருகிறார். "டச்சுக்காரர்கள் கடல்வழி வந்து டிலனாய் எனும் போர்ப் படைத் தளபதியின் தலைமையில் தாக்குதல் நடத்தினர். டச்சுப்

படையினர் கிழக்கில் குமரிமுனை, கோட்டாறு பகுதிகளைப் பிடித்துவிட்டு மேற்கில் தலைநகரான கல்குளத்தைத் தாக்குவதற்கு குளச்சல் கடல் வழியாக வந்தனர்".

டச்சுப்படை கோட்டாறை பிடித்துவிட்டது. அவர்கள், கரை வழியாக வந்து இரணியலை தாக்கலாம் என்பதால்தான் இராமையன் தலைமையிலான படை இரணியலுக்கும் கோட்டாறுக்கும் இடையில் நிறுத்தி வைக்கப்பட்டது என்கிற கதையோட்டம் இரா. அரிகரன் சொல்லும் கதைக்கு பொருந்துகிறது.

"கி.பி. 1741 சூன் மாதம் 27-ஆம் நாள் டச்சுப்படை வீரர்கள் குளச்சல் துறைமுகத்தில் திரண்டனர்". அதாவது, டச்சுப்படை வீரர்கள் குளச்சலில் வந்து இறங்கிவிட்டார்கள். அவர்களை அங்கு தடுக்க வீரமிக்கவர்கள் யாருமில்லை. மார்த்தாண்டவர்மா, தென்பாண்டித் தேவர் தலைமையிலான படைகள் அங்கு வந்து சேரவில்லை. குளச்சலில் வந்து இறங்கிய டச்சுப் படையினரால் மிடாலம், கடியப்பட்டணம், தேங்காய்ப்பட்டணம் ஆகிய ஊர்கள் பெரும் அழிவுக்கு ஆளாக்கின". இந்த மூன்று ஊர்களுமே அன்றைய காலப் பட்டணங்கள். அவை அழிவுக்கு உள்ளாகி இருக்கிறது என்றால் அங்குள்ள முக்குவர்களாலும் மற்றும் லெப்பையினராலும் அவர்களை எதிர்க்க முடியவில்லை. அங்கெல்லாம் அழிவினை ஏற்படுத்திவிட்டு டச்சுக்காரர்கள் பத்மநாபபுரம் கோட்டையைப் பிடிக்க வந்து கொண்டிருந்தனர்.

"டச்சுக்காரர்களின் படை பத்மநாபபுரம் கோட்டையைத் தாக்க எண்ணிப் படையெடுத்தபோது பொன்பாண்டித் தேவரின் குதிரைப்படை எதிரிப்படையில் புகுந்து எதிரிகளை நாலா பக்கமும் ஓடச் செய்தது. குதிரைப் படையானது யாவரும் அதிசயிக்கத்தக்க வகையில் தன்னுடைய திறமைகளைக் காட்டிப் போரிட்டன. ஏராளமான டச்சுக்காரர்கள் கை, கால் ஒடிந்து குற்றுயிரும் குறை உயிருமாக தரையில் வீழ்ந்து கிடப்பதைக்கூட காப்பாற்ற முயற்சி செய்யாமல் டச்சு வீரர்கள் போர்க்களத்தில் இருந்து ஓட்டம் பிடித்தனர். ஓடிப்போகும் டச்சு வீரர்களைக் குதிரைப்படை வீரர்கள் பின் தொடர்ந்து விரட்டி விரட்டி அடித்தார்கள். டச்சுப்படை வீரர்கள் துறைமுகத்தில் கிடந்த மரக்கலங்களில் போய் மறைந்து கொண்டனர். பலர் கைதாயினர். அவர்கள் அனைவரும் உதயகிரி கோட்டையில் சிறை வைக்கப்பட்டார்கள்" என்கிறார்கள் நூலாசிரியர்கள்.

நூலாசிரியர்கள் ஏதோ கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டுத் எழுதியதால், 'குற்றுயிரும் கொலை உயிருமாக' என்பது, 'குற்றுயிரும் குறை உயிருமாக' மாறிவிட்டது. குதிரைப் படையின் வேகத்தைக் கணிக்க முடியாததால் டச்சுப்படை வீரர்களின் கைகளில் இருந்த தோட்டாக்கள், வேலை செய்வதற்கு வாய்ப்பில்லாமல் போய் விட்டது. பொன்பாண்டித் தேவரும், அவருடையப் படைகளும் அதிசயமிக்க வகையில் எதிரிப் படைக்குள் புகுந்து விட்டது. டச்சுப் படைக்கு ஒன்றும் செய்ய முடியாமல் போய்விட்டது.

"டச்சுப் போர் வீரர்களின் திருவிதாங்கூரின் குதிரைப்படை குதித்தெழுந்தது. இரண்டு மாதங்கள் வரை நீடித்த இந்த போரில், குதிரைப் படையின் கூரிய ஈட்டிகளைத் தாங்க முடியாமல் டச்சு சேனை பின்வாங்கியது" என, "வேதசாட்சியான தேவசகாயம்பிள்ளை" என்கிற நூலில் கொல்லம் புனித யாண்சு ஆங்கிலக் கல்லூரி தலைமை ஆசிரியர் வி. மேரி யாண் குறிப்பிடுகிறார். இத்தகவலை இவர் ஆற்றூர் கிருசுண பிசாரடி எழுதிய 'திருவிதாங்கூர் சரித்திரம்' நூலிலிலிருந்து எடுத்துள்ளதாக குறிப்பிட்டுள்ளார். குதிரைப்படை தாக்குதல் இரண்டு மாதங்கள் வரை நீடித்தது என்பது கொஞ்சம் அதிகப்படியான பிரசங்கம்தான்.

குதிரைகள் வரும் சத்தங்களை கணிக்க முடியவில்லை என்பதும், வீழ்ந்து கிடப்பதைக்கூட காப்பாற்ற முயற்சி செய்யாமல் டச்சு வீரர்கள் போர்க்களத்தில் இருந்து ஓட்டம் பிடித்தனர் என்பதும், ஓடிப்போகும் டச்சு வீரர்களைக் குதிரைப்படை வீரர்கள் பின் தொடர்ந்து விரட்டி விரட்டி அடித்தார்கள் என்பதும் கோலியாத்தை தாவீது கொன்ற வரலாறைத்தான் நினைவு படுத்துகிறது. அதனால்தான் இக்கதைகள் அதிசயமிக்கதாகப் பேசப்படுகிறது. எந்த இடத்தில் வைத்து அவர்கள் வழிமறிக்கப் பட்டார்கள் என்கிற வரலாற்று செய்தியைக் காணவில்லை என்பது பெரும் குறைதான்.

"குளச்சல் வெற்றி மாபெரும் வெற்றி. இருபத்திநான்கு படைப்பிரிவு தலைவர்களையும், வெற்றிவாகை பலச் சூடிய தளபதி பெரும் வீரன் டிலனாயை பொன்பாண்டித் தேவர் கைதுசெய்து மன்னர் மார்த்தாண்ட வர்மாவின் முன்னிலையில் சரணடையச் செய்தார்". போரில் இருபத்திநான்கு படைப்பிரிவுத் தலைவர்கள் இருந்திருக்கிறார்கள் என்றால் டச்சுப்படை வீரர்களின் எண்ணிக்கை குறைந்தது ஐந்தாயிரம் பேராவது இருந்திருக்கக்கூடும்.

குளச்சலில் வந்து இறங்கிய டச்சுப் படையினர் ஏற்கனவே பல பிரிவுகளாக பிரிந்து சென்று மேற்காக மிடாலம் மற்றும் தேங்காய்ப்பட்டணத்தை அழித்திருக்கிறார்கள். கிழக்காக கடியப்பட்டணத்தை அழித்திருக்கிறார்கள். அப்படி இருக்கையில் இந்த இருபத்திநான்கு படைப் பிரிவுத் தலைவர்களும் ஒரே பாதையில் வந்து கொண்டிருக்க வாய்ப்பில்லையே. குளச்சலை நோக்கிச் சென்ற மார்த்தாண்டவர்மா படையின் விவரத்தை காணவில்லை. டச்சுப் படையின் பீரங்கி குறித்த பதிவுகள் எதுவும் இல்லை. நூலாசிரியர்கள் இன்னும் கொஞ்சம் நிதானமாக ஆலோசித்து எழுதியிருக்கலாம். அவசரப்பட்டிருக்க வேண்டியதில்லை.

"முப்பது ஆண்டுகளுக்கு முன்பு,'தினத்தந்தி' நாளிதழில், '240 ஆண்டுகளுக்கு முந்திய சிலை குமரி மாவட்டத்தில் கண்டுபிடிப்பு' என வெளிவந்தது. முப்பது ஆண்டுகளாக என் மனதில் அலைமோதிக் கொண்டிருந்தது. இப்போதுதான் அந்த கரு வளர்ந்து உருவாகி திருவாகி வெளிவருகின்றது" என்கிறார் நூலாசிரியர் நா. திருநாவுக்கரசு. அதாவது, "முப்பது ஆண்டுகளுக்கு முன்பு கண்டுபிடிக்கப்பட்ட ஒரு கல்வெட்டு பற்றிய நாளிதழ் செய்தி முளைத்து, இலை விரித்து, இன்று 'மறக்கப்பட்ட மாவீரன் பொன்பாண்டித் தேவர் வீர வரலாறு' என்னும் நூலாகியிருக்கிறது' என்கிறார் நாவலாசிரியர் பொன்னீலன்.

ஏதாவது ஒரு துருப்பு கிடைத்தால் அதனை வைத்து வரலாற்று நாவல் படைக்கும் பழக்கம் குமரி மண்ணில் உண்டு. தினத்தந்தியில் வெளிவந்த இந்த செய்தியினை பழத்துக்குள் சிறையிருக்கும் விதையைப் போன்று பெட்டிக்குள் வைத்து பாதுகாத்து நூலாசிரியருக்கு உதவியவர் வடக்கு விசயநாராயணம் சிவனுத்தேவர் மகன் சங்கரபாண்டித் தேவர். அதனால்தான் இக்கதையை இன்று நீங்கள் சுவைபட வாசிக்க முடிகிறது. அதற்காக வாசகர்கள் மகிழ்ச்சி அடையலாம். இவர்களின், "முயற்சி பாராட்டத்தக்கது. மேலும், ஆய்வுகளுக்கு இடம்தரத்தக்கது. ஆய்வுகள் தொடர வேண்டும். உண்மைகள் துலங்க வேண்டும்" என்கிறார் நாவலாசிரியர் பொன்னீலன்.

இந்த உண்மை நிலையை வெளிக்கொணர வேண்டும் என்ற எண்ணத்துடன், "திருவனந்தபுரம் தலைமை நூலகம், பல்கலைக்கழக நூலகம், மதுரை தமிழ்ச் சங்கம், தமிழ்ச் சான்றோர், ஆய்வாளர், கட்டுரையாளர் பலரிடமும் திட்டிய தொகுப்புதான் இந்நூலாகும்". இந்த கல்வெட்டை கண்டுபிடித்து செய்தியை வெளியிட்டவர்

நாகர்கோவில் இந்துக் கல்லூரி அன்றைய வரலாற்றுப் பேராசிரியரும், இன்றைய இறச்சகுளம் சமுதாயக் கல்லூரி இயக்குநராக உள்ள முனைவர் பொ. இராமச்சந்திரன். இதனை நூலாக்கி இருப்பவர் முப்பது ஆண்டு காலம் கணபதிபுரம் ஏ.வி.டி. மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் பணியில் இருந்து பணி நிறைவுபெற்ற பண்டித வித்துவான் தா. திருநாவுக்கரசு.

"பொன்முடி தரித்த பொன்பாண்டித் தேவர் நூல் மூலம் உண்மைக்குப் போடப்பட்டிருந்த முகத்திரையை கிழித்தெறிந்து விட்டார்கள். இதுபோன்று வெளியே அறியப்படாத மற்றவர்களின் வரலாற்றையும் ஆய்ந்து வெளிக்கொணர வேண்டுமென்பதே என் பேரவா" என்கிறார் மருத்துவர் தாணப்பன்.

இந்நூலில், 'ஒரு மீள் கண்டுபிடிப்பு' என்கிற பெயரில், "குமரி மாவட்டத்துக்கும் தேவர் மக்களுக்கும் நீண்ட காலமாக தொடர்புகள் இருந்திருக்கின்றன. போருக்காவும், காவலுக்காகவும் திருவிதாங்கூர் மன்னர்களால் அவர்கள் அழைத்து வரப்பட்டவர்கள் என்பது வரலாறு சொல்லும் செய்தி" என்கிறார் சாகித்திய அகதாமி விருதுபெற்ற நாவலாசிரியர் பொன்னீலன். இதே பொன்னீலன்தான், "மாவீரன் அனந்த பத்மநாபன்" என்கிற தலைப்பில், "அனந்த பத்மநாபன், வலிய மார்த்தாண்ட வர்மாவுக்கு உதவிய பெரும்வீரர்" என்கிறார். "தம்பிமார்களுக்கும் மார்த்தாண்ட வர்மாவுக்கும் இடையே நடந்த தொடர் மோதலில் மார்த்தாண்ட வர்மா பக்கம் நின்றவர். 'பிராந்தன் சாணான்' என்கிற பெயரில் மார்த்தாண்ட வர்மாவை நிழல்போல் தொடர்ந்து காத்தவர்" அனந்த பத்மநாபன் என்கிறார். கதைகளைக் கொண்டு அங்கும் இங்குமாக ஒட்டிவைத்து வரலாறை தேடித் பார்த்தால், அது உடைந்த கண்ணாடிபோல்தான் காட்சியளிக்கிறது.

"பொன்பாண்டித் தேவர் வீர வரலாறும் முக்கியமானது. பொன்பாண்டித் தேவர், தமிழகத்திற்கும் திருவிதாங்கூருக்கும் பாலமாக இருந்தவர். ஆனால் அவர் காலத்தில் மதுரையில் பாண்டிய மன்னரின் ஆட்சி இருந்ததாக இந்நூலில் குறிப்பிடப்படுகிறது. எழுதப்பட்ட வரலாறோ, அன்று நாயக்க மன்னரின் ஆட்சி இருந்ததாக சொல்கிறது" என்கிறார் பொன்னீலன்.

இவ்வாறாக உண்மையைச் சொன்ன பொன்னீலனார் மேற்படி பொய்யை உண்மையாக்க ஒரு விளக்கம் கொடுப்பார் பாருங்கள்:

“ஆரல்வாய்மொழிக்கு அந்தப் பக்கம் உள்ளவர்கள் எல்லாம் பாண்டிக்காரர்கள் என்று சொல்லும் நாட்டு வழக்கு போக்கில், பாண்டிய மன்னர்களைப் பற்றி ஆசிரியர் குறிப்பிட்டிருக்கக்கூடும்”. பொன்னீலன் போன்ற நபர்களால் வரலாற்று நூல் படும்பாடு பவித்திரம் மங்காமல் முந்திச் செல்ல எத்தனித்தும் முந்தாமல் குப்புறப் படுத்துக் கிடக்கிறது.

6

## டி லெனாயை கைது செய்தவர் மார்த்தாண்ட வர்மா!

"வேதசாட்சி தேவசகாயம் பிள்ளை வரலாறு" என்கிற நூலை அ.கா. பெருமாள் எழுதியிருக்கிறார். இவர், நாட்டார் வழக்காற்றியல் கூறுகளைக் கொண்டு புதிய வரலாறு உருவாக்கப்பட வேண்டும் என்பதில் தீவிரமாக செயல்படுபவர்.

டிலனாய் தன் 27-ஆம் வயதில் (1741 சூன் 10) திருவிதாங்கூரின் தென் கடற்கரை ஊரான குளச்சலில் திருவிதாங்கூரின் முதல் அரசர் அனுசம் திருநாள் மார்த்தாண்ட வர்மாவுடன் போரிட்டார். இவருடன் வந்த வீரர்களில் பலர் மார்த்தாண்ட வர்மாவின் வீரர்களால் கொல்லப் பட்டனர். எஞ்சிய 23 பேர்களும் பத்மநாபபுரம் கோட்டைக்கு கொண்டு செல்லப்பட்டனர். இந்த வீரர்களிடமிருந்து 389 துப்பாக்கிகள் பறிமுதல் செய்யப்பட்டன" என்கிறார் அ.கா. பெருமாள்.

குளச்சல் போரில் மார்த்தாண்ட வர்மாவே நேரடியாக களம் இறங்கியிருக்கிறார். அவருடைய வீரர்களுக்கும் டச்சுப் படை யினருக்கும் நேருக்கு நேர் சண்டைகள் நடந்துள்ளன. ஒருவரை ஒருவர் கடுமையாக தாக்கிக் கொண்டனர். அதில் பல டச்சுப் படையினர் கொல்லப்பட்டனர். உயிரோடு பிடிபட்டவர்கள் இருத்திமூன்று பேர்.

இந்த கணக்கை, "திருவிதாங்கூர் சரித்திரம்" எழுதிய மலையாளி பி. சங்குண்ணி மேனன் அவருடைய நூலில் குறிப்பிட்டுள்ளார். அங்கிருந்து அ.கா. பெருமாள் எடுத்து கையாண்டிருக்கிறார்.

"மார்த்தாண்ட வர்மா, தான் கைது செய்த டிலனாயை மரியாதையுடன் நடத்தினார்". டிலனாயை கைது செய்தது நாடாரோ, தேவரோ, முக்குவரோ, பரவரோ அல்ல. அவரை கைது செய்தவர் மன்னர் மார்த்தாண்ட வர்மா.

"பயமுறுத்தலைத் தாண்டி குளச்சல் கடலின்மேல் இரத்தப்போர் வெடித்தது. மன்னரின் மேற்கூறிய வார்த்தைகளில் இருந்து குளச்சல் மற்றும் கடலோர கிராமங்களில் வாழ்ந்த கிறித்தவ மீனவர்கள் இப்போரில் பங்கெடுத்தனர் எனத் தயங்காமல் கூறலாம். டச்சு

ஆயுதங்களையும், உணவுப் பொருட்களையும் தாங்கி வந்த கப்பல்கள் மீனவர்கள் விரித்த தோணிகளையும், வள்ளங்களையும், கட்டு மரங்களையும், தாண்டிப்போக முடியாமல் திணறின. மேலும் டச்சுக் கப்பல்கள் நெடுங்காலம் உபயோகப்படுத்தாமல் தேங்கிக் கிடந்தன என்கின்றனர் குஞ்சு போன்ற சரித்திர ஆசிரியர்கள்" என்கிறார் பாதிரியார் சே.ரோ. நர்சீசன்.

கடலில் வைத்துத்தான் இரத்தப் போர் வெடித்தது. குளச்சல் மற்றும் கடலோர கிராமங்களில் வாழ்ந்த கிறித்தவ மீனவர்கள் இப்போரில் பங்கெடுத்தனர் என்பதன் மூலம் கத்தோலிக்கப் பாதிரியாரின் கிறித்தவ பாசம் அப்பட்டமாகவே வெளிப்படுகிறது.

"இவர்கள் டச்சுப் படையின் பாய் மரக் கப்பல்களை அக்கால மீன்பிடி உபகரணங்களாகிய துழவை, தண்டு, அடிக்கம்பு, தடி, கொழுத்தட்டி, அரிவாள், வெட்டுக்கத்தி, பருமல், சேப்பு ஆகியவற்றைக் கொண்டும், வள்ளம் கட்டுமரம் செய்யும் ஓடாவிகள் கோடரி, உளி, துரப்பணம், கொட்டாம்பட்டி போன்ற ஆயுதங்களாலும் கப்பலை இரவு நேரத்தில் சென்று துளையிட்டனர். கப்பல்கள் சேதமடைந்தன. இதனால் கப்பலுக்குள் தண்ணீர் புகுந்தது" என ஓலக்கோடு யாண், 'காற்றாடிமலைக் காவியம்' என்கிற நூலில் குறிப்பிடுகிறார்.

"திருவிதாங்கூர் மன்னர் காலத்துல டச்சுப்படைகள் குளச்சல் வழியா நுழைய வந்தாங்க. அப்போ திருவிதாங்கூர் மன்னரா மார்த்தாண்ட வர்மா இருந்தாரு. அப்போ டச்சு படைகள் குளச்சல் பகுதி நோக்கி வருவதா தகவல் கிடைச்சது. அந்த காலத்தில் வெள்ளைக்காரன்கிட்ட மட்டும்தான் பீரங்கி உண்டு. மன்னர் திடீரென எங்க பகுதிகள்ல உள்ள பனை மரங்களை வெட்ட சொல்லியிருக்காரு. அப்புறம் மாட்டு வண்டிகளையும் கொண்டு வர சொல்லியிருக்காரு. மாட்டு வண்டி மேல வெட்டின பனை மரத்தை வைச்சி பீரங்கிபோல கட்டியிருக்காங்க. டச்சுப்படைகள் குளச்சலை நெருங்கி வரவர ஒவ்வொரு வண்டியா கடற்கரைல கொண்டுவந்து நிரப்பியிருக்காருங்க. இதைக்கண்டு பயந்த டச்சு படைகள் உண்மை பீரங்கிதானு நம்பி மன்னனரிடம் சரண் அடைந்தது. டச்சுப்படை தளபதியாக டிலெனாய் என்பவர் இருந்திருக்காரு" என்கிறார் 'ஊர் சுற்றிப் பறவை' நூல் மூலம் இராம். 'குமரி மாவட்டத்தில் ஒரு சரித்திரப் பயணம்' என்கிற அடிக்குறிப்பு வேறு இந்நூலுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

டச்சுப் படைகள் குளச்சலை நெருங்கி வரவர ஒவ்வொரு வண்டியா கடற்கரைல கொண்டுவந்து நிரப்பினார்கள். "இதைக்கண்டு பயந்த டச்சு படைகள் உண்மை பீரங்கிதானு நம்பி மன்னனரிடம் சரண் அடைந்தது". வெற்றிபெற வேண்டும் என்கிற எந்தவொரு முயற்சியையும் டச்சுப்படை எடுக்கவில்லை. பீரங்கியைப் பார்த்தவுடனே பயந்து சரணடைந்து விட்டார்கள்.

"அந்த காலத்தில் வெள்ளைக்காரன்கிட்ட மட்டும்தான் பீரங்கி உண்டு" என சரித்திரப் பயணம் எழுதியிருக்கிறார் இராம். அப்படிப்பட்ட பீரங்கியை குளச்சலில் பார்த்ததும் பயந்து சரணடைந்து விட்டார்கள். கதையை கொஞ்சம் பொருத்தமாகவே சொல்லியிருக்கிறார். எதற்காக சரணடைந்தார்கள் என்று சொல்வதற்கு ஒரு கதை வேண்டும். பழுது பார்க்கும் கடையில் பழுதான பாகங்களை சரிசெய்வதற்கு, புதிய சாதனங்களை வாங்கிப் பொருத்துவதுபோல் கதையை நல்லமுறையில் இராம் பொருத்தி இருக்கிறார். இக்கதை மூலம் சரித்திரப் பயணம் செல்வது கடினம்தான். தவறான கதைகள் பயணிப்பவரை வழி கேடராக்கும்.

"குளச்சலில் வேணாட்டு அரசன் மார்த்தாண்ட வர்மாவுக்கும், டச்சுக்காரர்களுக்கும் யுத்தம் நடந்தது. வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த பீரங்கிகளைக் கண்ட படைத்தளபதி, 'இதென்ன நமக்குத் தெரியாதா?' என ஏளனத்துடன் சிரித்தான். கடற்கரையில் காளை வண்டிகளை நிறுத்தியவன், ஒவ்வொன்றிற்கும் ஒரு பனை வீதம் அடுக்கியபோதுதான் அந்த சிரிப்பின் பொருள் விளங்கியது. அதற்குமேல் போர்த்தி இருந்த கருநிறத் துப்பட்டா அசையும்போது முகமூடி அணிந்த பிசாசே ஞாபகத்திற்கு வரும். பைனாகுலர் வழி பார்த்த டிலெனாய்க்கு பேய் அறைந்தது. வண்டி உருள பனைமரம் பீரங்கிகளைத் தாக்க, மிரண்டுபோன டச்சுக்காரர்கள் கடலில் குதித்து உயிரைக் காப்பாற்ற வேண்டியதாயிற்று" என்கிறார் 'உக்கிலு' என்ற கதை நூல் வாயிலாக மார்த்தாண்டம் நேசமணிக் கல்லூரிப் பேராசிரியரும் நாவலாசிரியருமான குமாரசெல்வா.

குளச்சல் போர் எங்கு வைத்து நடந்தது என்பதனை குமாரசெல்வா வித்தியாசமான கோணத்தில் முன்வைக்கிறார். டச்சுக்காரர்கள் கடலில் பீரங்கியுடன் போருக்குத் தயாராக நிற்கிறார்கள். வேணாட்டுப் படை கடற்கரையில் பீரங்கியுடன் தயாராக நிற்கிறது. தொலைநோக்கி வழியாக கடற்கரையில் இருந்த பீரங்கிகளைப் பார்த்த டிலனாய்

அதிர்ந்துவிட்டான். அப்பொழுது பனைமர பீரங்கி, டச்சுக் கப்பலில் இருந்த பீரங்கிகளைத் தாக்கியது. உயிருக்குப் பயந்த டச்சுக்காரர்கள் கடலில் குதித்துவிட்டனர். அவர்களை படகில் சென்று கைது செய்தார்கள். குளச்சல் போருக்கான கதையை குமாரசெல்வா நன்கு பொருத்தியிருக்கிறார். அவருக்கு விருதுகள் வழங்கி சிறப்பிக்கலாம்.

குமரி மாவட்ட இலக்கியவாதிகளுக்கு டிலனாயின் வாரிசுகள் எந்த சாதி என்பது தெரிய வேண்டும். அப்படி இல்லை என்றால் பலருக்குத் தூக்கம் வராது. டிலனாய் திருவிதாங்கூரில் தங்கி விட்டதால், அவருக்கு பிறக்கிற குழந்தை எந்த சாதி என்கிற ஆசை பலரை துளைக்கும். டிலனாய், கத்தோலிக்க திருச்சபையைச் சார்ந்தவர். "இவரது மனைவிப் பெயர் மார்க்ரெட். இவரது மகன் யோகானசு டிலனாய். இவருக்கு ஒரு மகளும் உண்டு" என்கிறார் ஆ.கா. பெருமாள்.

டிலனாய்க்கு ஒரு மகன்தானே உண்டு. மகள் எங்கிருந்து வந்தாள் என வாசகர்களுக்கு ஒரு கேள்வி எழுத்தான் செய்யும். "டிலனாய் இறந்த பின்னர் இவரின் மூத்த மனைவியின் மகளும், இரண்டாம் மனைவியும் உதயகிரி கோட்டையிலே வாழ்ந்தனர். டிலனாயின் மகளைப் புலியூர் குறிச்சியில் வாழ்ந்த வேளாள வீரர் ஒருவர் மணம் செய்து கொண்டார் என்று வாய்மொழி செய்தி பத்து ஆண்டுகளுக்கு முன்புவரை வழக்கில் இருந்திருக்கிறது" என்கிறார் அ.கா. பெருமாள். இப்பொழுது வேளாளர் சாதியினருக்கு கொஞ்சம் மகிழ்ச்சி உருவாகி இருக்கும்.

டிலனாய்க்கு ஒரு மகள் குறித்து முனைவர் லால்மோகனிடம் கேட்டுவிடுவோம் என்று அவரைப் பார்க்கச் சென்றேன். டிலனாய்க்கு ஒரு மகள் உண்டு. அவளை வெள்ளாளர் ஒருவர் திருமணம் செய்தார். அவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் புதுச்சேரிக்கு குடிபெயர்ந்து விட்டார்கள் என ஆ.கா. பெருமாள் எழுதியிருக்கிறார். இது உண்மையா எனக் கேட்டேன். அந்த தகவலை நான்தானே அவரிடம் சொன்னேன் என்றார். அதற்கு ஆதாரம் ஏதும் இருக்கிறதா எனக் கேட்டேன். அப்படி எந்தவொரு ஆதாரமும் இல்லை என்றார்.

டிலனாய்க்கு ஒரு மனைவியா அல்லது இரண்டு மனைவியா என்றால் சிலர் ஒரு மனைவி என்றும், சிலர் அவருக்கு நாகர்கோவில் நீதிமன்றம் அருகாமையில் ஒரு வைப்பாட்டி உண்டு என்றும், அவளுக்கு பிறந்ததுதான் பெண் பிள்ளை என்றும், செகநாதன் என ஒருவர் நீதிமன்றம் முன்பாக இருந்தார். அவருடைய குடும்பம்தான் அந்த வைப்பாட்டி குடும்பம் என்றும் கூறுகின்றனர்.

டிலனாய்க்கு ஒரு மகள் உண்டு என்கிற தகவல் செவி வழியாக கடத்தப்பட்டு வந்திருக்கிறது. அதுகுறித்து ஏதாவது பதிவு இருக்கிறதா என்று தேடினால் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் கத்தோலிக்கப் பாதிரியார் பாரேம்மாக்கல் கோவர்ணதோர் எழுதிய, "ரோமாபுரி யாத்திரை" என்கிற நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இவர், இந்திய சிரியன் சபையைச் சார்ந்த ஓர் மலையாளி. இந்நூலை 1785-இல் பாரேம்மாக்கல் கோவர்ணதோர் எழுதியுள்ளார். அவரால் மலையாளத்தில் எழுதப்பட்ட, 'வர்த்தமான புத்தகம்' என்ற நூலானது, 'ரோமாபுரி யாத்திரை' என்ற பெயரில் தமிழுக்கு வந்துள்ளது. இந்நூல்தான் இந்திய மொழிகளில் முதலாவதாக எழுதப்பட்ட பயண நூல்.

"வேணாட்டுத் தலைவர் (டிலனாய்) நெடுங்காலம் அந்தக் கோட்டையில் தங்கி நாட்டுத் தொண்டாற்றி வந்தார். அவரின் ஒரே மகன் போரில் கொல்லப்பட்டான். அந்தத் துக்கச் சுமையைத் தாங்க முடியாமல் முதிய தலைவர் விரைவிலேயே மரணமடைந்தார். உதயகிரி தேவாலயத்திலே அவர் மகனின் கல்லறைக்குப் பக்கத்திலேயே அவரையும் அடக்கம் செய்தார்கள். தலைவரின் மனைவியும் அந்தப் பெண்ணின் முன் திருமணத்தில் பிறந்த மகளும்தான் மீந்தார்கள்" என்கிறார் கத்தோலிக்கப் பாதிரியார் பாரேம்மாக்கல் கோவர்ணதோர்.

மார்க்ரெட்டின் முதல் கணவருக்கு என்ன ஆனது என்கிற பதிவுகள் இல்லை என்றாலும் டிலனாய் மார்க்ரெட்டை திருமணம் செய்யும்போது அவளுக்கு ஏற்கனவே ஒரு பெண் குழந்தை பிறந்திருந்தது என்கிற ஒரு தகவல் இங்கு சொல்லப்படுகிறது. இந்த பதிவினை முழுமையாக ஏற்றுக் கொள்ளலாம். ஏனெனில் கத்தோலிக்கப் பாதிரியார் பாரேம்மாக்கல் கோவர்ணதோர் நேரடியாக பார்த்த சம்பவங்களின் அடிப்படையில் எழுதிய நூல் அது.

அந்த பெண் குழந்தையை யாருக்கு திருமணம் செய்து கொடுத்தார்கள் என்பதற்கு, "தலைவரின் மரணத்திற்குப் பிறகு அவர் மனைவி குடும்பத்தைப் பார்த்துக் கொள்ளவும், மகளைத் திருமணம் செய்யவும் கோழிக்கோட்டில் நல்ல குடும்பத்தில் பிறந்த மத்தாயி என்ற ஒரு ஆங்கிலேய இந்தியனை அழைத்துவந்து வீட்டில் தங்க வைத்தனர். தலைவர் இறந்தார் என்றாலும் அவருக்குக் கொடுத்திருந்த பெருமைகளையும், ஓய்வூதியத்தையும் அவர் மனைவிக்குத் தொடர்ந்து

அளிக்கும்படி மன்னர் கட்டளை இட்டிருந்தார்". மார்க்ரெட்டின் மகளை திருமணம் செய்தவர் கோழிக்கோட்டை சார்ந்த ஓர் ஆங்கிலோ இந்தியன். அவர் வெள்ளாளர் இல்லை என்பது ஆ.கா. பெருமாளுக்கு இனி புரியக்கூடும்.

அ.கா. பெருமாள் எழுதிய, "தென்குமரியின் சரித்திரம்" என்கிற நூலில், 'திருவிதாங்கூர் அரசு காலம்' என்கிற கட்டுரை ஒன்று உள்ளது. அதில், "டச்சுப் படைகளுடன் திருவிதாங்கூர் படைகள் மோதின. டச்சுப்படை பின் வாங்கியது. படைத் தலைவன் டிலனாய், டோனலாய் ஆகிய இருவரும் பிடிபட்டனர்" என்கிறார். படைத் தலைவர்கள் மாட்டிக்கிட்டார்கள்; மற்றவர்கள் பின்வாங்கி விட்டனர். பின்வாங்கியவர்கள், வந்த கப்பலிலே திருப்பி சென்று விட்டனரா என்பதெல்லாம் கதையில் சொல்லப்படவில்லை. ஏதோ தெரிந்ததை நாங்களும் எழுதியிருக்கிறோம் இல்லையா என்கிற மனப் பான்மையைத்தான் வரலாறாக கற்பிக்கப்படுகிறது.

இந்த போருக்கு உதவிய முக்கியமானவர்களை ஆ.கா. பெருமாள் கோடிட்டுக் காட்டுகிறார். அவர்கள்: "மார்த்தாண்ட வர்மாவின் முதல் தளவாய் ஆறுமுகம் பிள்ளையும், படைத் தலைவர் குமாரசாமிப் பிள்ளையும் நாஞ்சில் நாட்டைச் சார்ந்தவர்கள். ஆறுமுகம் பிள்ளையின் சகோதரர் தாணுபிள்ளை குமாரசாமி பிள்ளைக்குத் துணையாக இருந்து மன்னருக்கு போர்க்களத்தில் உதவியிருக்கிறார்கள்". அவர்கள் அனைவரும் வெள்ளாளர் சாதியைச் சார்ந்தவர்கள். இந்நூலை எழுதிய ஆய்வாளர் அ.கா. பெருமாளும் வெள்ளாளர் சாதியைச் சார்ந்தவர். டி லெனாய் மகளை திருமணம் செய்து வாழ்க்கைக் கொடுத்தவர் வெள்ளாளர் ஒருவர். இப்பொழுது வெள்ளாளர் சாதி மக்களுக்கு எல்லாம் ஒரு திருப்தி உருவாகியிருக்கும். ஆம்! குளச்சல் போரின் வெற்றிக்கு வெள்ளாளர்களே காரண கர்ணம்.

## டி லெனாயை கைது செய்தவர் யார்?

*247 பக்கங்களை உடைய மார்க் டி லெனாய் எழுதிய, "தி குலசேகர பெருமாள் ஆப் திருவாங்கூர்" நூல் பெரும்பாலும் டச்சு ஆவணங்களின் அடிப்படையில் எழுதப்பட்டுள்ளது. அதனால் அவருடைய முனைவர் பட்ட ஆய்வு நூல் முக்கியத்துவம் பெறுகிறது.*

*மார்க் டி லெனாய் எழுதிய, 'தி குலசேகரப் பெருமாள் ஆப் திருவாங்கூர்' என்கிற ஆங்கில ஆய்வு நூலின் மூன்றாவது அத்தியாயம், 'திருவிதாங்கூர் போர்' குறித்துப் பேசுகிறது. அந்த மூன்றாவது அத்தியாயத்தில் இடம்பெற்றுள்ள ஒரு சிறு தலைப்புதான், 'குளச்சல் போர்'. அதனை, ஆர். பிரேம்குமார் தமிழில் மொழிபெயர்க்க, 'குளச்சல் போரும் காரணிகளும்' என்கிற தலைப்பில் ஆன்றனி கிளாரட் மற்றும் 'திருவிதாங்கூர் சரித்திரத்தை மாற்றி எழுதிய குளச்சல் போர்' என்கிற தலைப்பில் என்.டி. தினகர் ஆகியோர் கட்டுரை எழுத, அவைகள், 'குளச்சல் போர்' என்கிற தலைப்பில் நூலாக தமிழில் வெளிவந்துள்ளது.*

*'குளச்சல் போர்' நூலினை வாசித்தபோது, மார்க் டி லெனாயின் கட்டுரை சரியாக மொழிபெயர்க்கவில்லை என்பதனை காண முடிந்தது. நிகழ்ச்சி சம்பவங்களை தொடர்ச்சியான பாதைக்கு வாக்கியங்கள் நகர்த்திச் செல்லவில்லை. மார்க் டி லெனாய் எழுதிய ஆங்கிலக் கட்டுரைக்கும், தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட கட்டுரைக்கும் பல இடங்களில் பொருள் மாறியிருப்பதனை காண முடிந்தது.*

*ஆர். பிரேம்குமாரின் மொழிபெயர்ப்பு வாசிப்பதற்கு சிரமமாக இருந்தது என்கிற செய்தியும் வாசகர்கள் வழியாக அறிய நேர்ந்தது. நீளமான வாக்கியங்களை காய்கறிகள் வெட்டுவதுபோல் நறுக்கித் தந்திருக்கிறார். உதாரணத்திற்கு நூலின் தொடக்கத்தில் உள்ள முதல் மூன்று பத்திகளைப் பார்ப்போம்:*

*மார்க் டி லெனாய் எழுதியிருப்பது:*

At the end of August 1740, Marthanda Varma signed a contract with the French in which he ceded Colachel to Louis XV. The French thus

not only obtained full jurisdiction over Colachel, but also permission to purchase Travancore piece-goods and pepper there. Martanda Varma thus hoped the Frech would support him with military means and mediate between him and Chanda Sahib. Soon two French envoys arrived at the Travancore court to prepare the arrival of several ships. The French realised however that they ran the risk of being involved in the war between the Dutch and Travancore. Therefore, Captain Moreau of ‘Le Phoenix” had strict orders concerning the supply of arms:

“Comme nous sommes en paix avec les Hollandois vous ne fournirez a ceprince (King of Travancore) aucune moyens, armes ou autres choses quelconques pour leur faire la guerre”.

This did however not prevent Moreau, the French envoy who negotiated over trade with Martanda Varma, to try to reconcile the king of Travancore with Banda Sahib, whose family had just visited Pondichery. Banda Sahib, the brother of Chanda Sahib, had promised the commander of Pondichery to live in peace with Martanda Varma as soon as he had paid his tribute.

*ஆர். பிரேம்குமார் மொழிபெயர்ப்பு:*

*“1740 ஆகத்து மாத கடைசியில் மார்த்தாண்ட வர்மா பிரெஞ்சுக்காரர்களோடு ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார். அதன்படி பிரெஞ்சு மன்னர் லூயிஸ் XV-க்கு குளச்சலை விட்டுக் கொடுத்ததால் பிரெஞ்சுக்காரர்கள் குளச்சல் மீதான முழு ஆளுகை அதிகாரமும் பெற்றனர். அத்துடன் திருவிதாங்கூரில் உற்பத்தி செய்யப்பட்டப் பொருட்களையும், மிளகையும் வாங்கிக் கொள்ளும் அனுமதியையும் பெற்றனர். இதனால் மார்த்தாண்ட வர்மா பிரெஞ்சுக்காரர்கள் இராணுவ ரீதியாக தமக்கு உதவுவார்கள் என்றும், (தன்னை மிரட்டிக் கொண்டிருந்த) சந்தா சாகிப்பிடம் சமாதானம் பேசுவார்கள் என்றும் நம்பினார். விரைவிலேயே இரண்டு பிரெஞ்சு தூதுக்குழுக்கள் திருவிதாங்கூர் அரசவைக்கு வருகை புரிந்து, குளச்சலுக்கு பல கப்பல்கள் வருவதற்கான ஆயுத்தப் பணிகளைச் செய்தனர். திருவிதாங்கூருக்கும் டச்சுக்காரர்களுக்குமிடையே நடந்துவரும் போரில் மாட்டிக் கொள்ளக்கூடாது என்பதையும் பிரெஞ்சுக்காரர்கள்*

உணர்ந்திருந்தார்கள். ஆகையால் 'லாஃபீனிக்சு' கப்பலின் கேப்டன் மோரோக்கு ஆயுதங்களைக் கையாளுவது குறித்த கடுமையான உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருந்தன.

பிரெஞ்சு தூதுக்குழு சார்பாக மார்த்தாண்ட வர்மாவிடம் வணிகம் தொடர்பாக பேச வந்திருந்த கேப்டன் மோரோ, சந்தா சாகிப்புடன் மார்த்தாண்டவர்மா சமரசப் பேச்சு நடத்த உதவுவதிலிருந்து பின்வாங்கவில்லை. அண்மையில்தான் பந்தா சாகிப்பின் குடும்பத்தினர் பாண்டிச்சேரிக்கு வருகை புரிந்திருந்தனர். சந்தா சாகிப்பின் சகோதரரான பந்தா சாகிப் பாண்டிச்சேரியின் பிரெஞ்ச் படைத் தலைவரிடம், மார்த்தாண்ட வர்மா தங்களுக்கு அளிக்க வேண்டிய மரியாதையை அளித்துவிட்டால் சமாதானமாகப் போய்விடலாம் என உறுதி அளித்திருந்தார்".

மார்க் டி லெனாய், ஆறு வாக்கியங்களில் முதல் பத்தியை நிறைவு செய்துள்ளார். இதனை ஏழு வாக்கியங்களாக ஆர். பிரேம்குமார் மொழிபெயர்ப்பு செய்துள்ளார். இரண்டாவது பத்தி டச்சு மொழியில் எழுதப்பட்டுள்ளது. டச்சு தெரியாததால் அதனை ஆர். பிரேம்குமார் மொழிபெயர்ப்பு செய்யவில்லை. அதனை விட்டுவிடுவது எவ்வளவு பெரிய தவறு என்பதனை அவர் உணரவில்லை. அவரோடு இருந்த ஆன்றனி கிளார்ட் மற்றும் என்.டி. தினகர் ஆகியோரும் உணரவில்லை. மார்க் டி லெனாய், இரண்டு வாக்கியங்களில் மூன்றாம் பத்தியை நிறைவு செய்துள்ளார். இதனை மூன்று வாக்கியங்களாக ஆர். பிரேம்குமார் மொழிபெயர்ப்பு செய்துள்ளார். மூன்றாம் பத்தியின் இறுதியில், 'தங்களுக்கான மரியாதையை அளித்துவிட்டால் சமாதானமாகப் போய்விடாலம்' என மொழிபெயர்ப்பு செய்திருக்கிறார். வாசகர்கள் இந்த இடத்தில் குழப்பம் அடையக்கூடும். அப்படி என்ன மரியாதை?

முதல் பத்தியில், அடைப்புக் குறிக்குள் ஒரு செய்தியை ஆர். பிரேம்குமார் சொல்கிறார், அதாவது, "(தன்னை மிரட்டிக் கொண்டிருந்த)". இந்த வார்த்தை மார்க் டி லெனாய் நூலில் இல்லை. வாசகர்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக அந்த வார்த்தையை மொழிபெயர்ப்பாளர் ஆர். பிரேம்குமார் சேர்த்துள்ளார். திருக்குர்ஆன் தமிழில் இப்படித்தான் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதனை சிர்க் என்றுகூட அழைக்கலாம். மொழிபெயர்ப்பில் சிர்க் தேவையில்லை. சரியாக மொழிபெயர்த்தால் இப்படிப்பட்ட

விளக்கங்களை சேர்க்க நேரிடாது. அவ்வாறு சேர்க்கும்போது ஆய்வாளரின் நூலில் மொழிபெயர்ப்பாளரின் கருத்தை உட்புகுத்துவதுபோல் ஆகிவிடும். பொருள் மாறாமல் இருந்தாலும் வாக்கியங்களை உடைத்து வழங்குவது தவறே. அவ்வாறு உடைக்கும்போது சில வேளைகளில் அதன் பொருள், வேறு போக்கில் மாறிவிடக்கூடும்.

மார்க் டி லெனாயின் முதல் மூன்று பத்திகளை மொழிபெயர்த்துப் பார்ப்போம்:

“பிரெஞ்சுவுடன் ஓர் ஒப்பந்தம் கையெழுத்திட்டதன் பேரில் பதினைந்தாம் லூயிசுக்கு **1740** ஆகத்து மாத இறுதியில் மார்த்தாண்ட வர்மா குளச்சலை விட்டுக்கொடுத்தார். அதன்பேரில் பிரெஞ்சு, குளச்சல் எல்கையை முழு ஆளுகையின்கீழ் எடுத்துக் கொண்டது மட்டுமில்லாமல் திருவிதாங்கூரில் உள்ள சிறிய சரக்குகள் மற்றும் மிளகுகளை வாங்கிக் கொள்ளும் அனுமதியையும் பெற்றது. அதன்மூலம் பிரெஞ்சு இராணுவ ரீதியாக உதவுவார்கள், தமக்கும் சந்தா சாகிப்புக்கும் இடையில் சமாதானம் செய்வார்கள் என்று மார்த்தாண்ட வர்மா நம்பிக்கைக் கொண்டார். குளச்சலில் பல கப்பல்கள் வருவதற்கான ஏற்பாடுகளை செய்வதற்கு இரு பிரெஞ்சு பிரதிநிதிகள் திருவிதாங்கூர் அவைக்கு விரைவிலே வருகை புரிந்தனர். டச்சுவுக்கும் திருவிதாங்கூருக்கும் இடையில் நடந்துவரும் போர் ஆபத்தில் ஆளாகிவிடக்கூடாது என்பதனை பிரெஞ்சு உணர்ந்திருந்தது. அதன்பேரில் ஆயுதங்கள் வழங்கும் விசயத்தில், ‘லி போனிக்சு’ தலைவர் மோரே கண்டிப்பான உத்தரவுகளைப் பெற்றிருந்தார்.

‘நாம் டச்சுவுடன் சமாதானமாக இருக்கிறோம். அவர்கள்மீது போர்தொடுக்கும் வகையில் ஆயுதங்கள் அல்லது ஏதாவது பொருட்களை நீங்கள் இந்த மன்னருக்கு (திருவிதாங்கூர் மன்னருக்கு) ஏதேனும் வகையில் விநியோகிக்காதீர்கள்’.

இது எவ்வகையிலும் மோரேயை தடுக்கவில்லை என்பதால் மார்த்தாண்ட வர்மாவுடன் பிரெஞ்சு பிரதிநிதி மோரே வர்த்தகம் தொடர்பான பேச்சுவார்த்தை நடத்தியபோது, அப்பொழுதுதான் குடும்பத்தோடு பாண்டிச்சேரிக்கு வருகை புரிந்திருந்த சந்தா சாகிப்பை திருவிதாங்கூர் மன்னரோடு ஒற்றுமைப்படுத்த முயற்சி செய்தார். சந்தா சாகிப்பின் சகோதரரான பந்தா சாகிப் என்பவர் பாண்டிச்சேரி

தளபதியிடம், அவருக்கான கப்பத்தை மார்த்தாண்ட வர்மா கட்டிவிட்டால் அவரோடு உடனடியாக சமாதானமாகப் போவதாக வாக்குறுதி அளித்தார்".

'தங்களுக்கான மரியாதையை அளித்துவிட்டால் சமாதானமாகப் போய்விடாலம்' என்கிற ஆர். பிரேம்குமாரின் மொழிபெயர்ப்பு நெருடலைத்தான் ஏற்படுத்தியது. என்ன மரியாதை வேண்டிக் கிடக்கிறது என்கிற கேள்வி எழுகிறது. Respect என்றால் மரியாதை. இங்கே, மார்க் டி லெனாய் paid his tribute என்கிறார். Tribute என்பதற்கு கப்பம் என்கிற ஒரு பொருளும் உண்டு. 'To pay tribute' என்றால் 'கப்பம் கட்ட' என்று பொருள்.

அனைத்தையும் விலாவாரியாக விவரித்துக் கொண்டிருக்க முடியாது என்பதால் இரு செய்திகளை மட்டும் இங்கு பதிவிட விரும்புகிறேன். மார்க் டி லெனாய் எழுதுகிறார்: "They shot bullets through the doors and windows of the church and one jusuit was seriously wounded in his head". இதனை ஆர். பிரேம்குமார், "அவர்கள் தேவாலயத்தின் கதவு வழியாகவும் சன்னல்கள் வழியாகவும் துப்பாக்கி சூடு நடத்தினர். தேவாலயத்தின் உள்ளிருந்த ஒரு சேசுசபை அருட்பணியாளரின் தலையில் குண்டு பாய்ந்தது" என மொழிபெயர்ப்பு செய்துள்ளார். தலையில் குண்டு பாய்ந்தால் அவர் அந்த இடத்திலே இறந்திருப்பார். மாலைமலர், தமிழ்முரசு போன்ற பத்திரிகைகளுக்கு தலைப்பு செய்தி போடுவதற்கு இப்படிப்பட்ட வார்த்தைகள் பயன்படலாம்.

கத்தோலிக்கப் பாதிரியார்களை குறிவைத்து சுடுவது டச்சுவின் நோக்கமல்ல. அவர்கள் சுட்டது சுவரில் பட்டு, அந்த சுவர் கற்களின் சிதறல்கள் ஏதேனும் பாதிரியாரின் தலையைத் தாக்கியதில் காயம் ஏற்பட்டிருக்கலாம். அதனை சரியாக மொழிபெயர்ப்பதாக இருந்தால், "அவர்கள், ஆலயத்தின் கதவுகள் மற்றும் சன்னல்கள் வழியாக தோட்டாக்களால் சுட்டதில் இயேசு சபையினர் ஒருவர் ஆபத்தான நிலையில் தலையில் காயமடைந்தார்" என எழுதலாம். இதனை அதேநூலில் கட்டுரை எழுதியிருக்கிற ஆன்றனி கிளாரட், "தேவாலயத்தின் கதவுகள், சன்னல்கள் வழியாக டச்சுக்காரர்கள் துப்பாக்கிகளால் சுட்டனர். இதில் ஒரு சேசுசபை துறவிக்கு தலையில் பலத்த காயம் ஏற்பட்டது" என்கிறார்.

ஆர். பிரேம்குமார் எழுதிய மொழிபெயர்ப்பை ஆன்றனி கிளாரட்

மற்றும் என்.டி. தினகர் வாசிக்கவில்லையோ என்கிற கேள்வி எழுகிறது. வாசித்து இருந்தால் அதனைத் திருத்தி இருக்கலாமே என்கிற எண்ணமும் தோன்றுகிறது. அதேவேளையில், ஆர். பிரேம்குமாரின் மொழிபெயர்ப்பில் உள்ள சில வார்த்தைகளை வாசித்து நீக்கி விட்டார்களோ என்கிற ஐயப்பாடும் எழுகிறது.

'பாழ்பட்டுக் கிடக்கும் தமிழகக் கடற்கரை' என்கிற நூலில் குமரி மைந்தன், "மீனவர்களின் பொதுவான இருப்பே வறுமைதான். அவர்கள் வாழ்வது குடிசைகள் அல்லது சிறு வீடுகளில்தான். மீன்பாடு குறைவான நாட்களில் தங்கள் வயிற்றுப்பாட்டைப் பார்க்க கருவாட்டையாவது விற்க வேண்டும். அதற்காக வீடுகளில் எப்பொழுதும் கருவாட்டை சேர்த்து வைத்திருப்பார்கள். அக்கருவாட்டின் நொடி அவர்கள் மீதும், அவ்வீட்டிலிருக்கும் பண்டங்கள் மீதும் வீசும். அவர்கள் வெளியில் செல்லும்போது என்னதான் நறுமண எண்ணெய்கள் தடவிக் கொண்டாலும் அவற்றையும் மீறிக்கொண்டு இந்த நொடி, குறிப்பாக அவர்களது உடைகளிலிருந்து பக்கத்தில் இருப்போரைத் தாக்கும். இது அவர்களிடையில் ஒரு தாழ்வு மனப்பான்மைக்குக் காரணமாக அமைந்துள்ளது" என்கிறார்.

மேற்படி கூற்றினை எழுத்தாளர் குமரி மைந்தன் **2015**-ஆம் ஆண்டு பதிவு செய்கிறார். மீனவர்களின் உடம்பிலிருந்து மீன் வாடை அடித்துக் கொண்டிருப்பதால் மீனவர்கள் தலைக்குனிவுடன் நடக்கிறார்களாம். அவர்களுடைய வீட்டு பொருட்களில் எல்லாம் மீன் நொடி வீசிக் கொண்டிருக்கிறதாம். எந்தவகையான நறுமணத் திரவியம் தடவினாலும் அந்த வாடை மீனவர்களின் உடம்பிலிருந்து போகாதாம். வீடு முழுவதும் நெத்தலி கருவாட்டை குவியல்போல் எந்நேரமும் குவித்து வைத்திருக்கிறார்களாம். சாப்பிட வழியில்லாத போது அதனை விற்று சாப்பிட்டு கொள்வார்களாம். அவர்களின் வீடுகளில் எந்நேரமும் வறுமை குடி கொண்டிருக்குமாம். அவர்கள் குடியிருக்கும் வீடுகள் எல்லாம் குடிசை வீடுகளாம். குமரி மைந்தன் என்கிற எழுத்தாளனுக்கு மீனவர்கள் மீது எவ்வளவு காழ்புணர்ச்சி இருக்க வேண்டும். எவ்வளவு கீழ்த்தரமாக தனது கருத்தினை முன்வைக்கிறார்.

'குமரி மாவட்ட கலவரத்தில் சங்கப் பரிவார்களின் பங்கு' என்கிற நூலில், "குமரிக் கடற்கரையில் வாழ்வோரில் பரவரே மிகுதி" என குமரி மைந்தன் எழுதியிருந்தார். அடியேன் அவரிடம் அலைபேசியில்

கேட்டபோது, அதுகுறித்து எனக்கு சரியாகத் தெரியவில்லை. நீங்கள் சொல்லித்தான் குமரிக் கடற்கரையில் முக்குவர் சாதியினர் எண்ணிக்கையில் அதிகம் என்பது எனக்குத் தெரிகிறது என்றார். இத்தனைக்கும் எழுத்தாளர் குமரி மைந்தன் குமரி மாவட்டத்தைச் சார்ந்தவர். விவரம் அறியாமல் ஏன் இப்படிப்பட்டவர்கள் கடற்கரை சமூகத்தைக் குறித்து எழுதுகிறார்கள் என்றால் சாதி உணர்வாளர்களுக்கு அது புகைக்கும் சுகத்தைக் கொடுக்கிறது. இப்படிப்பட்டவர்களிடம் இயல்பாகவே ஒட்டிக் கொண்டிருப்பது சாதிய காழ்ப்புணர்ச்சி.

தன்னை, தன்னுடைய சாதியை உயர்வாக தூக்கிப் பிடிக்க வேறு ஏதாவது ஒரு சாதியை தரைத் தளத்திற்குக் கொண்டுவர வேண்டும் என்பதில் குமரி மைந்தன் தெளிவாக இருக்கிறார். அது போதையில் இருப்பவரின் தெளிவற்ற நிலை என்பதனை அவர் அறிந்து கொள்ளவில்லை. பெண்ணை தரக் குறைவாக பேச வேண்டுமென்றால் அவள் ஒரு விபசாரி என்று கூசாமல் சொல்வதுபோல் மீனவரை தரக் குறைவாகப் பேச குமரி மைந்தன் கையாண்டிருக்கும் முறைதான், “அவர்கள் வெளியில் செல்லும்போது என்னதான் நறுமண எண்ணெய்கள் தடவிக் கொண்டாலும் அவற்றையும் மீறிக்கொண்டு இந்த நொடி, குறிப்பாக அவர்களது உடைகளிலிருந்து பக்கத்தில் இருப்போரைத் தாக்கும்” என்பதாகும்.

‘மறுப்பக்கம்’ நூலில் பொன்னீலன் எழுதுகிறார்: அலெக்சு சேதுவின் தோளில் கை போட்டவுடன், “அவன் உடம்பில் மீன் நாற்றம் அடிப்பதுபோல ஒரு அருவருப்பு...”. குமரி மைந்தனின் அதே சொல்லாடல்தான் இங்கே பொன்னீலனால் கையாளப்படுகிறது. வழலை போட்டு குளித்தாலும், நறுமணத் திரவியம் அடித்தாலும் மீனின் வாடை மீனவரை விட்டு விலகாது என குமரி மைந்தன் எழுதுவதனைவிட ஒருபடி மேலாக பொன்னீலனின் கையாடல் நகருகிறது.

‘சாய்வு நாற்காலி’ நூலில் தோப்பில் முகம்மது மீரான், “புள்ளேய் ஏதோ தொறயிலுள்ள எச்சிப்பேய் ஊட்டிலெ வந்திரிக்கி. மீன் மோக அடிக்குதுள்ளே. சந்தனத்திரி கொளுத்தி வையுங்கொ. சைத்தான் போட்டு” என்கிறார். சூசம்மா என்கிற முக்குவப் பெண் யாருக்கும் தெரியாமல் சவ்தா மனிசில் உள்ள துலுக்க வீட்டில் ஆசிபாவின் கணவனோடு இரவில் வந்து படுப்பாளாம். அவள் வருவதும் போவதும் யாருக்கும் தெரியாதாம். அதேவேளையில் அவள் வீட்டில் வரும்போது

மீன் வாடை அடிக்குமாம். அவளுக்கு இரண்டு பிள்ளைகளாம். அவள் சொத்தில் உரிமை கேட்டு வந்துவிடுவாளாம். “சவ்தா மன்சிலுக்குள் மீன் வாடையை முகர்ந்ததன் உதய இட இரகசியம் அம்பலமானதும் ஆசியாவுக்கு அழுகை வந்துவிட்டது” என்கிறார்.

எந்தவொரு கதையிலும் தோப்பில் முகம்மது மீரான் துலுக்கச்சியை முக்குவன் வைத்துக் கொள்வதுபோல் கதை எழுதமாட்டார். துலுக்கச்சிவ முக்குவனுடன் படுத்து குழந்தை பெற்றதாய் கதை எழுதினால் துலுக்கக் குடியில் அவர் இருக்க முடியாத நிலை உருவாகிவிடும். அதனால் அவருக்கு லெப்பை சாதியைக் காட்டிலும் முக்குவர் சாதி குறைந்ததாகக் காண்பிக்க வேண்டும். இத்தனைக்கும் முக்குவர்கள் கடலில்போய் பிடித்துவரும் மீன்களை குறைந்த விலைக்கு வாங்கி, அதனை அதிக விலைக்கு விற்று குடும்பத்தை வளர்த்தவர்கள் முசுலிம்கள். அந்த நன்றி விசுவாசமின்றி பெரும்பாலான நாவல்களை முக்குவர்களுக்கு எதிராகவே பதிவு செய்திருக்கிறார்.

இப்படிப்பட்டவர்களை எல்லாம் உயர்ந்த எழுத்தாளர்களாக தூக்கிப் பிடிக்கிறார்கள் என்றால் குமரி மாவட்ட இலக்கியக் கூடுகைகள், கட்டுக் கதைகளுக்குப் பின்னால் சாதிய பின்னணியில் அணிவகுத்துச் செல்வதையே காண்பிக்கிறது. குளச்சல் போரில் மீனவர்களுக்கு பங்குண்டு என்கிற கதையை பெரும்பாலான கதை சொல்லிகள் சேர்த்திருக்கிறார்கள். குளச்சல் கடற்கரையில் மீனவர்கள் குடியிருப்பதால் அவர்களையும் கதையில் சேர்க்க வேண்டிய அவசியம் பிற சமூகத்தைச் சார்ந்த எழுத்தாளர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

குளச்சல் போர் முடிவுக்கு வந்திருந்த நேரம். ஆகத்து 15 அன்று மார்த்தாண்ட வர்மாவின் பிறந்தநாள். அன்றைய தினம் மார்த்தாண்ட வர்மா குளச்சலுக்கு வருகை புரிகிறார். வந்தவுடனே அவர் அங்கிருந்து உடனடியாக புறப்பட்டுச் சென்றுவிட்டார். அதற்கு, ஆவணத்திலிருந்து மார்க் டி லெனாய் இரண்டு முக்கியச் செய்திகளை முன்வைக்கிறார். முதலாவதாக, குளச்சல் கோட்டையில் உள்ள பிணங்களில் இருந்து கடுமையான வாடை வீசிக் கொண்டிருந்தது. இரண்டாவதாக, உயர்சாதி பிராமண மன்னன், கிறித்தவர்கள் வாழும் பகுதிக்கு செல்லக்கூடாது என்பதாகும்.

முக்குவர்கள் இந்துக்களாக இருந்தால் அப்பகுதிக்கு மன்னர் மார்த்தாண்ட வர்மா செல்லலாம். முக்குவர்கள், கிறித்தவர்களாக

மாறிவிட்டதால் அப்பகுதியின் புனிதம் கெட்டுப்போய் விட்டது. அதனால் அப்பகுதிக்கு மன்னர் மார்த்தாண்ட வர்மா செல்லக்கூடாது. பிராமணர்கள் பார்வைப்படி, கடவுளின் தேசத்து முக்குவர்கள் எப்பொழுது மதிப்பையும் மரியாதையையும் இழந்தார்கள் என்றால் அவர்கள் கிறித்தவ சமயத்திற்கு மாறிய பின்பாகத்தான். விவேகானந்தர், குமரிக்கு வருகை தரவில்லை என்றால் கன்னியாகுமரி கடற்கரைகூட புனிதம் அடைந்திருக்காது. மேலும், கேரளாவில் உள்ள இந்து முக்குவர்கள் ஒருபோதும் கிறித்தவ முக்குவர்களோடு எந்தவித உறவோ அல்லது திருமண சம்பந்தமோ வைத்துக் கொள்வதில்லை என்பதிலும் புனிதம் பேணப்படுகிறது. ஆம்! இந்து நாடார்கள், கிறித்தவ நாடார்களுடன் திருமண உறவு வைத்துக் கொள்வதுபோல் இந்து முக்குவர்கள் திருமணம் செய்து கொள்வதில்லை.

குமரி மாவட்ட முக்குவர்கள், கிறித்தவ சமயத்திற்கு மாறுவதற்கு காரணமாக இருந்தவர் மன்னர் இராமவர்மா. 1544-இல் இராமவர்மா திருவிதாங்கோட்டில் அரண்மனை அமைத்து ஆண்டுவந்தார். அப்பொழுது கயத்தாறைச் சார்ந்த வெட்டும் பெருமாள், புல்லர் என்ற அடியாட்களைச் சேர்த்துக்கொண்டு திருவிதாங்கூர் பகுதிகளில் சிலவற்றைத் தன் எல்கைக்குள் கொண்டுவந்தார். இதனால் கோபமடைந்த இராமவர்மா, கத்தோலிக்கப் பாதிரியார் சவேரியாரின் உதவியை நாடினார். சவேரியார் கேட்டுக் கொண்டதன்பேரில் ஆளுநர் அல்போன்சு, போருக்கு வேண்டிய குதிரைகளைக் கொடுத்து உதவியது மட்டுமின்றி மன்னர் இராமவர்மனுக்கு படைகளையும் அனுப்பி உதவினார். இதற்குக் கைமாறாக கடலோரத்தில் வாழுகின்ற முக்குவர்களை மதமாற்றம் செய்ய சவேரியார் அனுமதி வேண்டினார். மன்னரும் அதற்கு சம்மதித்தது மட்டுமின்றி முக்குவர்கள் கிறித்தவத்தை தழுவலாம் என பறையடித்து அறிவிப்பும் செய்தார். கத்தோலிக்க கோவில்கள் கட்டுவதற்கு ரூ 2,000/- பணமும் அன்பளிப்பாகக் கொடுத்தார். இதனை இன்னொரு விதத்தில் சொல்வதாக இருந்தால் முக்குவர் கிராமங்களை அந்நிய நாட்டைச் சார்ந்த சவேரியாருக்கு பட்டா போட்டு மன்னர் கொடுத்தார் என்றே சொல்லலாம். திருவிதாங்கூர் மன்னர்களுக்கு முக்குவர்கள் விசுவாசிகளாக இருந்தார்கள் என்பதனை இதன்மூலமும் அறிந்து கொள்ளலாம். முக்குவர்கள் எவரும் மதம் மாறக்கேட்டு மன்னரிடம் முறையீடு எதுவும் செய்யவில்லை; விவிலியத்தை வாசித்து மதம் மாறவுமில்லை. இந்தத் தவறினைச் செய்தவர் மன்னர் இராமவர்மா.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் மார்க் டி லெனாய் எழுதிய, "தி குலசேகரப் பெருமாள் ஆப் திருவங்கூர்" ஆவண நூலானது குமரி மாவட்ட வரலாற்றில் முக்கிய இடத்தினை வகிக்கிறது. மார்க் டி லெனாய் எழுதியிருக்கிற குளச்சல் போர் குறித்த ஆய்வானது ஒரு நேர்மையான பதிவாக வெளி வந்திருப்பதால் அதற்குள் சாதி வெறியர்கள் அவர்களின் சாதிப் பெருமையைத் தேடுவதே நலமாக இருக்கும்.

"சூலை 15, குளச்சலில் மறைத்து வைத்திருந்த அகழ்பீரங்கி மூலம் இரண்டு குண்டுகளை திருவிதாங்கினர் வெடிக்கச் செய்த நிலையில், குளச்சல் போர்க் குழுவானது மொழிபெயர்ப்பாளர் டூபூயித்தை கன்னியாகுமரிக்கு நேரடியாக அனுப்பி, அங்கிருந்து உதவிபெற்று வர முடிவு செய்தது. கோட்டைகளுக்கு இடையே தபால் சேவைக்கு பயன்படுத்தப்படும் சிறிய கப்பலில் முக்குவர் படகோட்டி மற்றும் படைத்துறை சிற்றலுவலர் ஆகியோருடன் அவர் பயணம் மேற்கொண்டார். முக்குவரின் துரோகத்தால் இந்த கப்பல் கடலலையில் உடைந்தது. டூபூயித் மற்றும் படைத்துறை சிற்றலுவலர் ஆகியோர் கைதிகளாக திருவிதாங்கூர் வீரர்களால் சிறைபிடிக்கப் பட்டனர்" என மார்க் டி லெனாய் பதிவு செய்கிறார்.

மொழிபெயர்ப்பாளர் மற்றும் படைத்துறை சிற்றலுவலர் ஆகியோர் கைதிகளாக திருவிதாங்கூர் வீரர்களால் சிறைபிடிக்கப்பட்டனர் என்கிற மார்க் டி லெனாயின் பதிவில், 'முக்குவரின் துரோகத்தால்' என்கிற வார்த்தையில் 'துரோகம்' என்கிற வார்த்தையை நீக்கி விட்டார்கள். முக்குவரை துரோகி என்று இவ்விடத்தில் சொல்வதால் எந்தவித சிக்கலும் கிறித்தவ முக்குவர்களுக்கு ஏற்பட்டுவிடப் போவதில்லை.

'குளச்சல் போர்' நூலானது நாடார்களின் முக்கியத்துவத்தை இல்லாமல் ஆக்கிவிட்டது என்கிற ஆதங்கம் சில நாடார்கள் மத்தியில் இருப்பதுபோல், முக்குவர்கள் மத்தியிலும் அப்படியொரு ஆதங்கம் இருக்கிறது. இருப்பினும், இந்த துரோகியால் கிறித்தவ முக்குவர்கள் குளச்சல் போரில் முக்கியத்துவம் அடைகிறார்கள் என்பதுதான் உண்மை.

அந்த துரோகி வேறு யாருமல்ல. அவர்தான் கடியப்பட்டணத்தை சார்ந்த தபசு பிள்ளை. இவருடைய வீர செயலால் இவர், 'செயம்கொண்ட மன்னடியார்' என அழைக்கப்பட்டார். இவருடைய

வீரச் செயலைப் பாராட்டி இவருக்கு 'மருதம்' பட்டம் வழங்கப்பட்டது. மருதம் பட்டமானது குமரி மாவட்ட கடற்கரையில் வேறு எவருக்கும் வழங்கப்பட்டதில்லை.

மன்னடியாருக்கு குழந்தைகள் கிடையாது. இவருடைய காலத்திற்குப் பின்பாக இவருடைய வீட்டில் வேலைசெய்த சிலுவை குருசுக்கு சொத்துக்களை எழுதி வைத்தார். சிலுவை குருசுவுக்கு முடியப்பன், அந்தோணிவாசு ஆகிய இரு மகன்கள் உண்டு. தவசுப் பிள்ளையின் தங்கை மகன் விக்டர் நாயகம் ஆங்கில அரசின் ராயல் மிலிட்டரியில் வேலை செய்தவர். ஆங்கில அரசு கேட்டுக் கொண்டதன்படி சிலகாலம் தென்ஆப்பிரிக்காவில் ஆங்கிலேயர்களின் இராணுவ அதிகாரியாக பணி புரிந்தார். இவருடைய மகன் சுந்தர் மும்பையில் உள்ளார்.

கடியப்பட்டணம் தபசு பிள்ளையின் வீடு மரத்தினால் செய்யப் பட்டிருந்தது. இவருக்கு நிறைய சொத்துக்கள் உண்டு. இவர் கரமடி வள்ளங்களுக்கு சொந்தக்காரராக இருந்தார். சின்னவிளை ஊர் அப்பொழுது உருவாகி இருக்கவில்லை. நாளடைவில், இவர் சின்னவிளை நிலப்பகுதிகளை வாங்கி அங்கே தென்னை மரங்களை நட்டு வளர்த்தது மட்டுமின்றி, அங்கே வீடு கட்டியும் வாழ்ந்து வந்தார். கடியப்பட்டணத்தின் மேற்குப் பகுதி கட்டுமரம் மற்றும் கரமடி தொழிலுக்கு வசதியாக இருந்ததால் குடிசை போட்டு தங்குவதற்கு தபசு பிள்ளையிடம் அனுமதி பெற்று கடியப்பட்டணம் ஊரைச் சார்ந்த பலர் அவருடைய நிலத்தில் குடியேறினர். சின்னவிளையில் கட்டப்பட்ட முதல் வீடு தபசு பிள்ளை வீடுதான்.

கட்டப் பொம்மனை எட்டப்பன் காட்டிக் கொடுத்ததுபோல், பிரபாகரனை கருணா காட்டிக் கொடுத்ததுபோல் முக்குவரின் செயல் இங்கு நடைபெறவில்லை. மன்னர் மார்த்தாண்ட வர்மாவுக்கு முக்குவர்கள் விசுவாசிகளாக இருந்தார்கள் என்பதனைக் குறித்து முக்குவர் சாதியினர் காலம் முழுவதும் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். முக்குவரை துரோகியாக வர்ணிக்கும் மார்க் டி லெனாயின், 'டி லெனாய்' பாசம் இங்கே வெளிப்பட்டலும் கடியப்பட்டணம் தபசுபிள்ளையை கிறித்தவ முக்குவர்கள் பாராட்டலாம். குளச்சல் போர் குறித்து கிறித்தவ முக்குவர்கள் பெருமைப்பட விரும்பினால் தபசு பிள்ளைக்கு கடியப்பட்டணத்தில் நினைவுச் சின்னம் அமைப்பது அவருக்கு அளிக்கப்படும்

மரியாதையாகவும், முக்குவர்களுக்கு கிடைக்கும் பெருமையாகவும் இருக்கும்.

மொழிபெயர்ப்பு நூல்களை மொழி பெயர்ப்பதற்கு சற்று பொறுமை தேவை. மொழிபெயர்த்த நூலை குறைந்தது மூன்று தடவையாவது அது சரியாக வந்திருக்கிறதா என்று வாசித்துப் பார்க்க வேண்டும். கதை ஓட்டத்தின் தொடர்ச்சி திருப்திகரமாக இருக்கிறதா என்பதனையும் நோக்க வேண்டும்.

அண்மையில், மலங்கரை கத்தோலிக்கப் பாதிரியார் பாரேம்மாக்கல் கொவர்ணதோர் எழுதிய, "ரோமாபுரி யாத்திரை" நூலை தமிழில் வாசிக்க நேர்ந்தது. அந்நூலை மலையாளத்தில் இருந்து தமிழில் யூமா வாசுகி மொழிபெயர்ப்பு செய்துள்ளார். மொழிபெயர்ப்பில் பயன்படுத்திய பல வார்த்தைகள் இந்து சமயத்தைச் சார்ந்தது. புரோகிதரின் உதவியாளர், புரோகிதத்திற்கான தட்சணை என்கிறார். பீலாத்தோசு, இயேசு மிசிகா, செமினாரி என எழுதியிருக்கிறார். நூல் வெளிவருவதற்கு முன்பாக கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்த ஒருவரிடம் விசாரித்து எழுதினால் அழகியத் தமிழில் அந்நூலை வெளிக்கொண்டு வந்திருக்க முடியும். பொறுமையின்மையே அதற்குக் காரணமாக இருக்கிறது.

வெளிநாட்டினரின் ஆங்கில நூல்களை மொழிபெயர்ப்பது சிரமமான வேலை. அதுவும் ஆவண வரலாற்று நூல்களை மொழி பெயர்ப்பது இன்னும் சிரமமான வேலைதான். அதைவிடவும் சம்பளம் இல்லாமல் மொழிபெயர்ப்பது என்பது தர்மச்சங்கடமான காரியம். இந்த நூலை இங்கிலாந்து நூலகத்தில் இருந்து பிரதி எடுத்திருக்கிறார்கள். ஆனால் இந்த நூலின் பிரதி கோட்டாறு ஆயர் இல்லத்தில் கிடக்கிறது. இருப்பினும் தமிழில் வெளிவந்த இந்த நூல் ஏதோ ஒருவகையில் குமரியில் பெரியளவில் ஓர் தாக்கத்தை உருவாக்கி இருக்கிறது என்பது உண்மை. அதனால், இந்த நூலை வெளிக்கொண்டு வர முயற்சி எடுத்த நபர்களைப் பாராட்டுகிறேன்.

இருப்பினும், மார்க் டி லெனாய் எழுதிய இந்த நூலை தமிழில் வெளிக் கொண்டுவர முயன்ற நபர்களுக்கு அந்நூல் மீது நம்பிக்கை இல்லாமல் போய்விட்டது. இதைத்தான் கோட்டாறு மறைமாவட்டமும் சொல்கிறது. "இந்த எழுத்தாளர் நிறைய வரலாற்று விவரங்களை டச்சுவின் ஆதாரங்களின் அடிப்படையில் தந்துள்ள நிலையில் அதனை

பல இந்திய வரலாற்று ஆய்வாளர்கள் ஆலோசனைகூட செய்யவில்லை" என்கிறது. கோட்டாறு மறைமாவட்டம் சொல்வது உண்மையாக இருப்பதற்கு வாய்ப்பில்லை. ஏனெனில், இந்த நூல் வாசகர்களின் கண்களில் இதுநாள் வரை படவில்லை என்பதுதான் உண்மை. அதனால்தான் பல கற்பனைக் கதைகள் தொடர்ந்து உருவாக்கப்பட்டன. அதன் தொடர்ச்சியாக, "It is Nilakandan who 'dragged' De Lannoy to Marthanda Varma" என்கிறது கோட்டாறு மறைமாவட்டம். அதாவது, "டி லெனாயை மார்த்தாண்ட வர்மாவிடம் நீலகண்டன் இழுத்துவந்தார்" என்கிற கதையை உரோமிற்கு மெய்ப்பிக்க முயலுகிறது. அதன்மூலம் தேவசகாயம் பிள்ளைக்கு புனிதர் பட்டம் கிடைக்க யாசிக்கிறது.

இதனைத்தான், "குளச்சல் போர்" நூல் வெளிவருவதற்குக் காரண கர்த்தாவாக இருந்த என்.டி. தினகர், "ஆரம்ப காலகட்டத்தில் ஐரோப்பியர்களின் பீரங்கிகளைக் கண்டு பயந்த உள்ளூர் மன்னர்கள் பனந்தடிகளை பீரங்கிகளைப்போல் சாய்வாக வைத்து ஏமாற்றி இருந்திருக்கலாம்" என்கிறார். பனந்தடிகளை திருவிதாங்கினர் குளச்சல் கடற்கரையில் வைத்தார்கள். அப்படி என்றால் குளச்சல் கடற்கரையில் டச்சுவின் கோட்டை இல்லை என்றாகி விடுகிறது. போர் கடலில் வைத்து நடந்தது அல்லது கடற்கரைக்கு அவர்கள் வந்து இறங்கியபோது நடந்தது என்றுதான் எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இதனை இன்னொரு வகையில் எடுத்துக் கொள்வதாக இருந்தால் என்.டி. தினகரின் நாடார் சாதிப் பாசம் அப்பட்டமாகவே வெளிப்படுகிறது.

நாடார்களுக்கு என வரலாறுகள் இருக்கிறது. பெருமைப்படுவதற்கு என வரலாற்றுச் சான்றுகளும் சரித்திரங்களும் இருக்கிறது. அதனை எல்லாம் விட்டுவிட்டு நேசமணி திருவிதாங்கூர் தமிழ்நாடு காங்கிரசை துவங்கினார். குளச்சல் போரில் டி லெனாயை அனந்தன் பத்மநாபன் கைது செய்தார் போன்ற பொய் வரலாறுகள் எழுதி நாடார் சாதியை இழிவுபடுத்த வேண்டாம் எனக் கருதுகிறேன். வரலாறை சாதி கடந்து வாசியுங்கள்; எழுதுங்கள். எல்லா சாதிகளும் 'மனிதம்' என்கிற சித்தாந்ததில் நிலைகொள்ள வேண்டும்.

என்.டி. தினகர் இன்னொரு கதையையும் கட்டவிழ்த்து விடுகிறார். "குளச்சல் போரின்போது தேங்காப்பட்டணத்தில் எதிரிகளை ஏமாற்றுவதற்காக திருவிதாங்கூர் படையினர் சில ஏமாற்று

வேலைகளை செய்திருந்ததாக டச்சு தரப்பினர் பதிவு செய்திருப்பதால், பனந்தடிகள் தேங்காப்பட்டணம் கடற்கரையில் வைக்கப்பட்டு இருக்கலாம்" என்கிறார். அதாவது, பனந்தடிகள் குளச்சலில் மட்டுமல்ல; தேங்காப்பட்டணத்திலும் வைக்கப்பட்டுள்ளது. இதன்மூலம் ஆய்வாளர் மார்க் டி லெனாய் தூக்கில் செத்து விட்டார் அல்லது இந்நூலை தமிழில் கொண்டு வந்தவர்கள் தூக்கில் செத்து விட்டார்கள் என்றுதான் எடுத்துக் கொள்ள வேண்டும்.

இவர்கள் கதையை நம்புகிறார்களா அல்லது ஆய்வினை நம்புகிறார்களா என்றால் இவர்கள் இன்னும் கதையைத்தான் நம்பிக் கொண்டு இருக்கிறார்கள். அதனைத்தான் இன்னும் இரசித்துக் கொண்டு நிற்கிறார்கள். அவர்களால் அக்கதையில் இருந்து வெளிவர முடியவில்லை. அவ்வகையில் இவர்களின் அறிவு மழுங்கடிக்கப் பட்டிருக்கிறது.

தோப்பில் முகம்மது மீரான் எழுதிய, 'சாய்வு நாற்காலி' நாவல் தென்பத்தன் ஊரைக் குறித்துப் பேசுகிறது. தென்பத்தன் என்றால் தேங்காப்பட்டணம். நூலை எழுதிய அவர், அதே தேங்காப்பட்டணம் ஊரைச் சார்ந்தவர். இந்நூலுக்கு சாகித்திய அகாதமி விருது கொடுக்கப்பட்டுள்ளது. அந்நூலில்:

"இலங்கைக்கு வந்த டச்சுக்காரர்கள் திருவிதாங்கூரை நோக்கி கடல் வழியாகப் படை எடுத்தனர். திருவிதாங்கூர் துறைமுக நகரங்களான குளச்சலையும் தென்பத்தனையும் முதலில் ஆக்கிரமித்தனர். கடலில் இருந்து தென்பத்தன் துறைமுகத்தை குறி வைத்தபோது துறைமுகத்தில் யானைப்படை அணிவகுத்து நிற்பதைக் கண்டனர். உடனே கடலிலிருந்து பீரங்கிக் குண்டுகளால் கரையை குறிவைத்து சுட்டனர்".

"யானைப்படை அசையவில்லை. மிரண்டு ஓடவுமில்லை. டச்சுக்காரர்கள் விடுவதாகவும் இல்லை. மீண்டும் மீண்டும் சரமாரியாக சுட்டனர். யானைப்படை சிதறி ஓடாததைக் கண்டு எதிரிகள் வியப்போடு கரையை நோக்கி நகர்ந்தனர். கரையை அடைந்த பிறகுதான் உண்மை தெரியவந்தது. பீரங்கியால் சுட்டது யானைப்படை மீதல்ல; வரிசையாக நிற்கும் கரும் பாறைகள் மீது என்று. தென்பத்தன் கிராமத்தின் கடற்கரைப் பகுதியிலுள்ள பாறைகளில் தென்படும் பெரிய துவாரங்கள் அன்று குண்டடிபட்ட அடையாளங்கள் ஆகும்."

இக்கதையைத்தான், 'ஆய்வு களஞ்சியம்' ஆசிரியரும், திருநயனார் குறிச்சியில் திருவள்ளுவர் பிறந்தார் என்பதனை தொடர்ந்து வலியுறுத்தி வரும் முனைவர் பத்மநாபன், "தேங்காப்பட்டினம் அருகே உள்ள பாறையை மீனவர்கள் ஒரு கப்பல்போல் அலங்கரித்து வைத்தனர். இதனை டச்சுப் படை வீரர்கள் போர்க் கப்பல் என்று நினைத்து பீரங்கியால் தாக்கியதில் தாங்கள் வைத்திருந்த குண்டுகளை தீர்த்துவிட்டனர். அந்த பாறையில் குண்டடிபட்ட இடங்களை இன்றும் நாம் காணலாம். அந்தப் பாறையை அவ்வட்டார மக்கள், 'உண்டையிட்டான் பாறை' (குண்டு அடிபட்ட பாறை) என்றுதான் அழைக்கிறார்கள்" என்கிறார். பாறையை கப்பலாக காட்டி ஏமாற்றிய கதையை என்.டி. தினகர் வாசிக்கவில்லை எனக் கருதுகிறேன். அவர் வாசித்து இருந்தால் இக்கதையையும் பனைமரப் பீரங்கிக் கதைக்கு வலுவூட்ட ஆதாரமாக எடுத்திருக்கக்கூடும்.

தோப்பில் முகம்மது மீரான் மேற்படி கதையை இவ்வாறு தொடர்கிறார்: "கரை இறங்கிய டச்சு இராணுவம் தென்பத்தன் கிராமத்தை முற்றுகையிட்டது. டச்சுப் படையெடுப்பை கேள்வியுற்றதும் திருவிதாங்கூர் நாயர் படை விரைந்து வந்தது. நாயர் படைக்கு தலைமை ஏற்றது செண்பகராமன் மார்த்தாண்டன். தென்பத்தன் மக்களும் தலைப்பாகை கட்டிக் கொண்டு வாளேந்தி நாயர் படையுடன் இணைந்தனர். மூன்றாம் வேதக்காரரும் அந்நிய நாட்டவருமான டச்சுக்காரர்களை எதிர்த்தனர். கடும்போர் மூண்டது. பலர் மாண்டனர். டச்சு இராணுவம் தோல்வியுற்றுப் பின்வாங்கி ஓடத் தொடங்கியது. நாயர் படை துரத்திப் பிடித்தது. கைதிகளாகப் பிடிபட்டவர்களில் திறமை வாய்ந்த இரு இராணுவத் தளபதிகளும் இருந்தனர். டிலனாயும் டொனடியும்".

டச்சுப்படை எங்கே வைத்து வீழ்த்தப்பட்டது என்றால் குளச்சலில் அல்ல; தேங்காய்ப்பட்டணத்தில்... டி லெனாய் எங்கே வைத்து கைது செய்யப்பட்டார் என்றால் குளச்சலில் அல்ல; தேங்காய்ப் பட்டணத்தில்... மேற்படி போரில் முசுலிம்களுக்கு முக்கிய பங்கு உண்டு என்பதில் முசுலிம் சாதிப் பாசம் தோப்பில் முகம்மது மீரானை பேய்க் கதைபோல் விடாது துரத்தத்தான் செய்கிறது.

"அன்றைய போரில் முசுலிம்கள் வீர மரணமடைந்தனர். தென்பத்தன் மக்களை அந்நிய ஆக்கிரமிப்பாளருக்கு எதிராகப் படை திரட்டியவர் முசுதபாக்கண்ணின் முப்பாட்டனார் பவுரீன் பிள்ளை. பவுரீன்

பிள்ளையின் தேசப்பற்றையும் யுத்த சேவையையும் எண்ணி சிறி பத்மநாபதாச வஞ்சிபால மார்த்தாண்ட வர்மா குலசேகரப் பெருமாள், பவுரீன் பிள்ளையை அரண்மனைக்கு அழைத்து வரச் சொன்னார். வெள்ளித் தாம்பாளத்தில் பட்டும் வெள்ளிப் பிடியுள்ள ஒரு வாளும் பரிசாகக் கொடுத்தார். சந்ததி பரம்பரை ஆசந்திரதாரம் வாழ்ந்து அனுபவிக்க கரமொழிவாக்கி கள்ளன் குருசடிவர் முதல் கலிங்கராசபுரம் வரையுள்ள இடத்தை மண்ணடங்க மரமடங்க வழங்கினார். அத்துடன் இரவு தலை சாய்க்கத் தென்பத்தனில் அரண்மனைபோல் ஒரு வீடும்" கொடுத்தார்.

"உதயகிரி கோட்டைக்குள் டச்சுப் படைத் தளபதிகளை சிறை வைத்திருந்தார் மார்த்தாண்ட வர்மா. திருவிதாங்கூர் படைக்கு இராணுவ பயிற்சியளிக்க அந்தத் தளபதிகளின் விருப்பம் கேட்டறிந்து வர பவுரீன் பிள்ளையை உதயகிரி கோட்டைக்கு அனுப்பி வைத்தார் மன்னர் பெருமாள். டச்சுத் தளபதிகள், திருவிதங்கூர் படைக்கு இராணுவ பயிற்சி அளிக்கவும் படைக்கு தலைமை ஏற்று திருவிதாங்கூருக்கு சேவை புரியவும் பவுரீன் பிள்ளையிடம் ஒப்புக் கொடுத்தனர்".

இந்த பவுரீன் பிள்ளை சாதாரணமானவர் அல்ல. மார்த்தாண்ட வர்மாவை கொலை செய்து ஆட்சியை கைப்பற்ற பப்பு தம்பியும், இராமன் தம்பியும் முயன்றபோது அவருடைய வீட்டில் மார்த்தாண்ட வர்மாவுக்கு அடைக்கலம் கொடுத்து காப்பாற்றியவர். "எட்டு வீட்டுப் பிள்ளைகளோ, பப்பு தம்பியோ, இராமன் தம்பியோ குழப்பங்கள் விளைவித்தால் குழப்பவாதிகளை அடக்குவது பற்றி பவுரீன் பிள்ளையைக் கூப்பிட்டு மார்த்தாண்ட வர்மா பேசுவார்". மேலும் இவர்தான் பப்பு தம்பி மற்றும் இராமன் தம்பியின் தலையை வெட்டி தரையில் உருட்டியவர். "நாகர்கோவில் அரண்மனைக்குள் புகுந்து திடீர் தாக்குதல் நடத்தி அரசரை கொலை செய்ய வகுத்திருந்த திட்டமும் பவுரீன் பிள்ளையின் வாள் முனையில் தோல்வி கண்டது. அங்கேயே பப்புத் தம்பியும் இராமன் தம்பியும் பவுரீன் பிள்ளையின் வாளுக்கு இரையாயினர்". ஆம்! 'எல்லா புகழும் அல்லாவுக்கே!' என தோப்பில் முகம்மது மீரான் அவருடைய குரலை உயர்த்தி எழுப்பினாலும், நடுநிலையான வாசகர்கள் அதனை அவ்வாறு எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.

இப்படி கதை எழுதிய தோப்பில் முகம்மது மீரான், என்னுரையில்

ஒரு செய்தியைச் சொல்கிறார். முதலாவதாக, "தென்பத்தன் மக்களின் வாழ்க்கையைத் திருவிதாங்கூர் வரலாற்றிலிருந்து பிரித்துப் பேச முடியாது என்பதால் சில வரலாற்று நிகழ்ச்சிகள் இதில் நரம்போடுகிறது" என்கிறார். இரண்டாவதாக, "சொல்லப்பட்டவற்றில் கற்பனைகள் பல கலந்திருப்பதால் எக்காரணத்தாலும் வரலாறு பேசுபவர்களுக்கு இது சான்றாதாரமாகாது" என்கிறார்.

'கரகாட்டக்காரன்' திரைப்படத்தில், இன்னொரு பழம் எங்கே என கவுண்டமணி கேட்டபோது, 'இன்னொண்ணுதான் இது' என்று செந்தில் பேசிய நகைச்சுவை உங்களுக்கு ஞாபகத்திற்கு வருகிறது என்றால், 'இன்னொண்ணுதான் இது' என்பதனை புரிந்து கொள்ளலாம். அதன்மூலம் இக்கதையை எப்படி எடுத்துக் கொள்வது என்பதில் வாசகர்களாகிய நீங்கள் குழப்பம் அடைய மாட்டீர்கள் எனக் கருதுகிறேன். வாசகர்கள், இப்படிப்பட்ட சாகித்திய அகாதமி விருதுபெற்ற கதைகளிலிருந்து கடந்து செல்வதே வரலாறை அறிய உதவும் என்பதனை அறிந்து கொள்ள வேண்டும்.

ஆன்றனி கிளார்ட், என்.டி. தினகர் மற்றும் ஆர். பிரேம்குமார் ஆகியோர் எழுதிய, "குளச்சல் போர்" நூலானது மார்க் டி லெனாயின் ஆவண ஆய்வினை சீர்தூக்கிப் பார்க்கவில்லை. மார்க் டி லெனாயின் ஆய்வின் உண்மைத் தன்மையை அவர்கள் உணரவில்லை. அவ்வாறு உணராமல் போனது மார்க் டி லெனாயின் தவறல்ல; அதனை தமிழில் நூலாக்கியவர்களின் தவறு.

மார்க் டி லெனாயின் ஆய்வுகளை கத்தோலிக்கப் பாதிரியார் ஆன்றனி கிளார்ட் நகல் எடுத்து எழுதியிருப்பதால் அவருடைய பதிவில் இருந்து விமர்சிப்பதற்கு எதுவும் இல்லை. அவரே சொல்கிறார், "இக்கட்டுரையில் பயன்படுத்தப்பட்டுள்ள தரவுகள் அனைத்தும் மார்க் டி லெனாய் எழுதிய தி குலசேகரப் பெருமாள் ஆப் திருவிதாங்கூர் (1997) என்கிற நூலிலிருந்து திரட்டப்பட்டவை" என்கிறார். அவர் சொல்லியிருப்பதை அப்படியே காப்பி அடித்து ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அக்கட்டுரையில், முக்குவர்கள் அனைவரும் மன்னரின் விசுவாசிகள் என்கிற நம்பகத்தன்மையை அதிகப்படியாகவே மெருகேற்றி இருக்கிறார். அந்த விசுவாசம் கொஞ்சமும் மாறாமல் கத்தோலிக்கப் பாதிரியார்களின் அடிமை நிலைக்கு கத்தோலிக்க முக்குவர்கள் சென்றிருப்பதனை இன்றும் கண்கூடாகப் பார்க்கலாம்.

முக்குவர்களின் பெருமை குறித்து, “பறங்கிகளின் படைகளுடன் தொளவைகளும் சேர்ந்ததடி, பாருயர்ந்து நிற்குது காண் குருசணிந்த கோபுரங்கள்! தளபதியின் கல்லறையில் கல்குருசை நட்டு வைத்தார். கள்ளங் குரியடி பார் காலங்களைக் கடக்கிறது. டச்சுகளின் தளபதியார் டி லெனாயைச் சிறையெடுத்தார். மச்சம் பிடிக்கின்ற மாவீரர் பரம்பரையர். நடுக்கடலில் சமர்நடத்தி நெடுங்கலங்கள் மூழ்கடித்தார்; நிமிர்ந்தெழுந்து நிற்கின்ற குளச்சல் தூண் ஆதாரம்” என கத்தோலிக்கப் பாதிரியார் ஆன்றனி கிளாரட், “கள்ளங் குரியடி” என்கிற கவிதை வாயிலாக ஏற்கனவே எழுதியிருக்கிறார். மார்க் டி லெனாய் நூலை வாசித்த பின்பாக, முக்குவர்களின் தொளவைகளும் சேர்ந்து நடுக்கடலில் படகுகளை மூழ்கடித்தது தவறென அவர் பரிகாரம் தேடியிருக்கிறார்; பவமன்னிப்பு கோரியிருக்கிறார் என்பதால், ‘தப்பித்தலென்பது வாய்க்கப் போவதில்லை” என்கிற கவிஞர் சீவாவின் கூற்று இங்கு மரணத்தைத் தழுவியிருக்கிறது.

குளச்சலில் டச்சுவின் கோட்டை இருந்தது, அது தகர்க்கப்பட்டது என்கிற செய்தியை குளச்சல் வரதராசனின், “குளச்சல் ஓர் வரலாற்று ஆய்வு” நூல் வெளிப்படுத்துகிறது. இந்நூல் 2005-இல், ‘ஆராய்ச்சி மணி இயக்கம்’ குளச்சலில் வைத்து வெளியிட்டுள்ளது. “வான் இம்கோப்பின் கட்டளைப்படி இலங்கையிலிருந்து புறப்பட்ட டச்சுப்படை குளச்சலில் இறங்கியது. இங்கு இறங்கியதும் சுற்றிலுமுள்ள கிராமங்களைக் கொள்ளையடித்தும் இங்கிருந்த திருவிதாங்கூரின் சிறுபடையை ஆக்கிரமிக்கவும் செய்தனர். மரத்தினால் துறைமுகத்தில் ஒரு கோட்டை கட்டி பாதுகாப்பாக படையை நிறுத்தினர்... செய்தி அறிந்த மார்த்தாண்ட வர்மா, காயங்குளத்தில் இருந்து இராமையன் படையை உடனே திரும்பிவரக் கூறினார்”. ஒரு கோட்டை குளச்சல் கடற்கரையில் இருந்தது என்கிற செய்தியை குளச்சல் வரதராசன் எழுதியிருப்பது ஆச்சரியமளிக்கிறது.

இனி மார்க் டி லெனாயின் ஆய்வுக்குள்....

மார்க் டி லெனாய், ‘தி குலசேகரப் பெருமாள் ஆப் திருவிதாங்கூர்” என்கிற தலைப்பில் நெதர்லாந்து, பிரான்சு, இங்கிலாந்து மற்றும் இந்தியா ஆகிய நாடுகளுக்குப் பயணப்பட்டு அங்குள்ள ஆவணங்களின் அடிப்படையில் அவருடைய முனைவர் பட்ட ஆய்வினை நெதர்லாந்தில் உள்ள லெய்டன் பல்கலைக் கழகத்தில் சமர்ப்பித்திருக்கிறார். அது நூலாக 1997-இல் வெளிவந்துள்ளது.

மார்க் டி லெனாயின் நூலினை என்.டி. தினகர் சாதாரணமாக எடுத்துக் கொண்டதுபோல், கோட்டாறு மறைமாவட்டம் விளையாட்டுத் தனமாக எடுத்துக் கொண்டதுபோல், வரலாற்று ஆய்வாளர்கள் இனி அதனை சுலபமாக எடுத்துக்கொள்ளப் போவதில்லை. ஏனெனில் அவர் பல ஆவணங்களை எடுத்துக் கையாண்டுள்ளார். இவ்வாறு எவரும் ஆவணங்களின் அடிப்படையில், 'குளச்சல் போர்' குறித்து நூல் எழுதியதில்லை. அதனால் இனி வரும் காலங்களில் மார்க் டி லெனாய் தொடர்ந்து பேசப்படுவார்.

மார்க் டி லெனாய், 'குளச்சல் போர்' குறித்து விலாவாரியாகவே எழுதியிருக்கிறார். அவரின் நூல் சாதி குண்டர்களின் தூக்கத்தை கலைத்துப் போட்டிருக்கிறது. தொடர்ந்து கதைகள் எழுதிக் கொண்டிருக்க முடியாது என்கிற உண்மையை வெளிப்படுத்தி இருக்கிறது. குளச்சல் வெற்றிக்கு மிக முக்கிய காரணகர்த்தா டியூவன்சாட் ஆவார். அவரைக் குறித்து அதிகமாகப் பேசப்படாமல் குளச்சல் போருக்கு எந்தவித சம்பந்தமும் இல்லாத எசுதாக்கி டி லெனாய் ஏன் அதிகமாகப் பேசப்படுகிறார் என்றால் கற்பனைக் குதிரைகளின் வேகம் துப்பாக்கிகளில் இருந்து வெளிவரும் குண்டுகளைப்போல் அதிவேகமாக வெளியேறி இருக்கிறது.

"பிதா, சுதன், பரிசுத்த ஆவி ஆகிய மூன்றுபேரும் ஒரே வல்லமை, ஒரே ஞானம் பெற்றிருப்பதால் ஒரே கடவுள்" என்கிற வேத முரண்பாட்டை எப்படி மாற்றிக்கொள்ள முடியாதோ, அப்படியே துப்பாக்கியில் இருந்து வெளியேறிய பொய் குண்டுகளை மீண்டும் எடுத்துக் கொள்ள அவர்களால் முடியாது. அது பலகீனமான இதயத்தை உடையவர்களுக்கு சிக்கலை உருவாக்கும். ஆகவே, கட்டுக் கதைகளின் நிழலில் தூங்கி, காலத்தைக் கடத்திடவே பலர் விரும்புவர். தேவசகாயம் பிள்ளை குறித்து இதுவரை 500-க்கு மேற்பட்ட நூல்கள் வெளிவந்து விட்டன. அதில் பெரும்பாலான நூல்களில் எசுதாக்கி டி லெனாயை தேவசகாயம் பிள்ளை இழுத்து வந்தார் என்கிற பொய் வரலாறுகள் புனையப்பட்டுள்ளன.

தேவசகாயம் பிள்ளையை எப்படி ஊதி ஊதி பெரிது படுத்தினார்களோ அவ்வாறே எசுதாக்கி டி லெனாயை ஊதி ஊதி பெரிதுபடுத்தி விட்டனர். இவர்கள் இரண்டு பேரும் கத்தோலிக்கக் கிறித்தவர்கள். இவர்களில் தேவசகாயம் பிள்ளை பிரபலமாகப் பேசப்படுகிறார். அவருக்கு உரோமிலுள்ள கத்தோலிக்க தலைமை பீடம் முக்திபேறு

பட்டம் வழங்கி சிறப்பித்து இருக்கிறது. இப்பொழுது அவருக்கு புனிதர் பட்டம் வழங்கக் கேட்டு உரோமிற்கு கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறார்கள்.

வாசுதேவன் நம்பூதிரி என்கிற பிராமணருக்கும் தேவகியம்மை என்கிற நாயருக்கும், 'நீலம்' என்கிற ஆண் குழந்தையும், லெட்சுமி குட்டி என்கிற பெண் குழந்தையும் பிறந்தார்கள். நீலன் என்கிற பெயர் பின்னாளில், 'நீலகண்டன்' என நீண்டதாகக் கதை சொல்கிறார்கள். நீலம், நீலகண்டன் ஆகிய பெயர்கள் கடவுள் சிவனின் பெயர்கள்.

வடக்கன்குளம் கத்தோலிக்க ஆலயத்திற்குள் சாதிச் சுவர் கட்டி மக்களை கூறுபோட்டு வைத்திருந்தனர் சாதி வெறியர்கள். இதனை, 'கால் சட்டை ஆலயம்' என்று விசித்திரமாக அழைப்பதுண்டு. அந்த ஆலயத்தில் வைத்து சேசு சபையைச் சார்ந்த புத்தாரி பாதிரியார், திரேசம்மா பெயரில் தேவகியம்மைக்கும் தேவசகாயம் பெயரில் நீலகண்டனுக்கும் திருமுழுக்கு வழங்கியதாக கதைகள் சொல்லப் படுகிறது. கத்தோலிக்கர்கள், பீட்டரை இராயப்பர் என்றும், பவுலை சின்னப்பர் என்றும், சாணை அருளப்பர் என்றும், யோசப்பை வளனார் என்றும், லாசரை தேவசகாயம் என்றும் அழைக்கிறார்கள். இந்நிலையில், 'தேவசகாயம்' எப்படி 'தேவசகாயம் பிள்ளை' ஆனார் என்கிற கேள்வி இயற்கையாகவே வாசகர்களுக்குள் வாசம் செய்யக்கூடும்.

பப்புத் தம்பி, இராமன் தம்பி ஆகியோர் வாரிசுரிமை கேட்டு போராடி வருகிறார்கள். அவர்களுக்கு எட்டுவீட்டுப் பிள்ளைமார் ஆதரவு அளிக்கிறார்கள். அவர்கள்: கழகக்கூட்டத்துப் பிள்ளை, இராமதோன் பிள்ளை, செம்பழனாட்டி பிள்ளை, குடமன் பிள்ளை, வெங்கனூர் பிள்ளை, மார்த்தாண்ட மனோதர்மம் பிள்ளை, பானிச்சல் பிள்ளை மற்றும் குளோத்தூர் பிள்ளை. நீலம் என்பவருக்கோ அல்லது நீலகண்டன் என்பவருக்கோ பிள்ளை அடைமொழி சேர்க்கப்படவில்லை.

இதனை இன்னொரு வகையில் பார்த்தோம் என்றால் வாசுதேவ நம்பூதிரி கீழ்சாந்தி உதவிப் பூசாரியாக இருந்தவர். அதாவது, மேல்சாந்தி பூசாரியாக அல்ல. இந்த ஆலயத்தில் மட்டும் சுமார் நூற்றுக்கணக்கான கீழ்சாந்தி பூசாரிகள் இருந்துள்ளனர். அதில் ஒருவரின் மகன்தான் நீலகண்டன், அதாவது தேவசகாயம்.

அக்காலத்தில், நம்பூதிரி பிராமணர்களின் மூத்த மகன் அதே வகுப்பில் உள்ள பெண்ணுடன் மட்டுமே திருமணம் செய்ய முடியும். அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைக்கு எல்லாவிதமான உரிமைகளும் உண்டு. மேலும், 'தந்தை' என கூறிக் கொள்ளும் பெருமையும், கொள்ளி வைக்கும் உரிமையும் உண்டு.

அதேவேளையில், அதே நம்பூதிரி பிராமணர்களின் இரண்டாவது மூன்றாவது மகன்கள் அதே இனத்தில் பெண்களை திருமணம் செய்யக்கூடாது. இதனால் நம்பூதிரிப் பெண்கள் பலர் திருமணம் ஆகாமல் கன்னியாகவே இருந்தனர். இதுசார்ந்த விழிப்புணர்வு 1900-க்குப் பின்பாக ஏற்பட்டது. இவர்கள் சம்பந்தம் முறையில் நாயர் பெண்களை இணைத்துக் கொண்டனர். நீலகண்டன் பிராமண குடும்பத்தில் பிறந்திருந்தால் அவர் கண்டிப்பாக நாயர் பெண்ணைத் திருமணம் செய்வதற்கு வாய்ப்பு இல்லை.

"நீலகண்டன் ஓர் இந்து நாயர்" என மார்த்தாண்டம் கிறித்தவக் கல்லூரி வரலாற்றுப் பேராசிரியர் முனைவர் இராசதங்கம், 'கேப்டன் டி லெனாய் மற்றும் திருவாங்கூர்' என்கிற ஆங்கில நூலில் குறிப்பிடுகிறார். "இவருடைய குடும்பம், இவருடைய குடும்பத் தெய்வமான பத்திரகாளி அம்மனின் கோபத்திற்கு ஆளானார்" என மாதவடியான், 'தேவசகாயம் பிள்ளை சரித்திரம்' என்கிற மலையாள நூலில் குறிப்பிடுகிறார். பிராமணர்கள், கடவுள் சிவன் மற்றும் கடவுள் விசுணுவை வழிபடக்கூடியவர்கள்.

கே.பி. வரதராசன் கூறுவதுபோல், நாயர்களே சூத்திரர்கள் என்கிற பதிவுகளும் ஆங்காங்கே இருக்கத்தான் செய்கிறது. வர்ணாசிரமத்தை வலியுறுத்தும் மனுதர்ம சாத்திரம் 10-வது அதிகாரத்தில் எந்தெந்த சாதிகள் யார் யாருடன் உறவு கொள்ளலாம் என்பது குறித்து, 'சங்கர சாதி' என்கிற தலைப்பில் பேசுகிறது. அனுலோம சாதி, பிரதிலோம சாதி, அந்தராள சாதி, விராத்திய சாதி மற்றும் பாக்கிய சாதி என ஐந்து சாதிப் பிரிவுகள் இருக்கிறது. அனுலோம சாதிப் பிரிவில் ஒரு பிராமணருக்கும் (வாசுதேவ நம்பூதிரிக்கும்) ஒரு சூத்திர குலப் பெண்ணுக்கும் (தேவகியம்மாளுக்கும்) பிறக்கும் ஆண் மகனுக்கு (தேவசகாயம் பிள்ளைக்கு) 'நிசாதன்' எனப் பெயர். அதற்குப் பாராசவம் என்று அர்த்தம். அதாவது, 'எந்த சாதியையும் சாராதவர்'. இதன்மூலம் நீலகண்டன் எந்த சாதியையும் சாராதவர் ஆகிறார்.

மனுதர்ம சாத்திரத்தின், 'எடுகூறு' தலைப்பின் 155-வது விதியில் ஒரு பிராமணருக்கும் ஒரு சூத்திரப் பெண்ணிற்கும் பிறக்கும் மகனுக்கு சொத்தில் பத்தில் ஒரு பங்கு என்றே குறிப்பிடுகிறது. நாயர்கள், நம்பூதிரிகளுடன் அதிகத் தொடர்பு கொண்டிருந்தாலும் அவர்கள் மீன் மற்றும் இறைச்சி சாப்பிடக்கூடிய அசைவப் பிரியர்கள்.

நாயர்கள், நாக வழிபாட்டுக்காரரர்கள். விவிலியத்தில் ஆதாம் ஏவாளை ஏமாற்றியதாகக் கூறுவது இந்த நாகம்தான். இந்த நாகம்தான் மனிதரின் அறிவுக் கண்ணைத் திறந்த முதல் தகப்பன் என கிறித்தவ முற்போக்குவாதிகள் குறிப்பிடுகிறார்கள். இந்த நாகம்தான் காமம் என்கிற அற்புத சக்தியை மனிதர்களுக்கு வழங்கி இனப் பெருக்கத்தை உருவாக்கியதாக கிறித்தவக் கற்புக்கரசர்கள் பாடம் எடுக்கிறார்கள். இந்த நாக வம்சத்தைச் சார்ந்த நீலகண்டன் என்கிற தேவசாகாயம் கிறித்தவத்தை தழுவியதில் விசித்திரம் ஒன்றுமே இல்லை.

நம்பூதிரி பிராமணர்கள் தங்களது ஆசைக் கிழத்திகளை அவர்களுக்கு விருப்பமான இனங்களில் தேர்ந்தெடுத்து, 'சம்பந்தமுறை' என வாழ்த்தி வந்தனர். இத்தகைய ஆண் பெண் உறவானது உறுதியானதாகவோ நிலைத்து இருந்ததாகவோ இல்லை. ஆண் விருப்பப்பட்ட இரவில் தங்கி காலையில் எழுந்து போவதும், இவர்களுக்குப் பிறக்கும் குழந்தை வளர்ப்பில் தாய்க்கு முழு உரிமையும் தாய் மாமனுக்கு குழந்தைகளை வளர்க்கும் கடமையும் இருந்தது (மருமக்கள் தாயம்).

நீலகண்டன் பிராமணராக இல்லாதபோது, நீலகண்டன் கத்தோலிக்க சமயத்திற்கு மாறியதற்காக மன்னர் தண்டித்தார் மற்றும் அவரை கொலை செய்ய உத்தரவு பிறப்பித்தார் என்பது இங்கு கேள்வியை எழுப்புகிறது. அப்படி என்றால் இவரோடு சிறையில் இருந்ததாகக் கூறப்படும் தொம்மன் திருமுத்து, கோட்டவிளை ஆசான், தொம்மை சின்னத்தம்பி, அண்ணாவி ஆகியோர் ஏன் கொலை செய்யப் படவில்லை. அவர்கள் எப்படி விடுதலை ஆனார்கள் என்கிற கேள்வியும் எழுகிறது.

டி லெனாய் என்கிற கத்தோலிக்க கிறித்தவர், திருவிதாங்கூர் அரச பரம்பரைக்கு விசுவாசமாக இருந்துள்ளார். அவர் தங்குவதற்கு வசதியாக உதயகிரி கோட்டை வழங்கப்பட்டுள்ளது. அதற்குள்ளே ஓர் கத்தோலிக்க ஆலயமும் கட்டுவதற்கு மன்னர் அனுமதி கொடுத்துள்ளார். இவர் கிறித்தவர் என மன்னர் இவரை வெறுத்து

ஒதுக்கவில்லை. டி லெனாயின் மகன் யோகனான் டி லெனாய் திருவிதாங்கூர் மன்னர் படையில் பணியாற்றி தன் உயிரினை மாய்த்தவர். தேவசகாயமும், எசுதாக்கி டி லெனாயும் மிக நெருங்கிய நண்பர்கள் என்றால் அவரைக் காப்பாற்ற டி லெனாய் முயற்சி எடுத்திருப்பார். ஒரு நண்பரின் உயிரினை காப்பாற்ற முடியாதவரை, 'வலிய கப்பித்தான்' என அழைப்பதில் எந்தவித நன்மையும் இல்லை. இதே இடத்தில் நீலகண்டனின் நண்பராக டியூவன்சாட் இருந்திருந்தால் நிலைமை வித்தியாசமாக இருந்திருக்கும்.

டச்சுவுக்கும் திருவிதாங்கூருக்கும் அமைதிப் பேச்சுவார்த்தையில் டச்சுத் தளபதி கொல்லேநெசே, கிறித்தவர்கள் வசிக்கும் பகுதிகளை டச்சுவின் கட்டுப்பாட்டில் விட்டுவிட வேண்டும் என்கிற கோரிக்கையை முன்வைத்தார். அதற்கு மன்னர் மார்த்தாண்ட வர்மா மறுப்பு தெரிவித்தார். இதனை மார்க் டி லெனாய், "கிறித்தவர்கள்மீது டச்சு அடையாளம் காணும் எல்கையை மன்னர் மறுத்துவிட்டார். அவர்கள் அவருடைய குடிமகன்கள் மட்டுமின்றி, அவர்கள் பிராமணர்களின் கோவில் குடிமக்களும் ஆவர். அவர்களைக் குறித்துப் பேச டச்சுவுக்கு எதுவும் இல்லை" என்கிறார். இவ்விசயத்தில், மார்த்தாண்ட வர்மாவின் ஆழமான சிந்தனைப் போக்கு கூர்ந்து நோக்கத்தக்கது.

இன்றைக்கும் இந்து ஆலயங்களில் உள்ள வருமானம் அரசின் கசனாவுக்குச் செல்கிறது. சிறுபான்மையினரின் ஆலயங்களிலும், மசூதிகளிலும் உள்ள வருமானம் அரசுக்குச் செல்வதில்லை. அரசு பல சலுகைகளை சிறுபான்மையினருக்கு வழங்குகிறது. பல்வேறு நலத் திட்டங்களை சாதி, மதம் கடந்து நடைமுறைப்படுத்துகிறது. எருசலேம் ஆலயத்திற்கும், மெக்காவுக்கும் பயணம் போவதற்கு வழங்கப்படும் பணம் அதிகபட்சமாக இந்துக்களின் பணம்தான் என்றால் மிகையாகாது. ஏனெனில் பிற சமயத்தைச் சார்ந்தவர்கள் இந்த தேசத்தின் குடிமக்கள் மட்டுமின்றி, இந்துக் கோவில் குடிமக்களும் ஆவர். அதனால்தான் இந்து கோவில்களின் வருமானம் நாட்டின் செலவீனத்திற்காகவும், மக்களின் நலத் திட்டங்களுக்காகவும் எடுத்துக் கொள்ளப்படுகிறது. இங்கே சிறுபான்மையினர் இரட்டை உரிமைகளை அனுபவித்து வருகிறார்கள். இது இந்துக்களின் தேசம் என்பதில் கிறித்தவர்களும் முசுலிம்களும் பெருமைப்பட வேண்டும்.

வாசுதேவன் நம்பூதிரி என்பவர் நாயர் பெண்ணை திருமணம் செய்து கொண்டதால் பிள்ளை அடைமொழி கொடுக்கலாம் என்கிற

வாதப்போக்கு கலகம் செய்கிறது. ‘தேவசகாயம்’ என்கிற பெயரில் திருமுழுக்கு பெற்ற ஒருவருக்கு, ‘தேவசகாயம் பிள்ளை’ என்கிற பெயரில் புனிதர் பட்டம் வழங்க வேண்டும் என கோரிக்கை வைப்பது சமய நல்லிணக்கக் களத்தில் குழப்பத்தைத் தருவிக்கக்கூடும்.

தேவசகாயத்தை பிரபலப்படுத்துவதற்கு வசதியாக போரில் பலரைக் கொன்றுகுவித்த எசுதாக்கி டி லெனாய் என்பவர் கத்தோலிக்கத் திருச்சபைக்குத் தேவைப்படுகிறார். அதேவேளையில், குளச்சல் போரில் எசுதாக்கி டி லெனாயை தேவசகாயம் இழுத்து வந்தார் என்கிற பொய் கதை கத்தோலிக்கத் திருச்சபைக்குத் தேவையில்லை. இருப்பினும், அதிலிருந்து பின்வாங்க கத்தோலிக்கத் திருச்சபை ஒருபோதும் விரும்பாது.

உண்மை வரலாற்றை குறித்து ஆய்வு மேற்கொள்ளும் ஆய்வாளர்களுக்கு தேவசகாயம் குறித்த நூல்கள் எதுவும் பயன்படாது. அதேவேளையில் எசுதாக்கி டி லெனாய் மிகவும் பிரபலமானதற்கு இப்படிப்பட்ட பொய் கதையும் ஒரு காரணமாகும். இந்த பொய் கதையிலிருந்துதான் ஒவ்வொரு சாதியினரும் போட்டி போட்டுகொண்டு டி லெனாயை அவரவர் சாதிக்காரரர் இழுத்து வந்ததாக கதை எழுதுகிறார்கள்.

எசுதாக்கி டி லெனாய் ஆகத்து மாதம் **2, 1741** அன்று கன்னியாகுமரி டச்சு கோட்டையிலிருந்து தப்பி ஓடிவிட்டார். அவரோடு இன்னும் சிலரும் ஓடிவிட்டனர். எசுதாக்கி டி லெனாய் என்பவர் கிறித்தவர்களின் கத்தோலிக்கப் பிரிவைச் சார்ந்தவர். டச்சுப்படை, சீர்திருத்த சபைப் பிரிவினரின் நிர்வாகத்தின் கீழும், அவர்களுடைய கட்டுப்பாட்டின் கீழும் இருந்தது.

பல்வேறு கிறித்தவப் பிரிவுகளைச் சார்ந்த ஐரோப்பியர்கள், சம்பள ஒப்பந்தத்தின் அடிப்படையில் டச்சுவிடம் வேலை செய்தார்கள். அவ்வாறு வேலை செய்ய சென்றவர்களுக்கு இரண்டு குறைபாடுகள் இருந்தன. முதலாவதாக, அவர்களுக்கு கொடுப்பதாக பேசப்பட்ட சம்பளமானது சரியான நேரத்தில் பட்டுவாடா செய்யப்படவில்லை. இரண்டாவதாக, படை அதிகாரிகள் அவர்களை சரியான முறையில் நடத்தவில்லை; மதிக்கவில்லை. அதனைவிட அதிக சம்பளமும், மரியாதையும் எதிரிகளிடம் சரணடைந்தால் கிடைக்கும் என்பதால் இவர்கள் டச்சுப் படையிலிருந்து ஓடுகாலிகளாக ஓடி எதிரியாகிய மார்த்தாண்ட வர்மாவிடம் சரணடைந்தனர்.

எதிரியிடம் சரண் அடைந்தவர்கள் சிறையிலிருந்து தப்பி ஓடியவர்கள் அல்ல. டச்சுப் படையிலிருந்து விலகி ஓடியவர்கள்; ஓடுகாலிகள். இந்த இரண்டிற்குமே வித்தியாசம் இருக்கிறது. இருப்பினும், அவ்வாறு ஓடிய ஓடுகாலிகள், எட்டப்பனைப்போல் எதிரி அணியில் இணைந்துகொண்டு தாங்கள் வேலை செய்த டச்சு நிறுவனத்திற்கு எதிராக செயல்பட்டார்கள். இவர்களை ஒருவகையில் துரோகிகள் என்றுகூட சொல்லலாம். எசமானைக் காட்டிக் கொடுப்பவர்களை அல்லது எசமானுக்கு எதிராக செயல்படுபவர்களை துரோகி என்றுதான் பொதுவாகவே அழைப்பார்கள். அவ்வகையில் எசுதாக்கி டி லெனாய் ஓர் துரோகி ஆவார்.

எசுதாக்கி டி லெனாய் குறித்து ஆய்வாளர் மார்க் டி லெனாயின் ஆய்வுநூல் என்ன சொல்கிறது எனப் பார்ப்போம்: "ஆகத்து 9, பிற்பகல் 4 மணிக்கு, குளச்சலில் டச்சுக் கொடி மூன்றுதடவை உயர்ந்ததையும், அதைத்தொடர்ந்து பெரிய பீரங்கியால் சுடுவதையும் குளச்சல் பாதையில் நின்றுகொண்டிருந்த, 'போர்கா' கப்பல் குழுவின் கடற்படை அதிகாரி யாண் தியூனிசு பார்த்தார். இந்த சைகையைத் தொடர்ந்து மூன்றுமுறை பெரியளவில் வெடிச்சத்தம் இருந்ததால், அதன் அசைவுகள் அலையில் உணரப்பட்ட நிலையில் குளச்சல் பெரும் துன்பத்தில் இருகிறது என தியூனிசு முடிவு செய்தார். வெடிச்சத்தத்திற்குப் பின்பாக பெரும் புகை கோட்டையிலிருந்து வெளியே வந்தது. என்ன நடந்தது?

முக்கிய நிகழ்வுகளில் மிகவும் மதிப்புமிக்கவராய் கோட்டையின் உள்ளே இருந்த யாண் கிறித்தோபால் கார்ட்மேன், அதாவது அங்கிருந்து வெளியேறியவர் எழுதியது என்னவென்றால், பிற்பகல் நான்கு முதல் ஐந்து மணிக்குள் ஆழ்கிடங்கு பந்து ஒன்று தேவாலயத்தில் இருந்த வெடிமருந்து கிடங்கைத் தாக்கியது. அங்கு மிகப்பெரிய வெடிப்பு ஏற்ப்பட்டது. 600 பவுண்ட் வெடிமருந்துகள், பெரும்பாலும் அனைத்து துப்பாக்கிகள், குண்டுகள் வெடித்துச் சிதறின. போர் வீரர்களின் மரத்திலான வீடு எரிந்தது. அனைத்து உணவு வகைகளும் அழிக்கப்பட்டன. திருவிதாங்கினர் 14 சிறிய பீரங்கிளால் கோட்டையை நோக்கி தாக்குதல் நடத்திய நிலையில், முதன்மை ஆலோசகரும் அமைச்சருமான இராமைய்யன் தளவாய் தலைமையிலான மறவர் படை கோட்டையைத் தாக்கியது. அதற்கு, எதிர்த் தாக்குதல் நடக்குமென தியூனிசு நினைத்த நிலையில் அப்படி எதுவும் நடக்கவில்லை. கடல் கொந்தளிப்பும் சூறைக் காற்றும் டச்சுக்

கப்பலை கோட்டைக்கு அருகில் வருவதிலிருந்து தடுத்தது. பெரும்பாலான குளச்சல் பகுதி தீக்கிரையாக்கப்பட்டது என்பது பின்னர் தெரிய வந்தது. கோட்டையின் உள்ளே இருந்த கிணறு பயன்படுத்த முடியாத அளவிற்கு மரித்தப் பிணங்களால் கெட்டுப் போயிருந்தது. மரித்த சடலங்கள் பயங்கரமான துர்நாற்றத்தை பரப்பிக் கொண்டிருந்தது. கோட்டையின் நிலைமை, உண்மையிலேயே சகிக்க முடியாததாய் இருந்தது.

வெடிப்புக்குப் பின், விரைவிலே ஐரோப்பியர் ஒருவர் தன்னை கோட்டை முன்பாக வெளிப்படுத்தினார். அவருடைய பெயர் எசுதாக்கி டி லெனாய். ஆகத்து 2-இல் அவர், கன்னியாகுமரி டச்சு இராணுவத்திலிருந்து ஓடுகாலியாய் திருவிதாங்கூர் மன்னரின் சேவையில் இணைந்து கொண்டார். ஒரு வாரத்திற்குப் பின்பாக, வெளிப்படையாகவே, மன்னருக்கு அவர்மீது முழு நம்பிக்கை ஏற்பட்டதால், அவரை நம்பி, குளச்சலை முழுமையாக சரணடைய செய்யும் வகையில் விதிமுறையுடன் பேச்சுவார்த்தை நடத்தும் பொறுப்பை ஒப்படைத்தார்".

ஆய்வாளர் மார்க் டி லெனாய், எல்லா செய்திகளுக்கும் ஆவணத்திலிருந்து ஆதாரம் கொடுத்து கொண்டு வருகிறார். மேலே கூறியுள்ள கடைசி பத்திக்கு மட்டும் அவர் எந்தவித ஆதாரமும் கொடுக்கவில்லை. திருவிதாங்கூரில் எசுதாக்கி டி லெனாய் பிரபலமாக பேசப்படுகிறார் என்பதால் போரின் இறுதிக் கட்டத்தில், அதாவது, "வெடிப்புக்குப் பின், விரைவிலே ஐரோப்பியர் ஒருவர் தன்னை கோட்டை முன்பாக வெளிப்படுத்தினார். அவருடைய பெயர் எசுதாக்கி டி லெனாய்" என மார்க் டி லெனாய் தனது சொந்த கருத்தை சொல்வது ஏற்கத் தகுந்ததாக இல்லை. இது எப்படி இருக்கிறது என்றால், "சிலுவை மரணத்திற்குப் பின், விரைவிலே யூதர் ஒருவர் தன்னை சீடர்கள் முன்பாக வெளிப்படுத்தினார். அவருடைய பெயர் இயேசு கிறித்து" என்று சொல்வதுபோல் உள்ளது. ஆவணப் பதிவுகளின் அடிப்படையில் நூல்கள் எழுதுபவர்கள் சில வேளைகளில் தங்கள் சொந்த கருத்தையும் சேர்த்துவிடுகிறார்கள் என்பதற்கு மார்க் டி லெனாய் ஓர் எடுத்துக்காட்டு.

ஆன்றனி கிளார்ட், என்.டி. தினகர், ஆர். பிரேம்குமார் வெளிக் கொண்டு வந்திருக்கிற மார்க் டி லெனாயின், "குளச்சல் போர்" நூலில் வேறு எந்தவொரு இடத்திலும் மார்க் டி லெனாய் பெயர்

வெளிப்படவில்லை. அவ்வாறு வெளிப்பட்ட ஒரேயொரு இடத்தில் ஆவண ஆதாரம் எதுவும் குறிப்பிடப்படவில்லை.

ஆகத்து 2, 1741 அன்று எசுதாக்கி டி லெனாய் கன்னியாகுமரி டச்சு கோட்டையிலிருந்து தப்பி ஓடிவிட்டார். அவரை திருவிதாங்கூர் படை வீரர்கள் கைது செய்கிறார்கள். குளச்சல் போர் உச்சகட்டத்தில் இருக்கிறது. மன்னரின் முழுக்கவனமும் குளச்சல் மீது இருக்கிறது. களத்தில் தலையாக, தளபதியாக டியூவன்சாட் நின்று கொண்டிருக்கிறார். 22 ஐரோப்பிய வீரர்கள் அவரோடு இருக்கிறார்கள். இவர்கள் தூத்துக்குடி மற்றும் கன்னியாகுமரி கோட்டைகளில் இருந்து வெளியேறியவர்கள். இந்நிலையில், ஆகத்து 9, 1741 அன்று கைது செய்யப்பட்ட எசுதாக்கி டி லெனாய் குளச்சல் டச்சுவின் கோட்டை முன்பாகத் தோன்றினார் என்பதும், கைது செய்யப்பட்ட ஏழு நாட்களுக்குள் எசுதாக்கி டி லெனாய் என்பவர் மன்னர் மார்த்தாண்ட வர்மாவின் நண்பராக உருமாறிவிட்டார் என்பதும் ஏற்கத்தகுந்ததல்ல.

"பிரபலமான புராண எழுத்தாளர் சங்குணி மேனன் கூற்றுப்படி, மார்த்தாண்ட வர்மா அவருடைய சேவையில் டி லெனாயை இணைத்துக் கொண்டதற்கு காரணம் மன்னராகிய அவரால் நடத்தையை தீர்மானிக்க முடியும் என்பதால் டி லெனாயின் முகத்தைப் பார்த்தவுடன் அவரிடம் பெரிய திறமைகள் இருப்பதை முகத்தில் கண்டார். இந்த புராணக்கதை எந்தவகையிலும் வரலாற்று ஆவணங்களால் நிருபிக்கப்படவில்லை" என மார்க் டி லெனாய் குறிப்பிடுகிறார். எசுதாக்கி டி லெனாயை பார்த்தவுடன் ஏற்றுக் கொண்டார் என்பதெல்லாம் பொய் என மார்க் டி லெனாய் கூறுவதால் மார்க் டி லெனாயின் சொந்தக் கருத்தும் ஏற்கத் தகுந்தது அல்ல.

குளச்சல் வெற்றிக்கு முழுக் காரண கர்த்தாவாக இருந்தவர் தளபதி டியூவன்சாட் என்கிற ஐரோப்பியர். இவர் செர்மனியைச் சேர்ந்தவர். இவர் கன்னியாகுமரியில் உள்ள டச்சு கோட்டையிலிருந்து 25 பிப்ரவரி 1741-இல் வெளியேறியவர். மூன்று நாட்களுக்குப் பின்பாக, திருவிதாங்கூர் வீரர்கள் அவரை ஆய்ரூருக்கு அழைத்து வந்த நிலையில் அவர் அங்கே சிலகாலம் தங்கினார். விரைவில் அவர் மன்னரின் முக்கிய இராணுவ ஆலோசகராகவும் இராணுவத் தரகராகவும் உருமாறினார்.

இராணுவ நிபுணத்துவத்தில் டியூவன்சாட் என்கிற ஒரு நபர் மட்டுமே

தரகராக விளையாடவில்லை. தெய்வத்தின் பூமியில் சிரியன் கிறித்தவர்களைப் போன்று முக்கியமாக உரோமன் கத்தோலிக்க பாதிரியார்களும் இராணுவத் தொழிலாளர் சந்தையில் சமமாகவே விளையாடினர் என்பதனை மார்க் டி லெனாய் பதிவு செய்கிறார். இப்படிபட்ட விளையாட்டுக்கள் மதம் பரப்புவதற்கு வசதியாக இருந்திருக்கிறது.

டியூவன்சாட் என்பவருடன் குளச்சலில் வைத்து நடைபெற்ற இறுதிப் போரில் டச்சுத் தளபதி ரிசித்தல் மரணம் அடைந்தார். இந்த சூழ்நிலையில் குளச்சல் கோட்டைக்குள் இருந்த டச்சுத் துருப்புகள் விரக்தி அடைந்தனர். அவ்வேளையில், "டச்சினர் சரணடைய மறுத்தால் அவர்களை சேதமடையச் செய்வோம்" என செர்சியந்த் கார்த்மேன் கூறினார். டச்சுக் கோட்டை முன்பாக எசுதாக்கி டி லெனாய் தோன்றியதாக கதை சொல்லப்பட்ட அதேஇடத்தில் ஐரோப்பியர் செர்சியந்த் கார்த்மேன் நிற்கிறார். அதற்கு அவர்கள், "நேர்மையற்ற முறையில் பொறுப்பைவிட்டு ஓடியவர்களிடமோ, துரோகிகளிடமோ அன்றி மன்னரோடு நேரடியாகவே பேச்சுவார்த்தை செய்ய விரும்புகிறோம்" என்றனர்.

12 ஆகத்து அன்று காரல் கென்டிரிக் மற்றும் பெர்த்ரம் ஆகிய டச்சுப் பிரதிநிதிகள், அவர்களின் கோரிக்கையை மன்னர் முன்பாக வைத்தனர். அதன்பேரில், கன்னியாகுமரியில் உள்ள டச்சு கோட்டைக்கு ஆயுதங்களுடனும், அவர்களுடைய கொடிகளுடனும் பயணிக்க திருவிதாங்கூர் மன்னர் அனுமதியளித்தார். கோட்டையில் உள்ள வெடிப் பொருட்களை விட்டுச் செல்லும் நிபந்தனையின்பேரில் டச்சுக் குழுவில் காயம்பட்டவர்களை கவனிப்பதற்கும் மன்னர் உறுதியளித்தார்.

13 ஆகத்து 1741 அன்று காலை ஏழு மணியளவில் எஞ்சியிருக்கும் 190 வீரர்கள் கொடிகளுடனும் ஆயுதங்களுடனும் டச்சு வீரர்கள் குளச்சல் கோட்டையை விட்டு கன்னியாகுமரியில் உள்ள டச்சுவின் கோட்டையை நோக்கி கடற்கரை வழியாக பயணித்தனர். குளச்சலை விட்டு 500 அடிகள் எடுத்து வைத்தவுடனே அவர்கள் வழியிலே நிறுத்தப்பட்டு பேங்க்சால் என்கிற துறைமுக அதிகாரியிடம் அனுப்பி வைக்கப்பட்டனர். அவர், அவர்களுடைய ஆயுதங்களை அங்கே ஒப்படைக்க உத்தரவிட்டார். அவர்கள் அதனை கொடுக்க மறுத்ததால் கைதிகளாக அங்கு வைக்கப்பட்டனர்.

அதன்பின்பாக அவர்கள், அரை நிர்வாணமாக கடியப்பட்டணம் கடற்கரை வரை, அதாவது 11 கி.மீ. தூரத்திற்கு நடந்து பயணிக்க நிர்பந்திக்கப்பட்டார்கள். அப்பயணத்தின்போது அவர்கள் தொடர்ந்து தாக்கப்பட்டதால் சோர்வடைந்தது மட்டுமின்றி விரக்தி அடைந்தனர். சூரிய வெப்பத்தில், அரை நிர்வாணமாக அணிவகுத்துச் செல்வது அவர்களுக்குக் கடினமாக இருந்தது. அவர்கள் கடியப்பட்டணம் வந்தவுடனே அவர்களை கொலை செய்வதற்கு மார்த்தாண்ட வர்மாவின் உத்தரவு பெற்ற 5,000 திருவிதாங்கூர் வீரர்கள் கடியப்பட்டணத்தில் கூடினர்.

டியூவன்சாட் சுகமில்லாமல் இரணியல் அரண்மனையில் படுத்திருந்தார். கன்னியாகுமரிக்கு சுதந்திரமாக பயணிக்கும் வகையில் மன்னரின் உறுதிக்குப் புறம்பாக அவருடைய நாட்டு மனிதர்களை கொல்வதற்கு கடியப்பட்டணத்தில் இருக்கும் வீரர்கள் உத்தரவினைப் பெற்றார்கள் என்கிற செய்தி அவருக்கு எட்டியது. அவர்களுக்கு மன்னர் கொடுத்த உறுதிமொழியை அவரே மதிக்காத செய்தி டியூவன்சாட்டை கோபம் அடையச் செய்தது.

கைது செய்யப்பட்ட ஐரோப்பியர்களைக் கொன்றால், ஐரோப்பியர்களுடன் சேர்ந்து பழிவாங்க வேண்டிய நிலை ஏற்படுமென மன்னர் மார்த்தாண்ட வர்மாவை தூதர் வாயிலாக டியூவன்சாட் மிரட்டினார். உடனடியாக மார்த்தாண்ட வர்மா, அவர்களை நன்றாக நடத்தவும், எந்தவித தொந்தரவுமின்றி விட்டுவிடவும் அவருடைய காரியக்காரரர் ஒருவரை உத்தரவுகளுடன் கடியப்பட்டணத்தில் உள்ள வீரர்களிடத்தில் அனுப்பி வைத்தார்.

அதன்பேரில், சிறைபிடிக்கப்பட்ட டச்சினர் மரணத்திலிருந்து தப்பித்தனர். குளச்சலில் காயமடைந்த மற்றும் நோய்வாய்ப்பட்ட 40 வீரர்களை மன்னர் நல்ல முறையில் கவனித்துக் கொள்ள உத்தரவிட்டார். ஐரோப்பிய கைதிகள், இரணியலில் உள்ள ஒரு பழைய வீட்டிற்கு வந்து சேர்ந்தபோது டியூவன்சாட் அவர்களை வரவேற்றார். சாராயம், விலைமகள் மற்றும் மரண அச்சுறுத்தல்கள் மூலம் டியூவன்சாட் அவர்களை திருவிதாங்கூர் படையில் அவர்களை இணையச் செய்தார்.

குளச்சல் போரின் வெற்றிக்கு முக்கியக் காரண கர்த்தா டியூவன்சாட். குளச்சலில் கைது செய்யப்பட்ட ஐரோப்பியர்களைக் கொன்றால்

ஐரோப்பியர்களுடன் சேர்ந்து பழிவாங்க வேண்டிய நிலை ஏற்படுமென திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்ட வர்மாவை டியூவன்சாட் மிரட்டியிருக்கிறார் என்பதில் இருந்து டியூவான்சாட்டின் வீரமும் தேசபக்தியும் ஏறெடுத்துப் பார்க்கத்தக்கதே. டச்சுப் படையிலிருந்து விலகி ஓடுகாலியாக வந்த டியூவன்சாட் என்பவர் ஐரோப்பியர்களுக்காக நின்றார். அதேவேளையில், தன்னை மதிக்காத டச்சுப் படையை தோல்வியடையவும் செய்தார்.

குளச்சலில் கைது செய்யப்பட்ட ஐரோப்பியர்களிடம் டியூவன்சாட் பேசுகிறபோது, "போரில் நீங்கள் தோல்வி அடைந்தது பரிதாபத்திற்கு உரியதாயினும் நான் மகிழ்ச்சியாக இருப்பதற்கு நீங்கள் இன்னும் உயிரோடு இருப்பதே காரணம். நான் பகை உணர்வால் மதிப்பிற்குரிய நிறுவனத்திற்கு எதிராக எதுவும் செய்யவில்லை எனினும் சிறிய மகிழ்விலும் கசப்பான உணர்வு என்னவென்றால் பொதுவான வீரர்களை அயோக்கியர்களாக மற்றும் வெறுக்கத்தக்கவர்களாக சில டச்சு அதிகாரிகள் எங்களை நடத்திய விதம்தான்" என்றார்.

ஐரோப்பியன் டியூவன்சாட்டிற்கு இருந்த ஐரோப்பிய உணர்வானது தமிழர்களுக்கு இருக்கிறதா? அந்நிய நாட்டிலிருந்து வந்த அவரால் திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்ட வர்மாவை மிரட்டி ஐரோப்பியர்களை காப்பாற்ற முடிகிறது. 'கடவுளின் பிள்ளைகள்', 'இயேசுவின் பிள்ளைகள்', 'அல்லாவின் பிள்ளைகள்' என பேசிக் கொள்பவர்களின் சிந்தனையில் சாதி வெறி முளைத்து நிற்கிறது. அதனால் ஒவ்வொருவரும் அவரவர் சாதிப் புகழைப் பாடுவதிலும், பேசுவதிலும், உருவாக்குவதிலும் நேரத்தை செலவு செய்வது மட்டுமின்றி இன்னொரு சாதியை எழுத்துமூலம் அடிமைப்படுத்த முயலுகின்றனர். சாதிய வன்மத்தால் தமிழர்கள் ஒன்றுபடப் போவதில்லை.

கைதியாக சிறைபிடிக்கப்பட்ட எசுதாக்கி டி லெனாய் குளச்சல் போருக்குப் பின்பாக திருவிதாங்கூர் படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். டியூவன்சாட் மே 1744-இல் மரணம் அடைகிறார். அப்பொழுது எசுதாக்கி டி லெனாயையும் சேர்த்து 40 ஐரோப்பியர்கள் திருவிதாங்கூர் படையில் இருக்கிறார்கள். டியூவன்சாட் இடத்தில் தளபதியாக மார்த்தாண்ட வர்மாவால் எசுதாக்கி டி லெனாய் நியமிக்கப்படுகிறார்.

'குளச்சல் போர்' நடக்கிறபோது எசுதாக்கி டி லெனாய் கன்னியாகுமரியில் உள்ள டச்சுப் படையிலிருந்து ஓடுகாலியாய் ஓடிவிடுகிறார். அவர் திருவிதாங்கூர் படையினரால் கைதியாக சிறைபிடிக்கப்படுகிறார்; கைதியாக வைக்கப்படுகிறார். அவருக்கும் குளச்சல் போருக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. டி லெனாயை குளச்சலில் வைத்து முக்குவர்கள் கைது செய்தார்கள், தேவசகாயம் பிள்ளை கைது செய்தார், அனந்தபத்மநாபன் கைது செய்தார், குமார உதய மார்த்தாண்டன் நாடார் கைது செய்தார், பொன்பாண்டித் தேவர் கைது செய்தார், மார்த்தாண்ட வர்மா கைது செய்தார் என்பதெல்லாம் சாதிப் பாசத்தால் வெளிப்பட்ட உச்சக்கட்டப் பொய்கள். கட்டுக் கதைகளும், கற்பனைக் குதிரைகளும் வரலாற்றை வியக்க வைக்கின்றன.




**திருவிதாங்கூர் படைத் தளபதி டியூவன்சாட்**

## புரட்டிய படைப்புகள்

*1. தொம்மாந்திருமுத்து, 'வேத சாட்சியின் துயரமான பாடுகள்', மறைசாட்சி தேவசகாயம் பிள்ளை புனிதர் பட்டப் பணிக்குழு, நாகர்கோவில். முதல் பதிப்பு -2010. (ஓலைச் சுவடி 1752).*

2. V. Nagam Aiya, Dewan Peisheear, Travancore, 'The Travancore State Manual', Travancore Government Press, Trivandrum, 1906.

*3. பொ. காசி உதயம், 'பகவான் வைகுண்ட சுவாமிகள் வரலாறு', தாசு சன் அச்சகம், கட்டிமாங்கோடு, 1966.*

4. Francis Day, Civil Surgeon Britich Coachin and Medical Officer to the Government of the Highness the Raja of Coachin, 'The Land of Permauls or Cochin, its past and its present', Printed at Gantz Brothers, Rundall's Road, Vepery, 1863.

*5. சி.வி. இராமன் பிள்ளை, 'மார்த்தாண்ட வர்ம்மா', சாகித்திய அகாதெமி வெளியீடு, புது தில்லி, 1891.*

6. William Logan, Collector and Magistrate of the District, and Fellow of the University of Madras, "Malabar', Printed at the Charithram Publications, Trivandrum, 1981.

*7. முனைவர் ப. சர்வேசுவரன், பதிப்பாசிரியர், 'ஓட்டன் கதை - நாட்டுப்புற வரலாற்றுக் கதைப் பாடல்', மனோ வெளியீடு, மதுரை, 1982.*

8. Mark De Lannoy, 'A Dutchman in the service of the King of Travancore', Journal of Kerala Studies, Vol. 13, 1986.

9. Maclean's Manual of the Administration of the Madras Residency, Volume I, Containing the principal articles of the Manual arranged so as to conform to the order of the subjectd in the Yearly Presidency Administration Report, Edited by C.D. Maclean, Asian Eductional Services, New Delhi - 1987.

*10. திரவியம், 'டச்சுப்படை வென்ற குமார உதய மார்த்தாண்டன் நாடார்', குமார உதயமார்த்தாண்டன் பதிப்பகம், சென்னை, அக்டோபர் 1987.*

11. Mark De Lannoy, ‘The Kulasekhara Perumals of Travancore’. History and State Formation in Travancore from 1671 - 1758, CNWS Publication, Leiden Unversity, the Netherlands, 1992.

12. குமாரசெல்வா, ‘உக்கிலு’, காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில், திசம்பர் 1992.

13. Dr. G. Krishnan Nadar, Palghat Government Victoria College, History professor, ‘Socio-Economic Background of the Military History of Travancore’, D.R. Karuna Publishers, Enchakkal, Thiruvananthapuram, 1993.

14. அமலகிரி அந்தோனிமுத்து, ‘வேதசாட்சி தேவசகாயம்பிள்ளை விரிவான வரலாறு’, நாஞ்சில் அச்சகம், நாகர்கோவில், இரண்டாம் பதிப்பு 1996.

15. கோ. கேசவன், ‘கோயில் நுழைவுப் போராட்டங்கள்’, சரவணா பாலு பதிப்பகம், விழுப்புரம், 1997.

16. கே.பி. வரதராசன், ‘குளச்சல் போர்’, அனந்தன் பத்மநாபன் அறக்கட்டளை, தச்சன்விளை, குமரி மாவட்டம், அக்டோபர் 1999.

17. முனைவர் பத்மநாபன், ‘குளச்சல் வரலாற்று சிறப்புமிக்க துறைமுகம்’, கட்டுரை, ஆய்வுக் களஞ்சியம், நாகர்கோவில், சனவரி 2000.

18. பொன்னீலன், ‘தெற்கிலிருந்து’, மக்கள் வெளியீடு, உனிசு அலி சாகிப் தெரு, எல்லிசு சாலை, சென்னை, 2001.

19. Beatificationis seu Declarationis Martyrll Servi Dei, 'Lazari v.d. Devasahayam Pillai, Christifidelis Laici in Odium Fidei, Uti Fertur, Interfecti (14 Jan. 1752), March 2011.

20. பிரிட்டோ வின்சென்ட் சே.ச., ‘தூய சவேரியார் கடிதங்கள்’, நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம், தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை, திசம்பர் 2002.

21. அ.கா. பெருமாள், ‘வேதசாட்சி தேவசகாயம் பிள்ளை வரலாறு’ யுனைடெட் விரைட்டர்சு, சென்னை, திசம்பர் 2004.

*22. குளச்சல் வரதராசன், 'குளச்சல் - ஓர் வரலாற்று ஆய்வு', ஆராய்ச்சி மணி வெளியீடு, குளச்சல், 2005.*

23. Dr. A. Raja Thangam, Reader in History, Nesamony Christian College, Marthandam, 'Captain Delannoy and Travancore', Rajesh Publishers, Nagercoil, 2005.

*24. செ. தங்கமணி, 'கன்னியாகுமரி மாவட்டம் அரசியல் - சமூக வரலாறு', கன்னியாகுமரி மாவட்ட வரலாற்றுப் பேரவை வெளியீடு, சென்னை, நவம்பர் 2005.*

*25. பொ. இராமச்சந்திரன் மற்றும் நா. திருநாவுக்கரசு, 'மறக்கப்பட்ட மாவீரன் பொன்பாண்டித் தேவர் வீர வரலாறு', அருள்மிகு முப்பிடாரி அம்மன் திருக்கோயில் அறக்கட்டளை, பாலமார்த்தாண்டபுரம், 2006.*

*26. வறீதையா கான்சுதந்தின், 'முக்குவர் - வரலாறு, வாழ்வியல், எதிர்காலம்', குளச்சல் போர் நினைவுக் கருத்தரங்குத் தொகுப்பு, நெய்தல் வெளி, நாகர்கோவில், திசம்பர் 2010.*

*27. குமரி ஆதவன், 'தெற்கில் விழுந்த விதை', தமிழன் பதிப்பகம், குமாரபுரம், திசம்பர், 2010.*

*28. முனைவர் பி. சர்வேசுரன் மற்றும் முனைவர் எம். இம்மானுவேல், 'மாவீரன் தளபதி அனந்தபத்மநாபன்', பண்பாட்டு வரலாற்று மொழியியல் உள்நாட்டு ஆராய்ச்சி மையம், நாகர்கோவில், 2011.*

*29. வி. மேரி யாண், 'வேதசாட்சியான தேவசகாயம்பிள்ளை', சேவை நிலைய வெளியீடு, திருவனந்தபுரம், சூலை 2012.*

*30. அ.கா. பெருமாள், 'தென்குமரியின் சரித்திரம்', சுதர்சன் புத்தகம், நாகர்கோவில், செப்டம்பர் 2012.*

*31. கோயம்புத்தூர் பார்யோன், 'மறைசாட்சி தேவசகாயம் நாயர் (பிள்ளை) - தெரிந்த பொய்கள், தெரியாத உண்மைகள்', 22 நவம்பர் 2012.*

*32. அருட்சகோதரி யோ. ரோசல்லா, 'இலக்கியங்கள் போற்றும் தியாகச் செம்மல் தேவசகாயம் பிள்ளை', நல்லாயன் பதிப்பகம், சென்னை, திசம்பர் 2012.*

33. தினத்தந்தி நாளிதழ், நாகர்கோவில் பதிப்பு, நாகர்கோவில், 17 ஏப்ரல் 2013.

34. முனைவர் பத்மநாபன், 'ஆசிரியர் உரை', கட்டுரை, ஆய்வுக் களஞ்சியம், நாகர்கோவில், சூலை 2013.

35. அ. நாராயணன் நாடார், ம. அந்தோணி நாடார், சா.வா. செல்வன் நாடார், 'டச்சுப் படையை வென்ற தமிழன் - இந்திய சுதந்திரப் போராட்ட வீரன் - மாவீரன் அனந்த பத்மநாபன் நாடார்', நாடார் மக்கள் சக்தி, திருநெல்வேலி, சூலை 2013.

36. பாரேம்மாக்கல் கோவர்ணதோர், 'ரோமாபுரி யாத்திரை', தமிழில் யூமா வாசுகி, சந்தியா பதிப்பகம், சென்னை 2013.

37. 'கடலோரம்' இதழ், நாகர்கோவில், 30 சனவரி 2015.

38. ராம், 'ஊர் சுற்றிப் பறவை', செ.இ. பதிப்பகம், நாகர்கோவில், 2015.

39. குமரி மைந்தன், 'குமரி மாவட்டக் கலவரத்தில் சங்கப் பரிவாரங்களின் பங்கு', தமிழக மக்கள் பொருளியல் உரிமைக் கழகம், மதுரை, செப்டம்பர் 2015.

40. குமரி மைந்தன், 'பாழ்பட்டுக் கிடக்கும் தமிழகக் கடற்கரை', தமிழக மக்கள் பொருளியல் உரிமைக் கழகம், மதுரை, செப்டம்பர் 2015.

41. தோப்பில் முகம்மது மீரான், 'சாய்வு நாற்காலி', காலச்சுவடு பப்ளிகேசன் (பி) லிட், நாகர்கோவில், ஏழாம் பதிப்பு, சூலை 2017.

42. ஆன்றனி கிளாரட், என்.டி. தினகர் மற்றும் ஆர். பிரேம்குமார், 'குளச்சல் போர்', நகர்வு வெளியீட்டகம், மேல்மிடாலம், ஆகத்து 2017.

# குளச்சல் போர்



கட்டுக் கதைகளும்
கற்பனைக் குதிரைகளும்

திருத்தமிழ்த்தேவனார்



## உள்ளே...

- டி லெனாயை கைது செய்தவர் முக்குவர்
- டி லெனாயை கைது செய்தவர் தேவசகாயம் பிள்ளை
- டி லெனாயை கைது செய்தவர் அனந்தபத்மநாபன் நாடார்
- டி லெனாயை கைது செய்தவர் குமார உதயமார்த்தாண்டன் நாடார்
- டி லெனாயை கைது செய்தவர் பொன்பாண்டித் தேவர்
- டி லெனாயை கைது செய்தவர் மார்த்தாண்ட வர்மா
- டி லெனாயை கைது செய்தவர் யார் ?

